# PANCHATANTRAM

with
an English Translation and a Glossary
containing meanings to difficult
words and phrases.

**INTENDED FOR THE USE OF STUDENTS AND OTHERS PREPARING FOR THE DIFFERENT EXAMINATIONS.**




PRINTED AND PUBLISHED BY

W. PUSHPARATHA CHETTY & CO.,

K. R. PRESS,

289, Thumboo Chetty Street,

MADRAS.

1908.

கடவுள் துணை.

# பஞ்சதந்திரம்.

# PANCHATANTRAM.

## வரலாறு.—INTRODUCTION.

கல்விப் பொருளினுஞ் செல்வப் பொருளினுங் குறைவில்லாதவர்களுக் குறைவிடமாயிருக்கிற பாடலிபுரமென்னு மொருபட்டண முண்டு. அந்தப் பட்டணத்திற் சகல சுகுணங்களோடுங் கூடியிருக்கிற சுதரிசன னென்னும் அரச னொருவ னிருந்தான். அந்த அரசன் தன்பிள்ளைகள் படியாமல் மூடர்களா யிருக்கிறதைக்கண்டு, வெகு விசனத்தோடு மாலோசிக்கத் தொடங்கினான். கல்வியுந் தர்ம குணமு மில்லாத பிள்ளைக ளிருந்தாவதென்ன? பால் கொடாத வெருமைகளைக் காப்பாற்றினாற் பலனுண்டா? வேதசாஸ்திர மறிந்தவனா யொரேபிள்ளை யிருந்தாலு மவனாலே குடும்பமெல்லாஞ் சுகமடையும். இப்படிக்கில்லாத பிள்ளைகள் கர்ப்பத்திலே யழிந்தாலும், அழியாவிட்டாற் பிறந்தவுடனே இறந்தாலும் போகிறது நல்லது. குலத்தி லயோக்கியமான பிள்ளை இருக்கலாகாது. ஜன்மாந்தர புண்ணியத்தினாலே இம்மை மறுமைக்குச் சுகங்கொடுக்கிற புத்திரன் பிறக்கிறான். பாபத்தினாற் குலத்தைக் கெடுக்-

---

There was a city by the name of Patalipuram which was the residence of such as were rich in the acquisition of learning and wealth. In that city lived a king endowed with every noble quality, named Sutharisanan. His heart being affected with the condition of his sons who lived like dunces without education, he began to consider thus:—

What benefit is there in children who are neither learned nor virtuous? Of what use is the feeding of a buffaloe that never gives milk? If there be but a single son possessing a knowledge of the vedas and shastras, he will be a source of comfort to the whole family Rather than having a son without this qualification, it would be better either if he be abortified in the fœtus or be dead as soon as was born. An unbecoming son is a discomfort to the family. As the result of the virtue in a former birth a child who is productive of happiness both in this world and the

கிற புத்திரன் பிறக்கிறான். மேலு மிந்தப் பிள்ளையைப் பெற்றவர்க ளென்னதவஞ் செய்தார்களோவென்று கண்டோர் சொல்லும்படி நடக்கிறவ னல்லவோ பிள்ளையென்று தனக்குள்ளே யாலோசித்துப் பெருமூச்சுவிட்டு, பின்பு சபையைப் பார்த்து, "இளமையுஞ் செல்வமும் ராஜசமு மறிவில்லாமையுமாகிய இந்த நான்கினு ளொன்றுதானே கேட்டுக்கெல்லா மேதுவாகும். இந்த நான்கு மொருவ னிடத்தி லிருந்தா லவ னென்னபாடு படான்? பிள்ளை யெண்ணிக்கைக்குப் பிறந்து துன்மார்க்கர்களா யிருக்கிற வென் பிள்ளைகளுக்கு நீதி சாஸ்திரோபதேசத்தினால் எந்த மகாபுருஷன் மறுஜனனம் வரப்பண்ணுவான்?" என, அப்போது சகல நீதிசாஸ்திரங்களிலும் வல்லவனாகிய சோமசன்மா வென்பவனெழுந்து, "இவர்களுக்குச் சமான மான் வறிவையுடையவர்க ளிவ்வுலகத்தி லில்லையென்று சொல்லும்படி நான் ஆறுமாதத்திற் செய்யமாட்டுவேன்; அதுவரைக்கும் நீர் நாளை எண்ணிக்கொண்டிரும்" என்று சபதம்பண்ணினான். அதைக்கேட்டு, நடுக்கடலில் திசை தப்பி மயங்கு மாலுமிக் கோர்துறை தோற்றினாற்போல அரசன் மிகவு மனமகிழ்ந்து அவனுக்கு உபசாரஞ்செய்து, தன்னுடைய பிள்ளைகளை யவன்வசத்தி லொப்பித்தான்.

---

world to come is born, while that of sin is a wicked child who is the canse of ruination to the family. He is the son who by his conduct gains the applause "what great penance had his parents done to beget such a son as this?" Having thus meditated for a while, the king heaved a sigh and addressed the assembly as follows:—

"Youth, wealth, pride [arrogance] and ignorance are each of them a source of ruin; and what will be the wretchedness of him in whom all these four are combined? Is there to be found a great man who shall, by instruction of Niti-Shastras be able to regenerate my sons who are born merely for a name and wander in the paths of error?"

When thus addressed, there stood up one, called Somasanma, well versed in the principles of Niti-Shastras, who assured him "I will bind myself to make them in the space of six months to surpass all the learned in the world: until that time be counting the number of days."

Hearing this, the king rejoicing, as when a pilot who has lost his way in the midst of the sea happens to come in sight of a port, expressed his obligations to Somasanma and delivered his sons to his charge.

சோமசன்மா வுடனே யந்தப்பிள்ளைகளைத் தன்வீட்டுக் கழைத்துக் கொண்டுபோய்க் கருப்பஞ் சாற்றைக் காய்ச்சி யொரு சர்க்கரைக் கட்டியாகத் திரட்டினாற்போல, நீதி சாஸ்திரங்களைப் பஞ்சதந்திர கதையாகக் கற்பித்து, ராஜ குமாரர்களுக்குச் சொல்லத் தொடங்கினான்.

சோமசன்மா "ஓ ராஜகுமாரர்களே! உங்களுக்கு வேடிக்கையாகச் சில கதைகள் சொல்லுகிறேன், கேளுங்கள்" என்று சொல்ல, "அதென்ன கதை" என்றார்கள். "பஞ்சதந்திர கதை" என்று சொன்னான். "பஞ்சதந்திர மென்ப தென்ன? தெரியச் சொல்லவேண்டும்" என்றார்கள். அதற் கவன், "அவை மித்திரபேதம், சுகிர்லாபம், சந்திவிக்கிரகம், அர்த்தநாசம் அல்லது லப்தஹானி, அசம்பிரேக்ஷிய காரியத்துவம் என்னு மைந்தாம். அவைகளுண் மித்திர பேதமாவது சிநேகத்தைக் கெடுத்துப் பகையுண்டாக்கல்; சுகிர்லாபமாவது தங்களுக்குச் சமானமானவர்களோடு கூடிப் பகையில்லாமல் வாழ்ந்திருக்குதல்; சந்திவிக்கிரகமாவது பகைவரையடுத் துறவுசெய்து வெல்லுதல்; அர்த்தநாசமாவது தன் கையிற் கிடைத்த பொருளை யழித்தல்; அசம்பிரேக்ஷிய காரியத்துவமாவது காரியத்தைத் தேற விசாரியாமற் செய்தல்" என்று

---

Somasanma, soon after, took the princes home, andbegan to teach them the principles of Niti-Shastras in the form of *Panchatantra-katai* like the juice pressed out of the sugar-cane boiled and crystallized into a lump.

"Attend O princes!" said Somasanma, "I will, for your amusement, relate some stories."

"What stories are they?" asked the princes. He replied "Those are *Panchatantra-katai*" "Please explain to us," they said, "what *Panchatantram* is." He replied, "It means five arts, as follows:—*Mitrrabatham*, *Sugirlabam*, *Santhi-Vikkrakam*, *Artanasam* or *Laptahami*, and *Asampraikshya-Kariattuvam*. Of these, *Mitrrabatham* means the art of dissolving the friendship of two persons and creating enmity between them; *Sugirlabam* means the art of contracting friendship with equals and living peaceably with them; *Santi-Vikkrakam*, the art of conquering an enemy by means of an affected friendship; *Arthanasam*, the art of losing what is in one's possession; and *Asampraikshya-kariattuvam*, the art of doing a thing without circumspection."

சொன்னான். ராஜகுமாரர்கள், "ஐயா! அந்தக் கதைகளை யெங்களுக்கு விளங்கச் சொல்லவேண்டும்" என்றார்கள். சோமசன்மா, உங்களுக்கு "மங்கள முண்டாக" என் றாசீர்வதித்துச் சொல்லத் தொடங்கினான்.

---

முதலாவது

## மித்திரபேதம்.

## MITHRABATHAM.

ஒரு காட்டி லொரு சிங்கமு மெருதுங் கூடி மிகவு மொருமையாக வாழ்ந்திருந்தன. அந்தச் சிநேகத்தைக் கோட்சொல்லுதலு முலோபகுணமு முள்ள வொருநரி வந்து கெடுத்ததென்று சொல்ல, ராஜகுமாரர்கள் "அதெப் படி" என, சோமசன்மா சொல்லத் தொடங்கினான்:—

"தென்னாட்டிலே மகிழாருப்பிய மென்னும் பட்ட ணத்தில் வர்த்தமான னென்றொரு வர்த்தக னிருந்தான். அவனுக்கு வெகுபணமிருந்து மின்னுஞ் சம்பாதிக்கவேண் டுமென்கிற வாசையினாற் பின் வருகிறபடி யாலோசிக்க லானான். யாதொன்று சம்பாதிப்ப தருமையோ அதைச் சம்பாதிக்கவேண்டும்; சம்பாதித்ததைக் காப்பாற்றவேண் டும்; காப்பாற்றினதை விர்த்திபண்ணவேண்டும்; விர்த்தி பண்ணினதைத் தானு மனுபவித்து உத்தம பாத்திரத்திற் செலவழிக்கவேண்டும்; காப்பாற்றாத திரவியம் நாசமா

---

"Sir," said the princes, "please clearly relate to us these stories." Somasanma, having blessed them began to relate as below:—

In a certain forest, there lived a lion and a bull, in great intimacy which was interfered with and destroyed by a slanderous and envious jackal. On the princes inquiring how that was, Somasanma began to narrate thus:—

In the southern region is a city called Makizharnpiam where lived a merchant named Vartamanen, who, though possessed of abundant riches, yet moved by a desire to acquire more, meditated thus:—

What is difficult of acquisition should be obtained; what is obtained should be taken care of; what is taken care of should be improved; and what is improved should be enjoyed, and spent in charity to persons of high moral excellence; for, pro

கும்; விர்த்திபண்ணாதது குறையும்; தானு மனுபவித்துச் சற்பாத்திரத்திற் செலவழியாதது வீணாகுமெனச் சாஸ்திரமிருக்கிறதினாலும், மேலு மின்பமும் புண்ணியமுங் கீர்த்தியும் மனிதருக்குள்ளே பெருமையு முறவும் நினைத்தது முடித்தலும் யாருக்குண்டு? திரளாகப் பணங் குவித்தவர்களுக்கே யுண்டு; இல்லாதவர்க ளுலகத்திலே நடைப்பிண மாவார்க ளாகையினாலும், மேன்மேலுஞ் சம்பாதிப்பதே யோக்கியமென் றாலோசித்துக் கொண்டு, தன்னிடத்திலிருக்கிற சரக்குகளை வண்டியிலேற்றி யதிற் சஞ்சீவகன் நந்தகனென்னும் பெயரையுடைய விரண்டெருதுகளைப் பூட்டி நடத்திக்கொண்டு தேசாந்தரம் போனான். போகும்போ தொருநாள் நெருங்கிய காட்டிலே மிகுந்த பாரத்தினாற் சஞ்சீவகனென்கிற வெருது காலிடறி விழுந்து நொண்டியாயிற்று. அப்போது வர்த்தமானன் அந்த எருதுக்குப் பதிலாக வேறோ ரெருதை வண்டியிற் கட்டியோட்டிக்கொண் டவ்வெருதுக்கு ஓராளைக் காவல்வைத்துப் போனான். பிற கந்தச் சேவகன் வர்த்தகனிடத்துக் கிரண்டொருநாட் கழித்துப்போய் அந்த வெருது செத்துப்போயிற் றென்று பொய் சொன்னான். காட்டில் விடப்பட்ட எருதோ, ஆயுசு பலத்தினாற் பிழைத்துப் புல்லு முதலாகிய மேய்ச்சலாலே மிகவும் பெருத்துக் கொழுத்

---

perty, not taken care of, wasteth of itself; that which is not improved, diminishes; and that which is neither enjoyed nor given for charitable purposes, is useless. Such are the sentiments of the Shastras.

To whom do pleasure, merit, fame, honour, important connexions and enterprizes belong? It is only to such as have accumulated riches. But the poor in this world, are mere walking skeletons. Concluding thus, that it behooved one to be continually making acquisitions, the merchant loaded a cart with the articles in his possession, yoked to it two bulls, called Sunjevakan and Nantakan, and drove them on to foreign countries.

One day, as he was driving through a thick wood, the bull Sunjevakan, pressed by the load, stumbled down and became lame. Then Vartamanen yoked to the cart another bull in his stead, and left him in charge of a servant, who, after a day or two, joined the merchant, and falsely represented that the bull was dead. However, the bull that was left in the forest, being destined to live long, recovered and grew plump and fat by grazing

தொடிந்த காலுங் கூடி யந்தக் காட்டிலே யதேச்சையாகத் திரிந்துகொண் டிருந்தது. அப்படி யிருக்கையில், காட்டில் சஞ்சரிக்கிற பிராணிகளுக்கெல்லாம் ராஜ்ய பட்டாபிஷேகச் சடங்குக ளில்லாமல் தன் வல்லமையினு லிராஜத்துவத்தை யடைந்திருக்கிற சிங்கமானது தன் பராக்கிரமத்தாற் சம்பாதிக்கப்பட்ட ராஜ்யத்தைச் சுகமாக வனுபவித்துக்கொண்டிருந் தொருநாள் தாகமெடுத்துத் தண்ணீர் குடிக்க யமுனை யாற்றங்கரைக்குப் போகும்போ தங்கே சடிதியி லென்றைக்குங் கேட்டறியாத பேரிடி முழக்கம் போலு மந்த ரிஷபம் முக்காரம்போட்ட தொனியைக் கேட்டுத் திடுக்கிட்டு, இதேது புதிதா யிருக்கிறதென்று பயந்து நடுநடுங்கித் தண்ணீர் குடியாமற் சும்மா வசைவற நின்றுவிட்டது. அப்போ தவ்விடத்திலிருந்த சிங்கத்தினுடைய பிரதானமந்திரி குமாரர்களாகிய கரடகன் தமனகனென்கிற நரிக ளிரண்டு மிந்த வதிசயத்தை யறிந் தொன்றுக்கொன்று பேசத் தொடங்கின.

தமனகன் கரடகனைப்பார்த்து, "நம்முடைய வரசன் தண்ணீர்க்குப் போய்க் குடியாம லேன் சும்மா நிற்கின்றான்?" என, கரடகன் "அதை விசாரிக்கிறதனால் நமக்காவதென்ன? இரை யகப்படுமா? பெருமை யுண்டாகுமா? கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்? சும்மாவிரு;

---

upon grass and other vegetables. His broken leg also being restored, he wandered in the forest at pleasure.

At this time, there lived in the forest, a lion enjoying, over all the beasts of the forest, a dominion, acquired by a strength of his own arm, without any coronation or ceremony of anointing. One day, the lion, being thirsty, went to the river Jumna, to drink of its waters, when, on a sudden, hearing the bellowing of the bull, a noise never heard before, and which to him appeared as dreadful as the roaring of thunder, was agitated with fear and stood trembling, and motionless, thinking what this strange thing could be.

Whereupon two jackals, by name Karadakan and Tamanakan, the sons of the minister of this lion, observing his strange position, began to converse with each other as follows:—

"How is this," says Tamanakan to Karadakan "that our Raja having gone to drink water, has not drunk any but stands quiet?" "What will it avail us," replied Karadakan, "if we enquire into it?" Shall we get food or greatness? Of what use is country-news to a frog in the well? Be quiet, for he who at-

தனக்குத் தகாத காரியத்தைச் செய்கிறவன் கடாவிய வாப்பைப் பிடுங்கின குரங்கு பட்டபாடு படுவான்" என்று சொல்ல, "அதென்ன?" என்று தமனகன் கேட்க, கரடகன் சொல்லுகின்றது:—

"மகததேசத்தி லிருக்கின்ற சுதத்தனென்போ னொருவன் கோயில் திருப்பணிக்காகக் கொண்டுவந் தறுக்கவிட்ட மரங்களில் வாட்காரன் பிளக்கும்படி முளைகளடித்துவிட்டுப்போன வொருமரத்தின்மே லந்தக்கோயில் நந்தவனத்தி லிருக்கின்ற குரங்குகளி லொன்றுவந் துட்கார்ந்தது. அது வம் மரப்பிளப்பி லடித்த முளையை யசைத்துப் பிடுங்கினவுடனே பிளப்பு நெருங்கி யுடல் நசுங்கி யிறந்தது. ஆதலால் தனக்குத் தகாத காரியத்தைச் செய்தால் யார்க்கும் பிராணசேதம் வரும்" என்று சொல்லி, "நேற்று நாந்தின்று மிகுந்திருக்கின்ற இரையைத் தின்று சுகமே யிருப்போம் வா" என்று கரடக னழைத்த பின்பு, தமனகன் கரடகனைப் பார்த்து "சுவாமிகாரியஞ் செய்யாம லிரை தேடுகிறதையே பெரிதாக நினைக்கலாமா? ஒருவன் மித்திரர்களுக் குபகாரமுஞ் சத்துருக்களுக் கபகாரமும் பண்ணவேண்டும்; அதற் கிராஜ சேவையே தக்கது; மேலும் ராஜாவை யடுத்திருக்கையில் வெகு சனங்க

---

tempts at a thing that does not belong to him, suffers as did the monkey who drew out the fastened wedge."

"How is that?" demanded Tamanakan; and Karadakan replied as follows:—

In the country of Magada, one Suthattan had some timbers sawn for the building of a Temple; the sawyer having opened a timber half way, drove a wedge into the slit and went away. On that piece of timber one of the monkeys living in the flower garden of that temple, came and sat down, with a portion of his body within the slit. But the monkey not observing this, attempted to draw out the wedge, and as he succeeded, the timber closed and he was crushed to death. Wherefore he who attempts to do a thing that does not concern to him shall lose his life.

So saying Karadakan invited Tamanakan to go and eat the food they had left yesterday and to be comforted.

"Is the pursuit of food," said Tamanakan, "more important than the care for the affairs of his royalty, the Lion?" One should do good to friends, and evil to enemies and the service of the Rajah is conducive to this. The benefit of royal service is the

ளுக்கு நன்மை செய்வதே ராஜசேவைக்குப் பிரயோசன மாம்; நன்மை செய்வதற் கிடமில்லாவிட்டா லுயிர்பிழைத் திருப்பதனா லென்ன? காக்கையுங் காகபலியையு மெச்சிலையு மலத்தையுந் தின் றாயிரவருஷம் பிழைத்திருக்கிறது; நாயும் பசையில்லாத வெள்ளெலும்பைக் கவ்விக் கடித்துப் பல்லசைந்தும் பசி தீராமற் சந்தோஷத்தை யடைகிறது; மேலு மது யஜமானன்கையிலிருக்கிற வொரு கவள மெச்சிலைப் பார்த்துக் காலில் விழுந்து, வயிற்றை யெக்கிக்கொண் டெளிய முகத்தைக் காட்டி முகத்தைப் பார்த்து வாலைக் குழைத்துக் கெஞ்சிக் காத்துக் கிடந்து கொஞ்ச மெச்சிலை வாங்கித் தின்னும். யானையோ, பாகனைப் பாராமலு மதிக்காமலு மவன் வேண்டிவேண்டி வலியக்கொடுக்க, கர்வத்தோடு வாங்கி நாயைக்காட்டிலு மாயிரம்பங் கதிகஞ் சாப்பிடும்; சிங்கம் பசியினாற் சங்கடப்படும் போது, நரி சமீபத்திலிருந்தாலு மதை யசட்டை பண்ணி யானையையே கொல்லும்; ஆதலா லுலகத்தில் யார் புகழோடு சீவிக்கிறார்களோ அவர்களே பாக்கியவான்கள்; சிறுகுழிகள் கொஞ்சந் தண்ணீரால் நிறையும்; எலியின் சேரங்கை சில தானியத்தால் நிரம்பும்; அப்படிப்போல மூடன் இதாகிதந் தெரியாமற் கொஞ்சத்திலே சீவனம் பண்ணுவான்; அவனுக்கும் பசுவுக்கு மென்ன பேதம்? ஆகையால் ராஜகாரியம் பார்த்துப் பெருமையுடனே சீவிக்

---

opportunity which one has of doing good to many; otherwise, of what use is existence? The crow lives a thousand years, feeding upon the rice-offerings, filth, and human excrement. The dog is pleased, though not appeased of its hunger, with gnawing the sapless white bone. It further, gazing at a handful of food held by its master, falls prostrate at his feet, contracts its belly, makes a beggarly face, looks at the face of its master, wags its tail, begs and waits upon him for a little refuse of food; but the elephant pays no regard to its keeper, nor does it wait upon him to be fed but takes with pride what its keeper earnestly offers and eats a thousand times more than the crouching dog. The lion when pinched by hunger despises a jackal for prey though at hand, and kills only the elephant. So those are happy who preserve their dignity and live honorably. Small holes are filled with a little water, the palm of a rat's hand is filled with few grains; just so a fool lives on a little, not knowing what is good or bad. What difference is there between him and an animal? Therefore it is better to be engaged in royal service to live honorably.

கிறதே நல்லது" என்றிப்படிச் சொல்லக்கேட்டு, கரடகன் தமனகனைப் பார்த்து "நல்லது, இந்த யோசனைகளுக்கு மிந்தப் பேச்சுகளுக்கு மிப்போது நாம் ராஜகாரியத்தி லிருக்கவில்லை, இரை தேடுகிற காரியத்தி லிருக்கிறோம்; அப்படி யிருக்க, நீ யேன் வீணான மனோராச்சியம் பண்ணுகிறாய்? முடவன் கொம்புத்தேனுக் காசைப் பட்டாற் கிட்டுமோ?" என்றிகழ்ந்து சொல்ல, தமனகன் "நல்லது இருக்கட்டும், பிரதானியுங் காலத்தினா லப்பிரதானியாகிறான்; தன் முயற்சியாலுங் குணத்தினாலும் லகுவானவனுஞ் சமர்த்தனாகிறான்; யாரும் மேலான காரியத்தையே யாலோசிக்கவேண்டும்; அது கைகூடாவிட்டாலும் பெருமை வரும்; புத்திசாலிக ளருமையான காரியங்களைச் செய்வார்கள்; புத்தியீனர்க ளெளிமையான காரியங்களைச் செய்வார்கள்; மலையுச்சியி லொரு பெருங்கல்லை யேற்றுத லரிது; அங்கிருந் ததைத் தள்ளுவ தெளிது; ஏரியின்னீரைக் கட்டுத லரிது; உடைத்த லெளிது; பெருமையுஞ் சிறுமையு மவரவராலேயே வரும்; 'முயற்சியுடையா ரிகழ்ச்சியடையார்' என்னும் பழமொழியானாலுங் கேட்டிலையா?" என்றிப்படிச்சொல்ல, தமனகனைக் கரடகன் பார்த்து "நல்லது நீ போய்ச் சிங்கத்தினிடத்தி லெதைக்குறித்துப் பேசுவாய்?" என, தமனகன் "நம்முடைய சுவாமி மூடத்தனத்தாற்

---

Upon this, Karadakan said to Tamanakan, "Well, we are not now in the service of the Rajah to attend to such counsels and discussions; we are seeking for prey. So why do you entertain idle fancies?" "Can a lame man get at the honey from the high bough of a tree though he desire it" said he scoffingly.

Upon this Tamanakan replied, "Very well, a minister becomes by misfortune an insignificant man, and an insignificant man by industry and good conduct becomes a clever man. Every one ought to aspire to high attainments, the acquisition of which, though unsuccessful confers greatness upon him. The wise will accomplish great and rare deeds but the ignorant meddle with trifling things. It is hard to raise a stone to the summit of a mountain, but to throw it down is very easy. To confine the water in a pond is hard, but to open it is easy. Therefore greatness or meanness is the result of one's own doings. Have you never heard of the proverb "The industrious are never despised."

Upon this, Karadakan asked Tamanakan, "Well, what then do you intend to say to the Lion?" Tamanakan replied, "The

பயந்திருக்கிறான்; அதை நீ யெப்படி யறிந்தாயென்று கேட்கிறாயோ? சொன்னபொருளைப் பகூதியு மிருகங்களு மறிந்து கொள்ளும்? சொல்லாம லறிகிறவனே பண்டிதன்; அப்படி யறியாவிட்டாற் புத்தியாற் பிரயோசனமென்ன? நானு மிங்கே யிருந்தபடியே யறிந்தேன்; இப்போது நானிதை முன்னிட்டுக்கொண்டு போய்ச் சிங்கத்தைச் சிநேகம் பண்ணிக் கொள்ளுகிறேன்" என, தமனகனைப் பார்த்துக் கரடகன் "நம்முடைய அரசர்கள் மோந்து கொள்வதுபோற் கடிக்கிறவர்கள்; அரசரும், நெருப்பும், பாம்புஞ் சரி; அப்படியானாற் பழக்கமில்லாம லிருக்கையி லவனை யெப்படிச் சிநேகம் பண்ணிக்கொள்வாய்?" என, அப்போது தமனகன் "நான் பேசுவதிற் சதுரனென் றறியாயா? சமர்த்தனுக் கெதுபெரிது? பறக்கிற பறவைகளுக் கெதுதூரம்? வித்துவானுக் கெது பரதேசம்? பிரியமாகப் பேசுகிறவர்களுக் கெவன் சத்துரு?" என, கரடகன் "அப் படியானாலும் ராஜாக்களிடத்தி லகாலத்திற்போனா லவ மான நேரிடும்" என்றது. அதற்குத் தமனகன் "அவமா னம் வந்தாலு மெஜமானன் சமீபத்திலே யிருக்கவேண் டும்; யார் சமீபத்தி லிருக்கிறானோ வவனுடனே அரசர் கள். காரியங்களைச் சொல்லுகிறார்கள்; கொடிகள் கிட்ட

---

Lion is in state of fear through ignorance. Shuld you question how I came to know this, I say, even beasts and birds understand those things which are communicated to them; but he who understands a thing untold is a pundit indeed; and what is the use of intelligence without this ability. So I have learned the fact while staying here. Now will I go with this fact to the Lion and befriend him.

Karadakam replied to Tamanakan, "Our Rajahs are like those who under the pretence of kissing a man will eat him up. kings, fire, and serpents are of the same nature. Therefore how can you secure his friendship since you are unacquainted with him?"

"Don't you know," said Tamanakan, "that I am eloquent in speech? What is hard to a man of ability? What is distance to a bird on the wing? What country is foreign to the learned? Who is an enemy to a flatterer?"

"It is true," replied Karadakan, "but an unseasonable intrusion upon the Rajah will be unfavorable."

"Though we suffer," said Tamanakan, "It is best to be near one's master; for, kings consult with him who is about him.

விருக்கிற மரத்திலேயே படரும்; அரசர்களும் ஸ்திரீக
ளுந் தங்களைக் காத் திங்கிதம் பேசுகிறவர்களிடத்தில் மன
திரங்குவார்கள்" என, கரடகன் "நல்லது, நீ யவனிடத்தி
லெப்படிப் பேசுவாய்?" என்றது. தமனகன் "நல்லமழை
பெய்திருக்கையி லெப்படி விரையினின்று முளைகள் புறப்
படுமோ அப்படி ராஜாவின் கேள்விக்கேற்க என் வாக்கி
னின்று முத்தரம் புறப்படும்; ஆயினு மொருவேளை பிர
கஸ்பதியும் பேச்சில் தவறுவானானால் மற்றவர்களுக்குக்
கேட்பானேன்? எப்படியுங் காலமறிந்து பேசினா லியாதோ
ரவமானமும் வராது; அரசர்கள் தங்கள் காரியம் யாராலே
யாகிறதோ வவனிடத்தி லொருவேளை சிறிது குற்றம்
நேரிட்டாலு மதைப் பாராட்டாம லவனைப் பரிபாலித்து
விர்த்தியடையப் பண்ணுவார்கள்" என, கரடகன் "அர
சர்கள் மலைபோ லனுசரிக்கிறதற்குக் கடினமா யிருக்கிறார்
கள்" என, தமனகன் "ஆயினு மவரவர்கள் சுபாவமறிந்து
பேசித் தனக்கிதம் பண்ணிக்கொள்ள வேண்டும்" என்று
கரடகனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு, சிங்கத்தினி
டத்திற்குப் போய்த் தூரத்திலே நின்று தண்டம்பண்ணி
அரச னுத்தரவினா லுட்கார்ந்தவுடனே, சிங்கம் "நெடு
நாளா யுன்னைக்காணோம்" என, தமனகன் "இப்போது

---

Creepers twine about the nearest tree. Kings and women set their affection on those who wait upon and flatter them."

"True," said Karadakan, "but how will you speak to him?" Tamanakan answered, "As plants sprout out from seeds after a plentiful rain. so answers to the Rajah's questions will proceed from my mouth, and if Jupiter himself sometimes err in speech, why should not others? However, if due regard be given to a favorable opportunity no evil will follow. Kings will overlook the little offences of him by whom their business is transacted, and will enable him to prosper."

"But," interrupted Karadakan, "kings are as hard to be entreated as the mountain rocks."

"True," said Tamanakan, "but we should study each one's disposition and try to ingratiate ourselves in his favor by smooth speech."

Having said this, he took leave of Karadakan and went to the Lion, and seeing him at a distance, he prostrated himself, and then by permission drew near and seated himself.

"I have not seen you for a long time" said the Lion.

தேவரீ ரிடத்திற்கு வரத்தக்க காரியம் நேரிட்டதனால் தங்களுடைய திருவடியண்டை வரலானேன்; இல்லாவிட்டால் வந்ததற்குப் பிரயோஜன மென்ன? ராஜாக்களுக்கொருவராலும் பலனில்லாவிட்டாலு மொருவேளை சிறு துரும்பும் பல்லுக்குத்த வுதவும்; மற்றவைகளுக்குக் கேட்பானேன்? மேலு மொருவேளை யரசர்கள் குணவானை யசட்டைபண்ணித் தள்ளிவிட்டாலு மவன் சற்குணம் போய்விடுமா? நெருப்பைத் தலைகீழாகப்பிடித்தாலு மதன் சுவாலை கீழாகுமா? ஆதலா லரசர்கள் பரிசோதித்தறிந்து யோக்கியனை நல்லகாரியத்தில் வைத்தா லவன் ராஜாவுக்குக் கீர்த்தியைப் பெருகப் பண்ணுவான்; ஆகையா லென்னைத் தாங்கள் சிறுநரியென் றவமானம் பண்ணலாகாது; விஷ்ணு வெடுத்திருந்த வராகவடிவை யுலகத்திற் பூசிக்கவில்லையா? ரூபத்தைப் பாராமற் குணத்தைப் பார்க்க வேண்டும்; மலைபோ லிருக்கிற தேர் சிறு சுள்ளாணியால் நிலைபெறும்; நானே சுவாமி காரியத்திற் பற்றுள்ளவன்; கருவியுங் காலமு மறிந்து கரும முடிக்கு மாற்றலுள்ளவன்; இந்த வல்லமையெல்லா முமது சார்பிருந்தாற் பிரகாசிக்கும்; வாள் முதலிய ஆயுதங்களும், வீணைமுதலிய வாத்தியங்களும், பூமியும், ஸ்திரீகளும், யோக்கியர்களுஞ் சாஸ்திரங்களு மாகிய விவையெல்லாம் பரிபாலனம் பண்ணுகிறவர்களாற் பிரகாசிக்கும்; அண்டையிற் சமர்த்த

---

"I have occasion," replied Tamanakan, "to come now to thy footstool; otherwise of what service is my coming? Though kings are not benefited by any one, yet a small splinter will sometimes be of service to pick the teeth; why then should we question the use of other things? Besides, though kings may sometimes despise a virtuous person and reject him, still, will his talents dessert him? Though you invert the firebrand will the blaze fall downwards? If his majesty employ a person whose integrity he has well tested, he will promote the Rajah's honour. Therefore despise me not as a mean Jackal. Does not the world worship the *hog incarnation* of Vishnu? Regard should be had to one's qualifications and not to his shape. Even a chariot, though as big as a mountain, is supported by a small linch-pin. As for me, I am interested in your majesty's affairs. I also possess the knowledge of times and the means and abilities. These abilities, if employed, will shine under thy patronage. Even swords and other weapons, fiddles and other musical instruments, lands, women, men of talents, science, &c., all shine only

ணில்லாத ராஜாவுக் கபகீர்த்தி வரும்" என் றிப்படிச் சொல்லக்கேட்டு, சிங்கம் "தமனகா! நீ யென் பிரதானி புத்திரனல்லவா?" என, தமனகன் "சுவாமி" என்று வணங்கிச் சும்மாவிருந்தது. சிங்கம் "ஏதாவது சொல்ல வேண்டுவ திருந்தாற் சொல்" என, தமனகன் "தேவரீர் தண்ணீர்க்கு வந்து குடியாமல் மெய்ம்மறந்து சும்மா நிற்கி றீர்களே" என, சிங்கம் "மெய்தான், நா னிந்தக்காட்டில் வெகுநாட் சுகமாக விருந்தேன்; இப்போ திதை விட்டு விடத் தக்கதாகச் சம்பவித் திருக்கிறது; என்றைக்குங் கேளாத மேக முழக்கம்போ லொருதொனி இன்றைக்குக் கேட்டேன்; அதனாலேதா னந்த முழக்கம்போலவே யிருக் குமல்லவோ அந்தப் பிராணியும்; ஆதலா லிதைக்குறித் தென்ன சொல்லுகிறாயோ வதுவே யெனக்குப் பிரமா ணம்; இப்போது நீ வழுக்கி விழுகையி லூன்றுகோல் போற் கிடைத்தாய்" என, தமனகன் "சுவாமி, தொனி யினாலேயே பயப்படலாகாது; முன்னொருவன் ஒரு தொனியைக் கேட்டுப் பயந்து பிறகு நெருங்கிப் பார்த்த வுடனே யங்கே தோலுங்கோலு மிருக்கக் கண்டான்" என, சிங்கம் "அதென்ன?" என்று கேட்க, தமனகன்

---

under some one's patronage." Dishonor will be attached to the king who has not a clever man about him.

The Lion, hearing this said "Are you not the son of my prime minister?"

"Yes, my Lord," answered Tamanakan with reverence, and remained silent.

On the Lion inquiring if he had any thing to say, Tamanakan said, "My Lord, though you have come to drink water, you do not drink, but stand agitated and undetermined."

"True," replied the Lion, "I have lived undisturbed in this forest for a long time, but now I am obliged to quit this place. I have heard a noise like thunder to-day, a noise I never heard before. Will not the animal which made it be as terrific as the sound? Therefore what you say on the subject will be accepted. Fortunately you have now come like a staff to a stumbling man."

"My Lord," said Tamanakan, "We should not be frightened at the mere sound. Once a person was greatly frightened at a great noise, but when he drew near to examine the cause, he beheld nothing but a stick and a skin?"

The Lion demanded what he meant, and Tamanakan related the following story: "Once a jackal being pinched with

"ஒரு நரி பசியால் வருந்தி யிரைக்காகத் திரிந்து திரிந்தொரு போர்க்களத்தில் வரும்போ தங்கே அசதியி லுண்டான வொரு பெரிய தொனியைக்கேட்டு மிகவும் பயந்து 'நான் செத்தேன்' என்று திடுக்கிட்டது; பிறகு சற்றே முன்னே போனவுட னங்கொரு பெரிய பேரிகையைப் பார்த்து, அடுத்திருக்கிற மரத்தின்கிளை காற்றிலசைந் ததிலடிக்கத் தொனியுண்டாயிற்றென் றறிந்துகொண்டு, அதனருகே போய்ப் பார்த்து, அங்கே பேரிகையின் தோலுங் கோலுமே யல்லாமல் வேறொன்று மில்லையெனத் தெளிந்து சந்தோஷ மடைந்தது; ஆதலாற் சத்தத்தினாலே மாத்திரம் பயப்படலாகாது; தாங்கள் கட்டளைகொடுத்தா லிந்தச் சத்தத்தின் மூலத்தை யறிந்து வருவேன்" என, சிங்கம் அப்படியே செலவு கொடுத்தது. பிறகு தமனகன் சஞ்சீவகனென்னு மெருதினிடத்திற் போய்ப் பேசி அதைச் சிநேகம் பண்ணிக்கொண்டு, சிங்கத்தண்டை வந்து தண்டம் பண்ணி முன்னே நின்றது. சிங்கம் "நீ யந்தப் பிராணியை யின்னதென் றறிந்துவந்தாயா?" என, தமனகன் "தங்கள் கட்டளைப் படியே போய்ப் பார்த்தேன், முன் தாங்க ளெப்படி நினைத்தீர்களோ வப்படியே புஷ்டியா யிருக்கிறான்; அவன் தங்கள் நட்பை விரும்புகிறான், கட்டளை யானால் திரும்பிப் போய்த் தரிசனத்துக் கிட்டுக்கொண்டு வருவேன்" என,

---

hunger, roved about in quest of prey, and coming near a field of battle, heard on a sudden a tremendous noise Frightened almost to death, he cried out 'I am dead.' But stepping forward, he discovered a large drum placed by the side of a tree, and beaten by one of its branches put in motion by the wind. Of course he was comforted, when he saw nothing but the skin of the drum and the branch. We should not therefore be frightened by mere noise. If you will permit me, I will go and ascertain the cause of this noise."

The Lion accordingly assented; and Tamanakan went directly to the bull Sunjeevakan, made friendship with him, and returning to the Lion, prostrated himself, and then stood before him.

"Have you ascertained what that animal is?" interrogated the Lion.

Tamanakan replied, "I went and saw, as directed by you. He is as bulky as you have imagined before, but he craves your friendship. With your permission I will go back and bring him to you."

சிங்கம் "நல்ல தப்படியே யாகட்டும்" என, மறுபடி தமனக னெருதண்டை போ யுபசாரத்தோ டழைத்துவந்து ராஜாவைத் தரிசனம் பண்ணுவித்தது. பிறகு பிங்களனுக்குஞ் சஞ்சீவகனுக்கும் வெகு சிநேகமுண்டாய் ராஜாவுக்கு மற்றயாரு மவசிய மில்லாம லிப்படி வெகுகாலங் கழிந்தது. அப்போது பிரதானி புத்திரர்களாகிய கரடக தமனக ரென்னு மிரண்டு நரிகளுக்கு மிரையொன்று மகப்படாமையா லாலோசிக்கத் தொடங்கின. தமனகன் "நாம் காட்டிலே தனித்திருந்த சிங்கத்துடனே எருதைச் சிநேகம் பண்ணுவித்தது யானையானது தன் மத்தகத்தைக் கொத்துகிறதற் கங்குசத்தைத் தானே யெடுத்துப் பாகன் கையிற் கொடுக்கிறதுபோ லாயிற்று; மேலு முன்னொ ராட்டுக்கடாச் சண்டையில் நரிசெத்ததும், ஆஷாடபூதியின் கூட்டுறவாற் சந்நியாசி பொருளிழந்தது மெப்படி யவரவர்கள் குற்றத்தினாலேயே சம்பவித்ததோ அப்படியே நம்முடைய தோஷத்தினாலே நமக் கிரை கிட்டாமற் போயிற்று" என, கரடகன் "அதெப்படிச் சொல்" என, தமனகன் சொல்லுகிறது:—

"ஒரு தேசத்தில் தேவசன்மா வென்கிற வொரு சந்நியாசி தான் பிச்சையெடுத்துச் சம்பாதித்த திரவியத்தைக்

---

"Very well, do so" said the Lion.

Upon this, Tamanakan went back to the bull, and with great civility brought him and introduced him to the king.

From that time the Lion called Pincalan and the bull Sunjeevakan lived together many years in great friendship, the king feeling no necessity for the company of others.

Then the two jackals, Karadakan and Tamanakan, finding no provender, began to consider thus:—

Our endeavour in befriending the bull with the Lion, who was alone in the forest, is like the elephant's handing the goad to his driver to prick his own forehead.

"Moreover" said Tamanakan, "just as, by their own folly, a jackal once lost its life in the fight between two rams, and an ascetic his treasure by keeping company with one Ashadapoothi, so we by our own fault are without food."

"How is it?" demanded Karadakan, and Tamanakan replied as follows:—

"There was in a certain country an ascetic named Tevasanma, who by begging acquired riches, which he concealed

கந்தைக்குள் வைத் தியார்க்குந் தெரியாமல் தைத்துப் போர்த்துக்கொண்டு பின்னும் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு திரிய, அச்சூதை யறிந்த ஆஷாடபூதி யென்னு மொரு திருட்டுப் பிராமணன் இந்தக் கந்தையை மாத்திர மெப்படியாயினுந் திருடிக்கொண்டால், நா மெப்போதுந் திருட்டுவேலை செய்யவேண்டுவ தில்லை; நம்முடைய தாசிக்கு வெகுநாளைக்கு நடக்குமென் றாலோசித் தொரு பிரமசாரியைப் போலவந் தச்சந்நியாசியினிடத்திற்போ யவன் காலில் வீழ்ந்து 'அடியேனுக்கு ஞானோபதேசஞ் செய்திந்த நிசாரமாகிய சமுசாரசாகரத்தில் நா னின்னு மலையாமற் சிறிது கடைக்கண்ணாற்பார்த் தென்னைக் கடைத்தேறப் பண்ணும்; ஓ மகானுபாவா! ஓ பரதுக்கஞ் சகியாத பரம புருஷா!" என் றிப்படி யழுதகண்ணுஞ் சிந்திய மூக்குமாகக் கலங்கி நிற்க, அதைப் பாசாங்கென் றறியாத வந்தச் சந்நியாசி இவன் தலைமேற் கையைவைத்துப் "பயப்படாதே" என்றான். அது முதலாக வாஷாடபூதி வெகு பயபத்தியுடனே யவன் காலாலிட்ட வேலையைக் கையாற் செய்துகொண்டு, கந்தைக்குச் சமயம் பார்த்துக்கொண்டிருக்குநாளி லொருநாள் ஒரு பிராமணன் வீட்டி லிருவரும் விலாப்புறம் வீங்கப் பிட்சை பண்ணிக்கொண்டு

---

by sewing the coins in the rags that he wore round his body, and still roved about begging. A Brahmin named Ashadapoothi, who was a great thief, knowing this trick, and thinking, if he could by some means steal his rags, he would have no necessity to steal again and that he would have enough to support his keeper for a long time, drew near the ascetic under the disguise of a Brahmin student, and throwing himself at his feet as if greatly agitated and distressed, said:—

"O thou great man who would not bear to see the sufferings of others, my grief is distressing; give me divine instruction, and by a glance of pity upon thy servant deliver me from the turbulent ocean of family cares, that I may not be tossed any more."

The ascetic not knowing that this was a pretence, placed his hand upon his head, and said:—"Fear not."

From that time Ashadapoothi conducted himself with apparent reverence, and cheerfully did with his hands whatever his master directed with his feet, watching carefully when he might steal the rags.

One day, they both went begging to a brahmin's house, and having eaten enough to swell up their ribs, returned a con

வெகுதூரம் வந்தபிற காஷாடபூதி யொருவரு மறியாம
லொருதுரும்பை யெடுத்துத் தன் தலைமேலே வைத்துக்
கொண் டந்தத் துரும்பைக் குருவுக் கெடுத்துக்காட்டி,
"ஐயோ! நமக்குப் பிட்சைகொடுத்த பிராமணன் வீட்டுத்
துரும்பு என் தலையி லொட்டி வந்துவிட்டதே, 'அன்ன
மிட்ட வீட்டிற் கன்ன மிடலாமா'? 'உப்பிட்டவரை யுள்
ளளவு நினை' என்று பழமொழியு மிருக்கிறதன்றோ?" என
வாய்பதற நடுநடுங்கி, "இதை யந்த வன்னதாதா வீட்டிற்
போட்டுவிட் டிதோ நொடியளவில் வருவேன்" என்று
குருக்கள் பார்க்கும்படி பரபரப்பாகச் சிறிதுதூரங் காலடி
பிட்டத்திற் படும்படி யோடி, ஒரு செடிமறைவி லுட்
கார்ந் திருந்துவிட்டு, பின் பிரைக்க விரைக்க வோடிவந்
தாசாரியன் காலில் விழுந்தெழுந்து, "சுவாமி! உம்முடைய
வநுக்கிரகத்தின லிந்தப் பாவத்திற்குத் தப்பினேன்" என்
றான். இதைப்பார்த் தந்த ஏழைச் சந்நியாசி ஆச்சரியப்
பட்டு, இவன் பரசொத்துக் காசைப்படாத பரமாத்துமா
வென்று நம்பித் தன்னுயிர்க்குச் சமானமாக நினைத்திருந்த
கந்தையைச் சீஷன் கையிற்கொடுத்து, ஒரு குளக்கரையி
லிருக்கச்சொல்லித் தான் சலபாதைக்குப் போய்க் கா
லலம்பப் போனவிடத்தி லிரண் டாட்டுக்கடாக்க ளொன்
றோ டொன்று முட்டிச் சண்டைசெய்ய, அவைகளின்

siderable distance, when Ashadapoothi slily took a piece of straw and placing it on his head showing it to his master, exclaimed with trembling and faltering lips—"alas! this straw from the house of the brahmin who gave us alms is sticking to my head. Is it proper to rob the house of our benefactor? The proverb saith "Remember him for ever who has given you even a little salt." Then requesting permission to carry the straw back to the house of the brahmin who had fed them bountifully, and promising to be back again in an instant, he ran off in haste swinging his legs as high as his waist (to indicate his zeal and earnestness.) After he had run a short distance, he rested a while under the cover of a tree, and then returned, panting as if with excessive exertion and threw himself at the feet of his master. He then rose and cried out—"O sir! through thy grace I have escaped this sin."

The ascetic on hearing this, was astonished, and concluded that his disciple was a holy man, who would not covet the wealth of others. He therefore left his rags, dear to him as his own life, in his care, and directed him to stay on the bank of a tank while he went to answer the calls of nature and to wash his feet. There his attention was drawn to the two rams engaged at fight,

மண்டையிலிருந் தொழுகுகிற வுதிரத்தை யுண்ணலா
மென்றொருநரி போ யிரண்டுக்கு நடுவி லகப்பட் டிறந்
தது. அந்த அநர்த்தத்தைப் பார்த்துக்கொண்டு சிறிது
நேர மிருந்தான். அப்போ தந்தச் சீஷ னிதுதான் நல்ல
சமயம்; இதுவிட்டா லினிக்கிட்டுமா? காற்றுள்ளபோதே
தூற்றிக்கொள்ள வேண்டு மென்று நினைத்துக் கந்தையைச்
சுருட்டிக்கொண் டோடிப்போனான். உடனே சந்நியாசி
வந்துபார்த்துச் சீஷனைக் காணாமல் "ஓகோ! நம்மை யாஷா
டபூதி யேய்த்தானே, நாம் மோசம் போனோமே" என்று
திகிற்பட்டு, உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்தி
யைப்போல் ஒருவருடனுஞ் சொல்லாம லிருந்து விட்
டான்" என, இதைக்கேட்டுக் கரடக னிதற்கு "நான் செய்
யத்தக்க தென்ன?" என்று கேட்கத் தமனகன் "யா
தொன்று போயிற்றோ வதை மறுபடி சேகரிக்கவேண்டும்,
எது சம்பாதிக்க வில்லையோ அதைச் சம்பாதிக்க வேண்
டும், எதிராகவரும் விக்கினங்களைத் தடுக்க வேண்டும்,
என் றிப்படி யாலோசித்துப் பண்ணுகிறவ னல்லவோ மந்
திரி; இப்போது நமக்குப் பிங்கள சஞ்சீவகர்களுடைய
சிநேகத்தா லெல்லாச் சங்கடமு நேரிட்டது; இவர்களு
டைய நட்பைப் பிரித்தாற்றான் நமக்கிவ்வள வன்னங்
கிடைக்கும்" என்று சொல்ல, கரடகன் "அந்தப் பிங்கள

---

and to a jackal whose thirst for the blood dropped from their heads, was so great that it foolishly ran between them and was crushed to death; and he was for some time witnessing the disastrous scene.

In the mean time, the disciple considering this was a favorable opportunity and that if this were not improved another might not occur and as grain should be winnowed only when the wind blows, he hastily rolled up the rags and ran away.

Soon after this the ascetic came to the place and seeing his disciple gone, he exclaimed—"O ho! Ashadapoothi has deceived me! Alas! I am deceived!" And like the brahmin woman who was robbed of a piece of salted meat, he resolved to keep the secret to himself.

On hearing this, Karadakan demanded what he should do.

Tamanakan replied, "If a thing is lost, it must be regained; the thing which may not have been acquired, must be acquired; and the impending danger must be avoided. He who can do these things, is a king's minister. Our present difficulty arises from the friendship between Pincala and Sunjeevakan, and it is only by destroying this friendship that we can obtain a little food."

சஞ்சீவகர்களுறவைக்கெடுக்க யாராலாகும்? மணியினின்று மொளி பிரிக்கப்படுமோ? இது முடியாத காரியமல்ல வோ?" என, தமனகன் "என்ன சொல்லுகிறாய்? உபாயத் தா லாகிறது பராக்கிரமத்தா லாகுமோ? ஒருகாகஞ் சொர் ணமாலையா லொரு கிருஷ்ண சர்ப்பத்தைக் கொன்ற தறி யாயோ?" என, கரடகன் "அதெப்படி" என்றாவலோடு கேட்கத் தமனகன் சொல்லத் தொடங்கிற்று:—

"ஒரு பெரிய மரத்திற் கூடு கட்டிக்கொண் டாணும் பெண்ணுமாகிய விரண்டு காக்கைகள் நெடுநாள் வாழ்ந் திருக்கும்போது அந்த மரப்பொந்தி லொருநாகம் வந்து சேர்ந்து அந்தக் காக்கையிடுகிற முட்டைகளையெல்லாங் குடிக்கக்கண்டு, இதற்கென்ன செய்யலாமென்று மிகவும் விசனப்பட்டுத் தனக்குச் சிநேகமாகிய நரியிடத்திற்போய் நடந்த சங்கதிகளைச் சொல்லி, "இப்போதாகிலு முட்டை களைக் காப்பாற்றுகிறதற் கென்ன செய்யலாம்?" என, நரி "ஒரு நண்டானது வெகு நண்டாசையைக் காட்டிக் கொக் கைக் கொன்றாற்போல் அதை ஒருபாயத்தாற் கொல்ல வேண்டும்" என, காகம் "நண்டு கொக்கை யெப்படிக் கொன்றது? சொல்லுமையா" என, நரி சொல்லுகின்றது:—

---

To which, Karadakan replied, "who can do this? Can the brilliancy of a gem be separated from it? Is not this an impossible thing?"

"What do you say?" said Tamanakan, "Can what is accomplished by stratagem, be done by strength and courage? Do you not know that a crow once killed a serpant by means of a golden neck chain."

"How was it?" demanded Karadakan eagerly.

Tamanakan replied,—"There once lived in the hollow of a big tree a pair of crows, which were for a long time undisturbed, but at length a cobra coming and residing in the same tree, began to eat up all their eggs. They were much pained at this misfortune, and not knowing what to do, went to their friend, a jackal, and having stated the case, begged him to state how the eggs might be preserved. The jackal said you must kill the serpent by a stratagem, as the crab killed the stork, by exciting in him an eager desire te eat many crabs." "But how did the crab kill the stork" asked the crow. To which the jackal related the following story:—

"மீன்களையே மிகுதியுந் தின்றுவளர்ந்த வொரு கிழக் கொக்கானது குளக்கரையில் வந்து விசனமாய் நின்று கொண்டிருந்தது. அப்போது அதிலிருந்த மீன்கள் கொக்கைப் பார்த்து "நீ உன்னுகாரத்தை விட்டுச் சும்மா விருப்பானேன்? சொல்" என, கொக்கு "நான் மீன் தின்பது மெய்தான், ஆயினு மின்றைக் கிங்கே செம்படவன்வந் தெல்லா மீன்களையும் பிடிக்க விருக்கிறதினால் என்னுடைய இரைகளெல்லா நிர்மூலமாய்ப் போகுமே யென் றேங்கிச் சும்மா விருக்கிறேன்" என, இதைக்கேட்டு மீன்களெல்லாங் கூட்டங்கூடி எவன் நமக் கபாயஞ் சொன்னானோ அவனே யுபாயஞ் சொல்லுவானென் றாலோசித்துப் பிறகு கொக்கைப்பார்த்து, "நீயே யெங்களை யிப்போ திரட்சி" என, கொக்கு "நான் செம்படவனோடு சண்டை பண்ண சமர்த்தனல்லேன்; மேலு நான் கிழவன்; உங்களை வேறோரிடத்திற்குக் கொண்டுபோவேன்; அதனா லெனக்கு மிந்தத் தள்ளாமையான காலத்திற் பரோபகாரி யென்கிற பெயரும் வரும்; நீங்களும் வெகுகாலம் பிழைத்திருப்பீர்கள்" என, அப்போ தந்தப் பேதைமையான மீன்களெல்லாம் பிராணனைக் காப்பாற்றும் பொருட் டதன் பேச்சை நம்பி "நல்ல தப்படியே கொண்டுபோக வேண்டும்" எனக் கெஞ்ச, அந்த வஞ்சனையான கொக்கு நடைக் கொவ்வொன்றாகக் குளத்திலிருக்கிற மீன்களையெல்லா மூக்கினாற்

---

An old stork who lived sumptuously all his days, chiefly upon fish, came one day to a tank and sat on the bank with a sad countenance. The fishes of the tank seeing him, said "Pray why do you sit idle on the bank, without seeking your food?" The stork replied, "it is true, my usual food is fish, but the fisherman will come here to-day and catch all the fish, and I shall be in want. I am therefore much distressed." The fishes, hearing this, counselled together and said, he who has made known to us our danger, will also be able to tell us how we may escape; then addressing the stork, they said, "we entreat thee to rescue us from this danger." The stork replied, "I have not strength and skill enough to fight with the fisherman; besides, I am too old; I will, however, if you please, carry you to another place, where you may live a long life without danger, and I shall by so doing, secure in my old age the name of a benefactor to strangers. Then those ignorant and foolish fishes, believing the words of the stork, and hoping to save their lives, entreated him to do as he said. So the cunning stork took them one by one in his bill

கௌவிக் கொண்டுபோய்ச் சில மீன்களைத் தின்று, மற்ற மச்சங்களை யொரு பெரிய பாறையின்மே லுலரவைத்தது. பிறகு அந்தக் குளத்திலிருந்த வொருநண்டு இந்தக் கொக்கைப்பார்த்து "ஓ சீவகாருணியனே! என்னையு மவ்விடத்திற் கொண்டுபோகவேண்டும்" என வேண்டிக் கொள்ள, கொக்கு வருங்காலத்தி லெதுவும் வலியவருமென் றுள்ளுக்குள்ளே சந்தோஷித்து, அப்படியே நண்டையுங் கவ்விக் கொண்டு போகும்போது, நண்டு வழியில் மீன்கள் செத்துக்கிடக்கிறதையு மீன் முட்கள் சிந்திக் கிடக்கிறதையு மீன்கள் பாறையின்மே லுலருகிறதையும் பார்த்து, ஐயோ! பல மீன்களையுங் கொன்று நம்மையுங் கொல்ல வந்தது; நம்மைக் கொல்வதற்கு முன்னமே நாமிதைக் கொல்வோமென் றொருபாய நினைத்துக் கொக்கைப்பார்த்து "நீ யென்னை வருத்தப்பட் டெடுத்துக் கொண்டுவந்தாய், அங்கே யென்னுடைய பரிவாரங்க ளிருக்கின்றன; ஆகையா லங்கே யென்னை நீ மறுபடியுங் கொண்டுபோனா லவைகளையுங் காண்பிப்பேன்" என, அதைக்கேட்டுக் கொக்குப் பேராசைப்பட்டுத் திரும்பி யந்தக் குளத்திற்கு நேரே வருகையில், நண்டு கொடுக்கினா லந்தக் கொக்கின் கழுத்தை யிரண்டு துண்டாக நறுக்கிக் குளத்தில் வீழ்ந்து சுகமாய் வாழ்ந்தது. ஆகையா லந்தக் கொக்கைப்போலப்

---

and eating some, laid the others on a huge rock to dry for his future use. After this, a crab who lived in the tank came near and addressed the stork, "O gracious preserver of life, may it please thee to carry me also where you have carried the fish." The stork was much pleased, thinking that in a time of good luck every thing is easy—and taking up the crab, he flew off with him. The crab seeing the dead fishes and fish-bones strewed on the way and the fishes drying on the rock, said within himself, "Alas! how many fishes has this stork killed; and now he intends to kill me also; therefore I must be beforehand and kill him first." Then addressing the stork, he said, "you have laboured hard to bring me so far, and I am under great obligation to you; but I have many companions in the tank, if you will therefore carry me back, I will shew them to you." The stork on hearing this, was led away by too great a desire of gormandizing such food, and induced to return; and as he approached the edge of the tank, the crab seized the neck of the stork with his claw and severed his head from his body, while the crab itself fell into the tank and "escaped happily."

"In this manner" said the jackal, you must kill the serpent.

பாம்பையுங் கொல்ல வேண்டும்" என, காகம் "அப்படி பாம்பைக்கொல்ல நான் செய்யவேண்டிய வுபாயமென்ன?" என்று கேட்க, நரி "இப்பட்டணத் திராஜகுமாரி குளிக்கிற மஞ்சனச்சாலைக்குப் போ; அவள் ஸ்நானம் பண்ணும்போ தாபரணங்கள் கழற்றி வைத்திருக்கும்; அந்த வாபரணங்களி லொன்றை யெடுத்துச் சனங்கள் பார்க்கும்படி கொண்டுவந் தந்த மரப்பொந்திற் போடு" என்று சொல்ல, காக்கையு மப்படியே செய்ய, அந்த இராஜனுடைய வேலைக்காரர் போ யந்த மரத்தின் பொந்தைப் பிளக்க, நாகஞ் சீறிவந்தது; வரவே அதை இரண்டு துண்டாக நறுக்கி யெறிந்தார்கள்; இப்படிக் காகத்தின் காரிய நிறைவேறிற்று; ஆகையா லெல்லா முபாயத்தாற் கைவசப்படும்; எவன் புத்திமானோ அவன் பலவான்; எவனுக்குப் புத்தியில்லையோ வவனுக்குப் பல மெங்கே? பூர்வம் புத்தி பலத்தினு லொரு முயல் சிங்கத்தைக் கொன்றது" என, "அதெப்படி" என்று கரடகன் கேட்க, தமனகன் சொல்லுகின்றது :—

"ஒரு நெருங்கிய காட்டின் மதோன்மத்த னென்னுஞ் சிங்கமானது அக்காட்டிலிருக்கிற மிருகங்களையெல்லாங் கொன்று தின்று கொழுத்து வெறிகொண்டு திரிகிற நாளில் மிருகங்களெல்லா மொன்றாகத் திரண்டுபோய்

---

By what stratagem can I kill the serpent, "asked the crow. The jackal replied, "Go to the bathing room of the king's daughter and you will observe her jewels which she has taken off and laid down; take one of them with your bill and while all the people watch you, fly to the tree and drop it into the hollow where the serpent is concealed." The crow did as advised; upon which the servants of the king ran to the tree and split it open, to find the jewel. As they did so, the serpent came out, hissing with rage, and was cut to pieces. Thus the desire of the crow was realized.

"Therefore," said Tamanakeu, "all things may be accomplished by stratagem. Whosoever is wise is strong. But to him who is devoid of it where is strength?—Even a rabbit, in times of old, killed a Lion by means of his wit" "How was that?" asked Karadakan. Then Tamanakan replied by relating as follows;—

In a dense jungle there lived a Lion, named Mathonmattan who glutted himself daily on the animals inhabiting the jungle. One day as he was roaming about, the animals, having all assembled, went up to him and addressed him thus:—

"ஓய் மிருகேந்திரா! உன்னுடைய காட்டிலிருக்கிற மிருகங்களையெல்லா மிப்படிக்கொன்றால் மிருகங்கள் நிர்மூலமாய்ப் போம்; ஆதலால் தின மொவ்வொன் றுமக்கிரை கொடுத்துக்கொண்டு வருகிறோம்; அதை நீர் பட்சித்துக் கொண் டிருக்கலாம்" என்று பிரார்த்திக்க, சிங்கம் மெய் தானென்று நம்பி "அப்படியே செய்கிறேன்" என்று சத்தியஞ் செய்துகொடுத்தது. பின் ஒவ்வொன்றாகத் தின்று கொண்டு வருநாளில், ஒருநா ளொரு கிழ முயலினுடைய முறைவந்தது. அப்போது விலங்குகளெல்லாங் கூடி "இன்றைக் குன்முறை போ" என்றுசொல்ல, முயலானது "இன்றைக்கு நமக்கு மரணம் வந்தபடியா லிதற்கோ ருபாயம் யோசிக்க வேண்டும்; புத்திமானுக் கெதுதான் கைகூடாது? ஆகையால் நாமிப்போது உபாயத்தாற் சிங்கத்தைக் கொல்வோமென் றாலோசித்து மெள்ள மெள்ள வந்தச்சிங்கத்தின் பசிவேளை தப்பிவரச் சிங்கம்பார்த்து, "முயலே! யானையானாலு மென்னுடைய பசிவேளைதப்பி வருகிறதில்லையே, நீ யெவ்வளவு பிராணி? இப்படித் தாமசமாய் வரலாமா?" என்று மிகுந்த கோபத்தோடு கையைத் தரையிலே மோதிக்கேட்க, முயல் "ஐயனே! இது வென் குற்றமன்று; உன்னுடைய பசிவேளைக்கே வந்தேன்; வந்த வழியி லொரு பொல்லாத சிங்கத்தைக்கண்டு பயந் தொளித்திருந்து அந்தச் சிங்கம் போனபின்பு வந்தேன்" என்று

---

"O Great king of Beasts, if the animals of the forest are destroyed as they have been, they will soon be extinct; therefore if you please, let us send one daily for your majesty's prey." The Lion was pleased with this proposal, and declared his assent to it on an oath. He was fed in this manner for some time, when it came an old hare's turn to go to the Lion. "To-day," said the hare to himself, "I must die. Let me resort to stratagem to escape death. To the wise nothing is impossible. Let me by an artifice try to kill the lion." Meditating thus, he walked slowly and came to the Lion, later than the appointed time. The Lion, on seeing him, stamped the ground, and said, "How dare you, an insignificant creature, presume to come so late, while even the elephant does not fail to come at the appointed time?"

"My Lord," said the hare, "I am not in fault. I should have come at the appointed time, but meeting a lion in the way, I was afraid and hid myself until he passed away, when immediately I hastened hither."

சொல்லச் சிங்கம் "என்னை யல்லாம லிந்தக் காட்டில் வேறே சிங்கம் நீ பார்த்தாயா? காட்டு வா" என் றழைக்க அழைத்துக் கொண்டுபோய்ச் சேறு நீரு மிகுந்த வொரு பாழ்ங்கிணற்றை, "இதிலே யிருக்கிறது" என்று காட்ட, சிங்கம் முயலின் பேச்சை நம்பிக் கிணற்றை யெட்டிப் பார்த்து, அதில் தோன்றின தன் நிழலை அந்தச்சிங்க மிங்கே யிருக்கிறதென்று நினைத்துக் கோபத்தோ டதைக் கொல்லவேண்டுமென் றதிற்பாய்ந்து சேற்றிலழுந்தி யிறந்தது. ஆகையா லெவன் புத்திமானோ அவன் பலவானென் றுனக்குச் சொன்னேன்" என, கரடகன் "சிங்கத்தினிடத்திற்குச் சுகமாய்ப் போ, உனக்கு மங்கள முண்டாகட்டும்" என, பிறகு தமனக னந்தச்சிங்கந் தனித்திருக்கிற சமயம் பார்த்துப் போய்த் தண்டம்பண்ணி, "சுவாமி! உமக் கின்றைக் கொருபொல்லாங்கு நேரிட்டது, அதை நானறிந்து கட்டளை யில்லாமல் விண்ணப்பம் பண்ணிக்கொள்ள லானேன்" என, சிங்கம் "அதென்ன சொல்" என, தமனகன் "உம்முடைய மித்திரனாகிய சஞ்சீவகன் உம்மிடத்தில் விசுவாசங் காண்பித்து உம்முடைய விராச்சியத்தைப் பிடுங்கிக்

---

"Have you indeed seen another lion in this jungle?" said the Lion, "if you have, show me where he is."

Upon this the hare conducted the lion to an old well, filled with mud and water, and said, "The lion I saw, is in this well." The Lion stepped forward to look, and seeing his own reflection in the water, he supposed it was another lion, and springing with fury into the well to attack him, he stuck fast in the mud and died.

"Therefore, I say," said Tamanakan, "that he who is wise, is strong."

Then Karadakan said to Tamanakan, "Go then to the Lion, and may your enterprise be successful."

Accordingly, Tamanakan taking an opportunity when the Lion was alone went unto him, and having made his obeisance, addressed him thus:—

"My Lord, I am aware of an evil that will befall thee to-day, which I am obliged to mention without your Majesty's permission."

"Speak" said the Lion, "and tell me what it is."

Tamanakan replied, "Sunjeevakan pretending great friendship for your majesty is planning secretly to usurp your king-

கொள்ள யோசித்திருக்கிறான்; இதை நீர் பொய்யென்று நினைத்துக் கோபித்தாலும் அல்லது தண்டித்தாலும் ராஜனுக் கொருதுன்பம் வரும்போது தன் நலத்தைப்பாராமல் ராஜனுக்கு நல்ல வுபாயங்களைப் போதித்துச் செய்யத்தக்க காரியங்களைச் செய்வித்தல் மந்திரிகளுக்கு நீதித்தொழிலாகையா லுமக் கிதைத் தெரிவித்தேன்" என, பிங்களன் இதைக்கேட் டாச்சரியப்பட்டுச் சும்மாவிருந்தது. பின்னுந் தமனகன் "நீ ரவனை முக்கியப் பிரதானி யாக்கினீர்; அப்படியே யிருக்கட்டும், எனக்கென்ன? ராஜாவும் பிரதானியுஞ் சமானமா யிருந்தால், ராஜலட்சுமி யவ்விருவரி லொருவனைக் கைவிடுவாள்; மேலு மெப்போ திராஜா வொருவனையே பிரதானி யாக்குகிறானோ வப்போ தந்தப் பிரதானிக்குக் கர்வ முண்டாகிறது; அவன் சுதந்தரனாயிராச்சிய வாசையால் ராஜாவைக் கொல்ல விச்சிக்கிறான்; ஆகையா லிப்படிப்பட்ட மந்திரியை வேரோடு களையவேண்டும்; இல்லாவிட்டா லவனால் தீங்கு நேரிடும். இது தங்களுக்குச் சொல்லவேண்டுமா? தாங்க ளெல்லா மறிந்திருக்கிறீர்கள்; லோகத்திற் செல்வத்தை விரும்பாதவனருமை" என் றிப்படியெல்லாஞ் சொல்லக்கேட்டுச் சிங்கம் நகைத்து "சஞ்சீவகனிடத்தி லெனக்கிருக்கிற சிநேகம் போகாது; மித்திரர்க ளநேக வநியாயம் பண்ணினாலு

---

dom. Though your Majesty were to disbelieve this and punish me, yet as it is the duty of ministers to warn kings of approaching danger and to offer good counsel and do whatever is necessary, disregarding their own welfare, so I have informed you of this."

The Lion on hearing this was filled with astonishment and remained silent. Tamanakan then proceeded: "you have made him your prime minister, let it be so; how does it affect me? But when the king and the minister happen to be equals, the goddess Luckshmi will desert one of them, and moreover, when the king nominates one as the only prime-minister of his kingdom, he will certainly grow proud, and being ambitious of power, seek to destroy the king. Such ministers should therefore be extirpated; otherwise evil consequences will follow. But these things need not be mentioned to you; you know them all. It is scarce to find a man in this world who does not covet riches." The Lion, on hearing this, said smiling "The affection I have for Sunjeevakan will never cease. Though friends may do many a harm, they should be considered as unintentional errors".

மதைப் பிரியமாகவே நினைக்கவேண்டும்" எனத் தமனகன் "இதுதான் புத்திக்குத் தோஷம்; இதனா லுமக் கபாயம் வரும்; சாதுக்கள்புத்தியைக் கேளாமல் துட்டர் புத்தியைக் கேட்கிறவ னெவனோ வவன் மருந்துதின்னாத ரோகியைப் போல விபத்தை யடைவான்; காதுக் கினிமையாயு மிதம் பண்ணுகிறதாயு மிருக்கிற வசனந் துர்லபம்; காதகனுடைய வசனஞ் செவிக் கினிமையாயினு மதைக் கேட்கலாகாது" எனச் சிங்கம் "நான் அபயங் கொடுத் திரட்சித்தவ னெனக்குத் துரோகம் பண்ணுவானோ? என்னபேச்சுப் பேசுகிறாய்? போ" என, மறுபடியுந் தமனகன் "துஷ்டர் குணம் மாறுமா? நாயின் வாலைக் குணக்கெடுக்கலாமா? எட்டிமரத்துக் கமிர்தம் வார்த்து வளர்த்தாலு மதற்குத் தித்திப் புண்டாகுமா? எப்படியும் பிறர்க் கிதம் பண்ணுவது சாதுவுக்கு முக்கிய தருமம்; ஆகையால் தாங்கள் கேளாமலிருந்தும் இந்த விர்த்தாந்தத்தைச் சொன்னேன்; இனிமே லென்மேற் குற்றமில்லை; ஒருவேளை ராஜா பாமரர்களுடைய புத்தியைக் கேட்டுச் சங்கடப்படும்போது காரியகாரர்மேற் குற்றஞ்சுமத்துகிறா னாதலால் நான் சொன்னேன்" என்றிப்படிச் சொல்லிச் சும்மாவிருந்தது. அதற்

---

Tamanakan replied, "This is indeed short-sighted wisdom from which dangers may befall you. He who rogards the counsel of the wicked disregarding that of the good will subject himself to injury, like the patient who refuses to take proper medicines. It is difficult to find flattering words to be also benevolent. The words of a cut-throat may gratify the ear, but they should not be listened to."

The Lion on hearing this said, "Will he to whom I have granted protection prove treacherous to me? What words are these which you speak? Go away from my presence."

Tamanakan replied, "Can the disposition of the wicked be changed? Can the curled tail of a dog be made straight? Can the *etti* tree produce sweet fruits though it be watered with the nectar? It is the duty of the virtuous to seek the good of others. So I have related these facts though uncalled for. No blame should be attached to me afterwards. Some times if the king is brought into difficulty by the advice of ignorant counsellors, he then blames his ministers. Therefore have I related this. Having said this he remained silent.

குச் சிங்கம், "இதை நான் சஞ்சீவகனுக்குச் சொல்ல வேண்டும்" எனத் தமனகன் "அவனுக் கிதைச்சொன்னு லவன் சாக்கிரதைப்பட்டு வேறே ருபாயத்தாற் பொல் லாங்கு தேடுவான்; ஆகையா லிதை யவனுடன் சொல்லா திருப்பதே யோக்கியம்; ராஜாவின் மந்திராலோசனை யிர கசியமாகவே இருக்கவேண்டும்" என, இதைக்கேட்டு மறு படியுஞ் சிங்கம் "அந்தச் சஞ்சீவகன் விரோதப்பட் டென் ன செய்யமாட்டுவான்? அவன் சாமர்த்திய மெவ்வளவு?" என்று சொல்ல, நரி "நாமவனை யறியமாட்டோம்; அவன் பராக்கிரமமுஞ் சுபாவமு நமக் கெப்படித் தெரியும்; ஒரு வன் குணத்தை யறியாம லவனைச் சேர்க்கலாகாது; சேர்த் தா லொரு சீலைப்பேன் மூட்டுப் பூச்சியைச் சேர்த்து நாச மடைந்தாற்போ லாகும்" எனச் சிங்கம் "அதெப்படிச் சொல்" எனத் தமனகன் "ஒரு ராஜாவின் பஞ்சணையில் மந்தவிசர்ப்பணியென்னு மொருசீலைப்பேன் நெடுநாளாக வாசம் பண்ணிக்கொண் டிருக்கையி லொருநாள் அவன் வீட்டுக்கு டிண்டிப னென்னு மூட்டுப் பூச்சி வந்தது; அதைப்பார்த்துச் சீலைப்பேன் "அப்பா! நீ பொல்லாத வன்; முட்களைப்போன்ற பற்களினாலே தூங்குகிறதற்கு முன்னமே துடுக்காய்க் கடிப்பாய்; நீ சமயந் தெரியாதவ

Then the lion said "I must tell this to Sanjeevakan."

Tamanakan replied—"If he be informed of this, he will devise other means to injure you. Therefore it is wise to keep it from him. Besides the counsels of the king and his ministers ought not to be divulged."

On hearing this, the lion said, "Supposing Sunjeevakan becomes inimical, what injury can he do? What is his ability?"

To which the jackal replied, "We do not know him. What do we know of his valor and temperament? It is dangerous to keep company with one of whose disposition we are ignorant. If we do this, we shall fare as the white louse which took a bug into its company and in consequence perished."

"How was it?" demanded the Lion. To which Tamanakan related thus:—

"There lived for a long time, in the bed of a king, a white louse called Mandavesarpany. One day there came to the bed a bug called Dindibhan. The louse on seeing the bug said harshly, "Sirrah, thou art wicked; thou wilt with thy teeth, sharp as thorns, rudely bite before one is asleep. Since thou art one who

ஞதலால் ராஜசயனத்திலிருக்கத் தக்கவனல்ல; இவ்விடம்
விட் டோடிப்போ" என்று கடுகடுத்துச் சொல்ல, மூடு "நா
னப்படிச் செய்யவில்லை; நீ சொன்னபடியே கேட்பேன்"
என்று காலில் விழுந்து பிரார்த்திக்கச் சீலைப்பேன் மன
திரங்கி "நீ வெடுக்கென்று கடியாமல் நித்திரைசெய்யப்
பார்த்து மெத்தெனக் கடித்துக் கொஞ்ச ரத்தங் குடித்
திரு" என்று சொல்ல, அப்போ தந்த மூட்டுப்பூச்சி நல்
லது என்றிருந்து பிறகு ராஜா விழித்திருக்கும்போதே
சுறுக்கென்று கடிக்க, ராஜன் திடுக்கென் றெழுந்திருந்
தென்னமோ கடித்ததென்று சோதனைகாரருடனே சொல்
ல, அவர்கள் விளக்கைக்கொண்டு சோதிக்க, மூடு கட்டிற்
சந்தி லொளித்துக் கொண்டது; அதற் கிடங்கொடுத்த
சீலைப்பே னகப்பட்டது; அவர்க ளதனை "நீ யல்லவா வெங்க
ளிராஜனைக் கடித்தாய்" என்று நசுக்கிக் கொன்றார்கள்.
ஐயோ! வகைதெரியாம லிறந்தது. ஆகையா லொருவன்
குணத்தைத் தெரிகிறதற்கு முன்னமே யவனுடன் சகவா
சம் பண்ணலாகாது" எனச் சிங்கங் கேட்டு "அந்தச் சஞ்
சீவகனுடைய துஷ்டசுபாவ மின்னபடியென் றெனக்குத்
தெரிந்தா லப்போது நிசம்" என்று சொல்லத் தமனகன்

---

knowest not opportunities, thou art not fit to live in the king's bed; so quit this place immediately."

The bug prostrating himself with reverence at the feet of the louse, replied, "I will not do so, but will abide by your directions."

The louse pitying him said, "Well, you should not be impatient, but wait till one slumbers, then bite gently and be content to take a small quantity of blood." Then the bug conceded to this, but soon afterwards while the king was yet awake, he bit him sharp. The king startled from his bed, and addressing his servants, said, "something has bitten me." On the servants examining the bed with lamps, the bug hid himself in the joint, and the white louse who had given him permission to reside there, was found and instantly seized by the servants, who said, "Are you not the person who has bitten our king?" and immediately crushed him to death. Alas! the white louse died for want of cir cumspection. Therefore it is not wise to receive one into our company before knowing his disposition."

On hearing this, the lion said, "If I should be fully convinced of the evil nature of Sunjeevakan, then shall I believe."

"அந்த வெருது உம்மைக் கொல்ல நினைத்துத் தன் கொம்புகளை முன்னிட்டுக்கொண் டும்முடைய சந்நிதியிலே வரும்போது தங்களுக்குத் தெரியவரும்" என்று சொல்லி விட்டு, எருதினிடத்திற்குப் போய் அங்கே தன்மனதில் மிகவும் விசனமிருக்கிறதாகத் தோற்றுவித்தது. அப்போது சஞ்சீவகன் "மித்திரா! சுகமா? என்று கேட்கத் தமனகன், "சேவகனுக்குச் சுக மெங்கே யிருந்துவரும்? சம்பத்தும் விபத்துங் கூடவே யிருக்கின்றன; ராஜாவுக்குப் பிரியமா யாரிருக்கிறார்கள்? யாசகன் சம்மானத்தை யடைவானோ? இந்தக்கால மேது? தனக்கு மித்திரன் யார்? தன் வலி யெவ்வளவென் றெப்போதும் விசாரித்துக் கொண்டிருக்க வேண்டும்" என, இதைக்கேட்டுச் சஞ்சீவன் "இப்படி ஏன் சொல்லுகிறாய்?" எனத் தமனகன் "இராஜகாரியத்தி லுண்டாகிய வஞ்சகத்தை மற்றொருவரோடு சொல்லலாமோ? ராஜாவறிந்தாற் கொல்லுவான்; ஆனாலும் நீயென் நம்பிக்கையாலே சிங்கத்தோடு சிநேகம் பண்ணினதினா லுனக்குச் சொல்லுகிறேன்; அந்தச் சிங்க முன்மேன் மிகவுங் கோபங்கொண் டுன்னைக் கொன்று தன்னுடைய சேனைக்கெல்லா நல்ல விருந்திட நினைத்திருக்கிறது" என்று சொல்ல, அதைக் கேட்டவுடனே சஞ்சீவகன்

---

"You will know the truth said Tamanakan, "when the bull comes into your presence with his horns directed against your life."

Having said this, he left the lion and went to the bull, putting on an appearance of great distress. Sunjeevakan, on seeing him, saluted him and inquired after his happiness. Tamanakan replied, "Whence can servants derive happiness? Fortune and misfortune dwell together. Who can at all times please a king? Is a beggar ever respected? What a time is this? One should always inquire, who is his true friend and what is the extent of his own power?

Sunjeevakan inquired why he spoke in such a manner.

Tamanakan replied, "is it safe to reveal the treachery of the king. If he knows it he will kill the betrayer. I will however tell it to you, because it was through my assurance that you sought friendship of the lion. The lion is very angry with you and intends to kill you, and thereby entertain his army well"

வருத்தத்தோடு மாலோசித்துக்கொண் டிருந்தது. தமனகன் "வேறே யாலோசனை யென்ன? யாதொன்று சம்பவித்ததோ அதற்குத் தக்கதாக நடக்கவேண்டும்" எனச் சஞ்சீவகன் "நீ சொன்னதெல்லாஞ் சரிதான்; உலகத்திலுமப்படியே யிருக்கிறது; சாதாரணமாய் ஸ்திரீகள் துர்ச்சனர்களுக்கு வசமா யிருக்கிறார்கள்; ராஜாக்கள் துஷ்டர்களைப் பரிபாலிக்கிறார்கள்; துஷ்டனுடனே மிகவுஞ் சிநேகித்தா லவன் விபரீதமாக நினைக்கிறான்; குருடனுக்குக் கண்ணாடியைக் காண்பித்தாலுஞ் செவிடன்காதி லுபதேசித்தாலு மவர்கள் விபரீதமாகவே நினைப்பார்கள்; துஷ்டனப்படியே விபரீதமாக நினைக்கிறான்; எப்படிச் சந்தனமரம் பாம்போடுகூடி யிருக்குமோ, எவ்வாறு தாழை முட்களோடு கூடியிருக்குமோ, அப்படியே பெரும்பாலும் ராஜாக்கள் துஷ்டர்களாற் சூழப்பட் டிருக்கிறார்கள்; ஆகையா லிப்படிப்பட்ட பொல்லாங்கு நமக்கு நேரிட்டது" என, இதைக்கேட்டுத் தமனகன், "அந்தச் சிங்கத்துக்கு வாய்ப் பேச்சுமாத்திரந் தித்திப்பே யல்லாமல் மனது மிகவும் கடூரந்தான்; பூர்வம் பிரமா கடலைக் கடக்கிறதற்குக் கப்பலை யுண்டாக்கினான்; இருட்டைப் போக்கடிக்க விளக்கைச் சிருஷ்டித்தான்; யானையை யடக்க வங்குச நிருமித்தான்; துஷ்டர்களுடைய மன தடங்கும்படி யாதொன்றுஞ் செய்

---

On hearing this, Sunjeevakan was greately troubled, and meditated with sorrow.

Tamanakan said, "What other consideration is there? One should conduct himself wisely according to circumstances ?"

Sunjeevakan replied, "What you said is very true. It so happens in the world. The women generally yield to the desires of the lewd, and kings harbour wicked men. A wicked man suspects the sencerity of his most faithful friends. When a looking-glass is presented before the blind or good instruction is wispered into the ears of the deaf, they regard it as something adverse. So it is with the wicked. As sandal trees are surrounded by snakes and Tazhai trees by thorns, so are kings always surrounded by evil-doers; consequently such an evil has befallen us."

Tamanakan answered, "the words of the lion are sweet, but his heart is cruel. In times past, ships were made by Brahma in order to cross the ocean, light was created in order to dispel darkness, and a goad was made to curb the elephant. But alas! to subdue the minds of the wicked, nothing has been done."

யாமற் போனான்" என, இவையெல்லாங் கேட்டுச் சஞ்சீவகன், பெருமூச்செறிந்து, "பெரிய பொல்லாங்கு நேரிட்டது; இதைத் தப்பித்துக்கொள்ள வெனக்குச் சாமர்த்தியமில்லை; எமனுடையவாயி லகப்பட்டவ னெப்படித் தப்பிப்போவான்? எப்படி யொருகுற்றமு மில்லாத வொட்டையைக் காக முதலானவை கூடிக் கொலைசெய்தனவோ வப்படி வஞ்சனை பண்ணுகிற துஷ்டர்க ளோரிடத்திற் குற்ற மில்லாமலே கொலைசெய்கிறார்கள்" என, "அதெப்படி யண்ணே? சொல்லவேண்டும்" என, சஞ்சீவகன் சொல்லுகிறது:—

"ஒரு காட்டின் மதோற்கட னென்கின்ற வொரு சிங்கம் நரியையும் புலியையுங் காக்கையையுந் தனக்கு மந்திரிகளாக வைத்துக்கொண் டரசாண்டு வருகிற காலத்தி லொருநா ளந்தக்காட்டி லொட்டக மொன்று வழிதப்பி வரக்கண்டு, மந்திரியாகிய காக்கை "நீ யார்" என்றுகேட்க, அந்த வொட்டகம் "நான் வழிதப்பி வந்துவிட்டேன்" என்று சொல்ல, அதை யிட்டுக்கொண்டுபோய்ச் சிங்கத்தினிடத்தில் விட்டு நடந்த காரியத்தைச் சொல்ல, அதைச் சிங்கங் கேட்டுப் "பயப்படாதே, நம்முடைய மந்திரிகளுடனே நீயு மொருமந்திரியா யிரு" என் றதற் கபயங் கொடுத்து, மந்தானகனென்று பெயரிட்டு, தன்னிடத்தில் வைத்துக் கொண்டது. இப்படி வெகுகாலஞ் செல்லுகையி லொருநாட் சிங்கத்துக்குச் சரீர மசவுக்கியமா யிருந்த

Sunjeevakan, hearing all this, sighed and said "A great evil has come upon me, and I am not able to escape from it. How can a person who is in the mouth of Yama (the fangs of death) escape? Wicked men destroy the innocent, just as the crow and others killed an innocent camel."

Tamanakan then requested Sunjeevakan to tell him how that was; to which he replied thus:—

In a certain forest there was a lion whose name was Mathotkadan who had three ministers—a jackal, a tiger and a crow. One day while the lion was exercising the duties of his government, the crow finding a camel wandering (in the forest), asked him who he was. The camel replied that he came there, having lost his way. Upon this, the crow introduced him to the lion and related the circumstances of his case; whereupon the lion assured him of his protection and favor, made him a minister, and called him Mantanacan. A long time after this, one day the lion being indisposed, called his three ministers

படியினால் அம் மூன்றையு மழைப்பித்து "இன்றைக் கெம்
மா லிரை சம்பாதிக்கக் கூடாது; நீங்கள் போ யெனக்
கேதாவ திரை கொண்டு வரவேண்டும்; பிறகு நான் தின்று
மிகுந்ததை நீங்கள் தின்னலாம்" என, இம்மூன்றுஞ் சிங்
கத்தின் கட்டளைப்படி யந்தக் காட்டிற்போ யிரைதேடிப்
பார்த் தகப்படாமையா லப்போது தங்களோடு கூட
விருந்த மந்தானகனைத் தூரத்திற் போம்படி யொருவேலை
யிட்டுக் காகம் மற்றை யிருவரையும் பார்த் தின்றைக்கு
நாம் மந்தானகனைக் கொல்லுவோம்; புல்லுந் தழையுந்
தின்னுகிறவனா லெமக்குப் பிரயோஜன மென்ன?" என,
மற்றிரண்டும் "சரிதான், அவனுக்கு நம்முடைய இராஜா
வபயங் கொடுத்திருக்கிறதினா லவனை நாமெப்படிக் கொல்
லலாம்? கூடாது" என, காகம் "நாமின்றைக்குச் சிங்கத்
தின் கையால் தப்பாமல் மரண மடைவோம், பசியெடுத்
தால் தாயும் பிள்ளையை விட்டுவிடுகிறாள், பாம்பு தானிட்
ட முட்டைகளைக் குடிக்கிறது, ஆசையாற் பசியாற் பீடிக்
கப்படுகிறவ னெந்தப் பாதகந்தான் பண்ணமாட்டான்?
இது வுங்களுக்குத் தெரிய வில்லையா" என்று சொல்லி
யுடனே சிங்கத்தண்டை போய்க் காகம் "சுவாமி! இன்
றைக் கெதுவுங் கிடைக்க வில்லை" என, "இதற் கென்ன
உபாயம் பண்ணலாம்?" என்று சிங்கங் கேட்கக் காகம்

---

together and told them that he could not get food for himself that day, and therefore wished them to bring him food, adding that they should feed upon what was left from his table. The three ministers, in obedience to the lion, roamed about the forest in quest of prey but could find nothing. Then they artfully sent the camel away upon a certain business, and when he had gone, the crow said to the other two ministers, "Let us kill the camel to-day; of what use to us is he who feeds on grass and vegetables?"

The two others replied, "It was true; but as our master has given him his protection, it is impossible for us to kill him. To which the crow replied, "we shall certainly be killed to-day" by the lion; a mother when pressed with hunger will abandon her own offspring; a female serpent when distressed for food will devour her own eggs; what crimes will he not commit who is pinched with hunger? Know you not this."

The crow then went to the lion and said, "My lord! we have not been able to procure any food this day."

Then, what measures can we adopt?" demanded the lion.

“ தங்கள் சுவாதீனத்தி லிரை யிருக்கையில் வேறே யாலோசிப்பானேன் ? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய் தேடலாமா ?” எனச் சிங்கம், “என்னிடத் தாகார மெங்கே யிருக்கிறது ?” எனக் காகம் “மந்தானகனென்னு மொட்டை யிருக்கிறதே? ” என, இதைக்கேட்டுச் சிங்கம் பூமியைக் கையால் தொட்டுச் “சிவசிவா” எனக் காதின்மேற் கையை வைத்து, “நானவனுக் கபயங் கொடுத்திருக்கையில் நீங்க ளிப்படி விபரீத வார்த்தை சொல்லலாமா? அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடலாமா ? பசு, பூமி, தானிய மிவற்றின் தானத்தைக் காட்டிலும் அபயதான மதிகம்; அசுவமேத புண்ணியத்தைக் காட்டிலு மிந்தப் புண்ணிய மதிகமென்று சாஸ்திரமு மிருக்கிறதே” எனக் கேட்டுக் காகம் “ஐயாவே ! என்னொரு விண்ணப்பத்தைக் கேட்டருளும் ; ஒரு குலத்துக்காக வொருவனை விட்டுவிடலாம் ; ஒரு கிராம ரக்ஷணைக்காக வொரு குடும்பத்தைத் துறக்கலாம்; ஒரு தேச பாலனத்தின்பொருட் டொருகிராமத்தைக் கைவிடலாம்; தன் நிமித்தம் பூமியை விடலாம்; ஆகையா லிது தப்பன்று; ஆகிலு மவனைத் தாங்கள் கொல்லவேண்டாம்; நாங்களே கொல்லுவோம்; இல்லாவிட்டா லவனே சாவ வுடன்பட் டென்னைக் கொல்லுங்க

---

The crow replied, “When it is in your own hands, why shonld you search for it elsewhere? Why should you seek for ghee when you have butter in hand?”

“Where have I the food with me?” asked the Lion.

“There is the camel named Manthanagan!” answered the crow. The Lion on hearing this, touched the ground and then his two ears, and exclaimed, “May gods preserve me. How can you propose such a thing as this, when I have given the camel the assurance of my protection? Is it proper to expose to injury one who has taken refuge in our kindness? Neither the gift of a cow, nor the gift of lands, nor the gift of rice is to be compared with the assurance of protection which men consider to be the greatest of all gifts? The shastras declare that the merit of protecting one is greater than that of performing the Aswamedha sacrifice.”

Hearing this, the crow said, “My lord, I pray then once more to hear me: a single individual may be given up to save a whoe family; a whole family may be relinquished to save a whole village; a village may be secrificed for the safety of a whole country. A man may for his own support renounce the earth. Therefore it is no sin. You need not kill him. We will ourselves kill him or he shall himself offer his own body, and then

ளென்பான்; அப்போது நாங்கள் கொல்லுவோம்" என்று சொல்லச் சிங்கஞ் சும்மா விருந்தது. பிறகு காக மதுவே கட்டளையாக நினைத்துக்கொண்டுபோய், மற்றை மூன்றை யு மிட்டுக்கொண்டு சிங்கத்தின் கிட்டவந்து, "சுவாமி! இன்றைக் கொன்று மாகார மகப்படவில்லை; அதனா லுங்க ளுக் கின்றைக்குப் பட்டினி யிருக்கலாயிற்று; அப்படி யிராம லென்னைப் புசிக்கலாம்" எனச் சிங்கம் "நீ யெவ் வளவு? உன்னை யுண்டதினு லென்பசி தீருமா? உன்னுட லென் கடைவாய்ப் பல்லுக்குப் போதுமா?" என்று கேட்க, நரி, "அப்படியானு லென்னைத் தின்னும்" என்று நிற்க, "நீயு மப்படிதான், நீ யதிகமல்ல" என்று மறுக்க, புலி "இவ் விருவரிலு நான் பெருத்திருக்கிறதினு லென்னைப் பக்ஷித்துப் பசிதீரும்" எனச் சிங்கம் "நீதா னெனக் கெவ் வள விரை, உன்னைப் பெரிதாக நினைத்துக்கொண் டிருக் கிறையோ" என்று சொல்ல, வொட்டக மிதைப்பார்த்து "சுவாமி! நா னெல்லாரைக் காட்டிலும் பெருத்திருக்கவில் லையா? சித்தமானு லென்னைக் கொல்லலாம்" என, இதைக் கேட்டவுடனே புலியு நரியும் பாய்ந்துவிழுந் தந்தக்ஷண மே, ஐயோ! அதைக்கொன் றெல்லாம் புசித்தன. ஆகை யா லெங்கே மிகவுங் கீழ்க ளிருக்குமோ அங்கே சுகமிரா து. பிராணனுக்கு நாசம் வருமென்றே நினைக்கவேண்டும்.

---

we will kill him. The lion, upon this, made no answer.

The crow taking the lion's silence, as is tacit order, went away and returned with the other three to the lion. As he approached him he said, "My lord! we could find no food to-day, thou art therefore reduced to hunger, your majesty may feed upon me" "How big art thou?" said the lion. "Can thou serve to satisfy my hunger? Art thy body sufficient to employ my grinders?"

Upon this, the jackal offered himself, and the lion made the same answer to him. Then interrupted the tiger, "I am bigger than these two, therefore prey upon my body and appease thy hunger. The lion said, "How insufficient art even thou for me? Dost thou think thyself very big?"

Upon this the camel broke out and said, "My lord! am I not bigger than these three? Kill me, if thou please." He had no sooner said this, than the tiger and the jackal fell upon him. Alas! they killed him and ate him up.

Therefore said Sunjeevakan, wherever there are wicked persons, there is no safety. We should necessarily fear for our

இவ்விடத்திலு மப்படியே யிருக்கிறது. துஷ்டர்கள் கையி லகப்பட்டுச் சும்மா இறக்கிறதைக் காட்டிலுஞ் சண்டை செய்வதே யோக்கியம். சண்டைமுனையிற் செத்தாற் சொர்க்க மடைகிறான். சத்துருவைச் ஜயித்தா விராச்சிய மடைகிறான். ஆதலாற் சூரர்களுக்குச் சாவும் பிழைப்புஞ் சமானம்". என்றது. அதைக்கேட்டுத் தமனகன் "பகை வர்களுடைய பராக்கிரமத்தை யறியாம லெவன் பகைத் துக் கொள்ளுகிறானோ அவன் சமுத்திரஞ் சிட்டுக்குருவி யினா லெப்படி அவமான மடைந்ததோ அப்படியே யவ மான மடைவான்" என, அப்போது, "தம்பி! அதெப் படி?" என்று சஞ்சீவகன் கேட்கத் தமனகன் சொல்லு கின்றது:—

"சமுத்திரக்கரையி லிரண்டு சிட்டுக்க ளாணும் பெண்ணுமா யொரு செடியின்கீழ்க் கூடுகட்டிக்கொண் டிருக்கும்போது பெட்டை ஆண்பறவையைப் பார்த்து "எங்கே முட்டையிடலாம்" என்றுகேட்க, ஆண் "இது நல்லவிடம்" என்று சொல்லப் பெண் "இந்தக் கடற் கரையி லொருவேளை யபாயநேரிடும்" என, ஆண்சிட்டு, "சமுத்திரத்திற் கென்னுடனே பகைத்துக் கொள்ளச் சாமர்த்தியமில்லை" என, பெண் உனக்குஞ் சமுத்திரத்திற் கும் வெகு தாரதம்மிய மிருக்கின்றதே; எவன் தன்வலியும்

---

lives. Such is the nature of this case. Therefore it is better to fight with him than to suffer ourselves to be taken by the wicked and murdered without defence. He who dies in battle attains heaven; he who overcomes his enemy gains a kingdom. So to the brave, death and life are equal".

Thamanakan then replied;— "He who opposes without knowing the strength and valor of the enemy will surely be put to shame, just as the sea was by the two little birds".

"How was it" asked Sunjeevakan, and Thamanakan replied as follows;—

Two birds, male and female, built a nest under a shrub by the sea-shore. The female, one day asked her mate where she should lay her eggs. To which, the male said, "The nest we have here is a good place;" but the female replied "that dangers may sometimes arise, by the violence of the sea." To this the male replied, "The ocean has not the power to resist me."

"There is a great difference" said the female, "between your power and that of the sea. He who does not consider his

பிறன்வலியும் பார்க்கிற தில்லையோ அவன் விபத்தை யடைவான்; எவன் பார்க்கிறானோ அவன் சுகமடைவான்; மேலுந் தனக் கிதம்பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவன் ஆமை யெப்படிக் கழியைவிட்டு மரண மடைந்ததோ அப்படியே மரணமடைவான்" என, ஆண் "அதெப்படிப் பெண்ணே சொல்" எனப் பெட்டைக் குருவி சொல்லுகின்றது:—

"விகட சங்கடமென்னு மிரண் டன்னமுங் கம்புக்கிரீவனென்னு மாமையுஞ் சிநேகமா யொரு குளத்தில் வாழ்ந்துகொண் டிருக்கையில் அன்னங்கள் இப்போ திங்கே மழை பெய்யாமையாற் குளம் வற்றிப்போ மாகையா லினி வேறொரு குளத்திற் போய்ச் சேர்வது யோக்கியமென்று நினைத்து, இதை நம்முடைய சிநேகிதனுக்குச் சொல்ல வேண்டுமென் றாலோசித் தப்படியே யதற்குச் சொல்லும் போது, கம்புக்கிரீவன் "நீங்கள் செப்பட்டையினாற் பறந்துபோவீர்கள்; நான் வேறோரிடத்திற் கெப்படிப் போவேன்?" என, விகடசங்கடர்கள் "எங்கள் வார்த்தையில் நம்பிக்கை வைத்து ஸ்திரமா யிருப்பையானா லுன்னையுங் கொண்டுபோவோம்; கொண்டு போகையில் வழியிலே தொன்றும் பேசாம லிருந்தாற் போகக் கூடும்" என்று சொல்லி, ஒரு கழி கொண்டுவந் தாமையைப் பார்த்து

---

strength when compared with that of his enemy, will suffer disappointment; but he who is wise in this respect, will eventually triumph. Moreover, he who does not listen to the advice of his friend shall suffer like the tortoise who was killed by losing his hold of a stick."

"How was that, my dear?" demanded the male; and the female began to relate thus:—

"Two swans named Vigadam and Sangadam, and a tortoise called Kambukrivan were living in mutual friendship in a pond. The Swans thinking one day that because no rain had fallen for a long time, the pond must soon become dry and that it would be well to seek another pond, resolved to mention the matter to their friend the tortoise. Kambukrivan on hearing them, replied, "You can by your wings easily go to another place, but how can I do it?" To which they replied, "If you would confide in us and be firm as we may direct, we would carry you also; but while we carry you, not even a word should be spoken for your safety depends upon it". Then they brought a stick to the tortoise and said "hold fast the stick

"இந்தக் கழியைப் பல்லினாலே பலமாய்க் கடித்துப் பிடித்துக்கொள்ளு; விட்டுவிடாதே; நாங்களிருவரு மிதை யிருபுறத்திலு மூக்காற் கௌவிக்கொண் டாகாசமார்க்கமாய்ப் போகிறோம்" என்று சொல்லி யந்தக் கொம்பை யிரண்டும் பற்றிக்கொண் டெழும்பிப் பறந்துபோகையில், இதையொரு பட்டணத்துச் சனங்கள் பார்த் ததிசயித்து நகைத்தெல்லோரு மொருமிக்க இதென்ன வொரு கழியையிரண்டு பறவைகள் தூக்கிக்கொண் டதை யாமையாற் பிடிப்பித்துக்கொண்டு போகின்றனவென் றிப்படிப் பேரிரைச்சலிட்டுப் பேசினார்கள். அதைக்கேட்டுக் கம்புக்கிரீவனிந்த விரைச்ச லெங்கிருந் துண்டாகிறதென்று சொல்வதற்கு வாய்திறந்த வுடனே கழியினின்று விடுபட்டுப் பூமியில் விழுந்தது. அப்போ தங்கே யிருந்த புலால் தின்பவர்க ளுடனே யதைக் கொன்று தின்றார்கள். ஆகையால் தனக் கிதம் பண்ணுகிறவர்கள் பேச்சை யசட்டை பண்ணலாகாது. மேலும் யாதொரு காரிய நேரிடுவதற்கு முன்னே தானே யாலோசிக்கிறவனும், வருகிறபோதே யாராய்கிறவனுஞ் சுக மடைவார்கள். இதைவிட் டியாதொன்று வரத்தக்கதோ வஃது வரட்டுமென் றியார் சொல்லுகிறானோ வவன் வந்தபின் காப்போமென்னு மீனைப்போல் நாசமடைவான்" எனச் சேவல் "அதெப்படி" எனப் பெட்டைச்சிட்டு சொல்லுகிறது:—

---

with your teeth, drop it not. We both would hold each end of the stick with our bill and fly in the air" While the two birds were flying accordingly, the people of a certain city seeing this with surprize took a loud laugh and exclaimed "Ah! what is this? Behold, two birds have persuaded a tortoise to take hold of a stick which they hold in the mouth and are bearing it away."

When Kambukrivan hearing this, opened his mouth to inquire whence was this great noise, he lost his hold, and fell off from the stick on the ground below There he was immediately caught and killed by some flesh-eaters who ate him. "Therefore it is not wise to disregard the words of a friend."

Moreover he who previously considers over what is to happen, and he who rightly estimates his present circumstances, may rest in safety. But he who says, 'let come what will and I shall then see to it,' will be destroyed as was the fish called Vantapincappone." The male bird inquired how this was; to which the female replied as follows:—

"ஒரு பெரிய குளத்தில் வருமுன்காப்போனென்றும், வருங்காற்காப்பவனென்றும், வந்தபின்காப்பவனென்றும் மூன்று மீன்க ளநேக நாளாய் வாழ்ந்துகொண்டிருக்கிற நாளி லொருநாள், வலைகாரர் வந் திதில் தண்ணீர் கொஞ்சமா யிருக்கிற தாகையால் நாளை வந் திதி லிருக்கிற மீன்களை யெல்லாம் பிடிப்போ மென்று பேசிக்கொண்டதை வருமுன்காப்பவன் கேட்டுத் தன் சிநேகித ரிடத்திற் குப்போய், "நா மிவ்விடம் விட்டுச் சீக்கிரமாகப் புறப்படவேண்டும்; இனி யிங்கே நிமிஷநேரமு மிருக்க லாகாது" என, இதைக்கேட்டு வருங்காற்காப்பவன் "நமக்கு விபத்து வரும்போது பார்த்துக்கொள்ளுவோம்; காரிய நேரிடும்போ ததற்குத் தக்கதாகப் புத்தியுண்டாகும்" எனப் பிறகு வந்தபின்காப்பவன் "தன்னிடத்தை விட்டுவிடுகிறதுதான் மூடத்தனம்; எது வரத்தக்கதோ வது வரவே வரும்; யாதொன்று வரத்தகாததோ வதை நாம் வருந்தி யழைத்தாலும் வாராது; ஆதலால் நான் வரமாட்டேன்" என்று சொல்லி யந்தக் குளத்திலேயே யிருந்தது. பிறகு வருமுன் காப்பவன் வேறிடத்துக்குப் போய் விட்டது. மறுநா ளுதயத்திற் செம்படவர் வந்து வலையெறிந்து மீன்களைப் பிடித்தார்கள்; அதில் வருங்காற்காப்பவ னகப்பட்டுச் செத்தாற்போற் பாசாங்கு பண்ணிக்கொண் டிருந்தது.

---

There lived for a long time in a large pond three fish by the names of Varoomuncappone, Varoonkalcappone, and Vanthapincappone. One day there came some fishermen and said among themselves that as the pond was then shallow, they would come to-morrow and catch all the fish in the pond. Hearing this the fish Varoomuncappone addressed his friends as follows :—

"We should quickly quit this place; we should not stay here a minute longer."

Upon this, the fish Varoonkalcappone replied, "we shall see when danger overtakes us. When evil befalls, means of escape will of themselves suggest." The fish Vanthapincappone said, "it is foolish for one to quit his abode; for whatever is destined to happen will surely come to pass, but whatever is not, will never come to pass though we trouble ourselves and solicit it; I will not therefore go with you." So saying, he stayed in the pond. But Varoomuncappone went away to another place.

The next morning the fishermen came, cast their nets and caught the fishes. In this draught was caught Varoonkalcappone, who pretended to be dead. The fisherman thinking he was

அதைப்பார்த்து இது செத்ததென் றெண்ணிக்கொண்டு செம்படவ னதைக் கரைமேற் போட்டு வைத்தான். இதற்குள்ளே யது வவன் கண்ணுக்குத் தப்பித் தண்ணீரிற் புகுந்தொளித்துக் கொண்டது. பிறகு வந்தபின்காப்பவன் வலைக்கு ளகப்பட் டிப்போ தென்ன செய்யலாமென் றங்குமிங்கு மோட இதைச் செம்படவன் கண்டு, தடியா லடித்துக் கொன்றான். மற்றிரண்டுஞ் சுக மடைந்தன. ஆகையா லெதையு மாலோசித்துச் செய்யவேண்டுமென்று சொல்லிப் பிறகு புருஷன் சொற்படி யங்கேதானே முட்டையிட்டது. அப்பொழுது சமுத்திர மதன் வல்லமையை யறியாமல் முட்டைகளை யடித்துக்கொண்டு போயிற்று. சிட் டதைப்பார்த்து வெகு துக்கமாய்ச் சேவலுடன் "சுவாமி! தங்களுக்குப் பெரிய சங்கடம் வந்தது; முட்டைகளைச் சமுத்திரங் கொண்டுபோயிற்று; இப்போ தென்ன செய்யலாம்?" எனச் சேவல் "நீ பயப்படாதே, நான் முட்டைகளைக் கொண்டு வருவே னென் றிராணியைப் பார்" என்று சொல்லி எல்லாப் பறவைகளையுங் கூட்டிக் கொண்டு கருடனைச் சரணமடைந்தது. கருட னதை விஷ்ணுவுக் கறிவித்து "அப்பறவை மிகவும் வருத்தப்படுகிறதாகையா லதன் முட்டைகளைக் கொடுப்பிக்க வேண்டும்"

---

dead, threw him on the shore, and left him. In the meantime the fish escaped and hid himself in the water. Afterwards the fish Vanthapincappone having been caught in the net, ran to and fro, saying 'what can be done'? The fisherman seeing this struck him with a stick and killed him. The other two saved themselves.

Therefore said the female bird, "every thing ought to be done with circumspection," and she laid her eggs there as directed by her mate. Then the sea, not knowing the ability of the bird, swept away the eggs with its waves.

The female bird, seeing this, addressed the male with sorrow thus:—

"My lord, a great disaster has happened to you; the sea has carried away all my eggs. What shall now be done?"

"Fear not," said the male "I will restore the eggs to you, you will know my ability." So saying, he gathered all the winged tribes and went to Garuda and solicited his protection.

Upon this, Garuda represented the case to Vishnu and entreated him to relieve the distress of the bird by causing the eggs to be returned. Vishnu then commanded th sea to deliver

என, விஷ்ணு சமுத்திரத்தைப் பார்த்து "அதன் முட்டைகளைச் சீக்கிரமாய்க் கொடு" என்று கட்டளை யிட்டவுடனே, சமுத்திர முட்டைகளைக் கொண்டுவந்து கொடுத்தது. ஆகையாற் சத்துருக்களுடைய பராக்கிரம மறியாமற் பகைத்துக் கொள்ளலாகாது. அந்தச் சிங்கத்திற் ககங்காரத்தினால் தெரியவில்லை" எனக் கேட்டுச் சஞ்சீவகன் தமனகனைப் பார்த்து "நல்ல தந்தச் சிங்கத்தின் சண்டைக் குறிப் பெப்படி யிருக்குஞ் சொல்" எனத் தமனகன் "எப்போ தவன் காதுகளை நெறித்துக்கொண்டு வாலைத் தூக்குவானோ வப்போது கொல்ல நினைத்தானென் றறியவேண்டும்; அக்காலத்தி லப்படியே நீயு மவனுக்கு முன்னே யிருக்கவேண்டும்; சுத்த வீரனாகிய வுனக்குத் தெரியாதா? எல்லாந் தெரிந்தவர்களுக்குச் சொல்வானேன்? எனச் சொல்லிவிட்டுத் தமனகன் மறுபடி கரடகனிடத்திற்குப் போயிற்று. அப்போது கரடகன் "என்னவாயிற்றுச் சொல்" எனத் தமனகன் "காரிய முடிந்தது; இருவருடைய சிநேகத்தின்வாயில் மண் விழுந்தது; இப்போது நான் சிங்கத்தின் கோபக்குறி யிப்படி யிருக்குமென்று சஞ்சீவகனுக்குச் சொன்னபடியே செய்விக்கிறேன்" என்று பிங்களனிடத்திற்குப்போ யப்படியே யதைச் செய்வித்தது. பிறகு சஞ்சீவகன் சிங்கமிருக்கு மிடத்திற்கு

---

up the eggs, and the sea obeyed accordingly. Therefore, it is not wise to make war without knowing the power of the enemy.

Sangevakan, hearing from Tamanakan that the Lion did not understand this owing to his self-conceit, asked him what were the indications of battle in the Lion, to which Tamanakan thus replied:—

"When the Lion pricks his ears and raises his tail, he must be understood to have purposed to kill you. You should then act in the same manner. Do not a great hero like you know this? Of what use is instruction to those who know all things?" Having said this Tamanakan went back to Karadakan who, seeing him, asked "How stands the matter."

Tamanakan replied, "It is done. The friendship of the two has crumbled to dust. I will now go to the lion and induce him to exhibit such signs of anger to Sanjeevakan as will be in accordance with what I have led him to expect." Having said this, he went to Pincalan and did so.

வந்து பார்க்கும்போது தனக்குத் தமனகன் முன் சொன்னபடியே யிருக்கக் கண்டு, மிகவும் விசனமடைந்து, பராக்கிரமத்திலேயே பிராணனை விடவேண்டு மென்று நிச்சயித்து யுத்தத்திற் காரம்பிக்கவே யிரண்டுக்கும் பெரிய சண்டை விளைந்தது. கரடக னதைப்பார்த்துத் "தமனகா! துஷ்டா! உன் சேர்க்கையால் ராஜாவுக்குஞ் சிநேகனுக்குஞ் சண்டையுண் டாயிற்று; ராஜ நீதியிற் சாம தான பேத தண்டமென்னு நான் குபாயங்களிருக்கின்றன; அவைகளிற் சாமமென்னு முபாய முக்கியமானது; அதனாற் காரிய சித்தி யுண்டாகிறதுபோல மற்றவைகளா லுண்டாகாது; பகை யிருந்தாலுஞ் சாம வுபாயத்தாலேயே போம்; இப்படி யிருக்கையில் நீ ராஜாவைப் பெரிய பொல்லாப்பில் வீழ்வித்தாய்; ராஜாக்களிற் சிலர் ஈனர்களுடைய புத்தியைக்கேட்டுச் சங்கட மடைகிறார்கள்; ஆகையாற் குணவந்தர்களுடைய கூட்டுறவு ராஜாக்களுக் கிருக்கவேண்டும்; கபடியாக விருக்கிற பிரதானி புத்திசாலியானாலு மவ னொருபோதும் ராஜாவண்டையி லிருக்கலாகாது; மற்றும் தானே சம்பத்தை யடையவேண்டு மென்று நினைத்து, ராஜாவினிடத்தில் வேறொருவன் சேரலாகாதென் றிச்சிக்கிறவனும் ராஜாவுக் குபயோகி யாகான்; பலபெயர் சமர்த்தர்கள் ராஜாவினிடத்தி

---

Sometime after this, Sanjeevakan came to Pincalan and finding him in the attitude represented to him before by Tamanakan, he was grieved and putting himself in an attitude of defence, he resolved to end his life in bravery. So a fierce contest ensued between them.

Karadakan seeing this, addressed Tamanakan in the following words; "Tamanaka! evil one! you have by your company occasioned a war between the king and his friend. Samam (peace), Thanam (tribute), Patham (division), and Thandam (war) are the four principles of politics. Of these Samam is the most preferable; for, it secures the object better than others. Enmity itself will vanish by the exercise of the art of Samam. Since it is so, you have foolishly brought upon our king a great evil. Some kings led away by the advice of vile persons, involve themselves in difficulties. Therefore kings need the company of good persons. A fraudulent minister, though highly talented should not be admitted to the company of kings; and he who cherishes self-interest and looks for gain, and wishes to keep others from enjoying their company will not be useful to them.

யிருந்தால், ராஜா பிரகாசிப்பான்; ஆசைக்காரரும் துஷ்டருமாகிய இவர்களுடைய கூட்டுறவால் ராஜா பிரகாசிக்க மாட்டான்; தன்னைவிட ராஜாவினிடத்தில் வேறொருவ னிருக்கலாகாதென் றியா ரிச்சிக்கிறானோ வவனை ராஜாவுக்குச் சத்துருவென்று நினைக்கவேண்டும்; அப்படியே நீ யிந்தத் தீங்கு விளைத்தாய்; எசமானனுடைய தயை கிடைத்தாற் சேவகர்கள் கர்வியாமன் மிகவு மடக்கமாக விருக்கவேண்டும்; நீ யதைவிட்டு விபரீதமாக நடக்கிறாய்; பிதாவைப்போ லிருப்பான் புத்திர னென்பதை நீ பொய்யாக்கினாய்; இப்போ துனக்கு நா னென்ன சொல்வேன்? கொக்கு குரங்குக் குபதேசம் பண்ணி யெப்படி யிறந்ததோ வப்படி யுன்னாலே நான் மரண மடைவேனென் றெனக்குத் தோன்றுகின்றது" என் றிப்படிக் கரடகன் சொன்னதைக் கேட்டுத் தமனகன் "அதெப்படிச் சொல்" எனக் கரடகன் சொல்லுகின்றது:—

"ஒருநாட் குளிரால் வருத்தப்படுகிற குரங்குக் கூட்ட மின்னும்பூச்சிக் கூட்டத்தைப் பார்த் திது நெருப்பென்று நினைத்துக் குளிர் காய்வதற்காக வதனருகே போயிற்று. அப்போ தங்கே யொரு மரத்தின்மே லிருந்த சுமுகனென்னு மொரு பறவை யிதைப்பார்த்துக் குரங்கினருகே வந்து, "இது மின்மினிப்பூச்சி, நெருப்பன்று" என்று சொன்ன வுடனே யந்தக் குரங்குக் கூட்டத்தி

---

A king shines by having men of ability; but not by having the avaricious and wicked ones. He who desires to have none but himself close to the king, is to be regarded as his enemy. You have, in like manner, brought about this evil. Servants who enjoy the favour of their masters should not grow proud, but be humble and submissive. But you behave contrary to this principle. You have falsified the truth that "As is the father, so is the son." What shall I say to you? As a stork lost his life by giving instruction to a monkey, so I apprehend that I shall lose my life by your folly."

Tamanakan, demanding how this was, Karadakan related as follows:—

"A pack of monkeys distressed by cold, mistaking the glow-worms for sparks of fire, went near to warm themselves. Then a bird named Soomoogan, which had lighted upon a tree near the spot, seeing this, came to the monkeys and undeceived them, saying that those were glow-worms and not fire. Upon this

லொன்று கோபித் தந்தப் பக்ஷியைப் பிடித்து நீ யெனக்கு புத்தி சொல்லுகிறவனு வென்று கல்லி லறைந்து கொன்றது. ஆகையால் துஷ்டர்களுக் குபதேசம் பண்ணலாகாது" என்று கரடகன் சொல்லத் தமனக னொன்றும் பேசாமல் மௌனமா யிருந்தது. மனதின் மிகவும் விசனப்பட்டு "நா னிந்தப் பாதகம் பண்ணினேன்" என்று சொல்ல, மறுபடியுங் கரடகன் "அடா தமனகா! இப்படிக்கொத்த நடக்கையினாலே துஷ்டபுத்தியைப் போல நீயு நாச மடைவாய்" என, அப்போது தமனகன் "துஷ்டபுத்தி யெப்படிக் கெட்டான் சொல்". எனக் கரடகன் சொல்லத் தொடங்கினது:—

"துஷ்டபுத்தி சுபுத்தி யென் றிரண்டு செட்டிப்பிள்ளைகள் பணஞ் சம்பாதிக்கிறதற்காகத் தேசாந்தரம் போனார்கள். அவ்விடத்திற் சுபுத்திக்குப் பூமியி லொரு பணப் புதைய லகப்பட்டது. அதைச் சிநேகத்தினாலே துஷ்டபுத்திக் குடனே சொல்லத் துஷ்டபுத்தி "அந்தத் திரவியத்தை யிங்கேயே புதைத்துவிட்டுக் கொஞ்சம் பணமெடுத்துக்கொண்டு போவோம்" எனச் சுபுத்தி சிநேகத்தினா லதற்குச் சம்மதித்துப் பிற கதிற் கொஞ்சம் பணமெடுத்துக்கொண்டு மற்றைப் பணத்தை யொரு மரத்தடியிற் பள்ளந்தோண்டி யதிலே புதைத்துவைத்துப் பின்பு வீட்டுக்குப் போய்ப் பழையபடி சிநேகமா யிருக்கையி

---

one of the monkeys sprang upon the bird saying, "are you to instruct me?" He then caught the bird and dashed him to death against a stone. Therefore instruction should not be given to the wicked."

Tamanakan, hearing this, was silent; and being pained at heart, he confessed that he had committed a great sin. Upon this, Karadakan said, O Tamanaca! By behaving in this manner, you too would suffer like Thushtaboothy.

How did Thushtaboothy suffer, demanded Tamanacan, to which Karadacan related thus:—

Two young men of Chetty caste, named Thushtaboothy and Suboothy went abroad to acquire money. As they were going along, Suboothy happened to find a treasure there, and on informing Thushtaboothy of it through friendship, he advised him to take a small part of it and bury the remainder underground. Suboothy accordingly confiding in Thushtaboothy's friendship, took a small part of it, buried the remainder at the foot of a tree, and was quiet at home.

லொருநாள் துஷ்டபுத்தி தனியேபோ யந்தப் பொருளை யெல்லா மெடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டான். சிலநாட் கழித்துத் துஷ்டபுத்தி சுபுத்தியைப் பார்த்து "அந்த நம்முடைய திரவியத்தைக் கொண்டுவருவோம்" என, இருவரும்போ யந்தவிடத்திற் பார்க்குமளவி லங் கொன்று மில்லாமையால் துஷ்டபுத்தி மிகவும் வருத்தத் தோடு சுபுத்தியைப் பார்த்து, "இங்கிருந்த பணத்தை நீயே கொண்டுபோனாய், மேலும் கபடமாய் வருத்தப்படு கிறாய்" என்று சொல்லிக் கலகப்பட் டிதை ராஜாவுக் கறி வித்தான். ராஜா நியாயாதிபதியை யழைப்பித் திதைப் பஞ்சாயத்தில் தீர்க்க வேண்டுமெனக் கட்டளையிட, அவ னைந்து நாளைக்குள்ளே தீர்த்துப் போடுகிறே னென்று ராஜாவின் முன்னே கெடு வைத்துக்கொண்டு வந்து பஞ் சாயத்துக் காரம்பித்தான். அப்போது துஷ்டபுத்தி "எனக்குஞ் சாக்ஷி யிருக்கிற தந்தச் சாக்ஷியை யிப்போதே கேட்கலாம்" எனப் பஞ்சாயத்தார் "உன் சாக்ஷியைக் கொண்டு வா" எனத் துஷ்டபுத்தி வீட்டுக்குப்போய்த் தன் தகப்பனுடனே சொல்லுகிறான், "அப்பா! உன்னு டைய வொருபேச்சா லெனக்குப் பதினாயிரம் வராகன் கிடைக்கும்" எனக் கிழவன் "எப்படிக் கிடைக்குஞ் சொல்" எனத் துஷ்டபுத்தி "நீர் மரப்பொந்தி லிராத் திரிக்குப்போ யுட்கார்ந்திருக்கவேண்டும்; அங்கே நியா

---

One day Thushtaboothy went alone, and dug up the treasure and brought it home. A few days after, Thushtaboothy said to Suboothy "Come let us go now and bring home our treasure." So saying, they both hastened to the spot, and not finding the treasure there, Thushtaboothy with apparent regret addressed Suboothy thus: "It is you that stole the treasure, and you still affect to be sorry."

Thus quarelling he reported the matter to the king who sent for the judge, and ordered him to have the matter inquired into by panchayet; and the judge promising to settle the case within five days commenced the inquiry, when Thushtaboothy said, "I have a witness who may now be heard," upon which, the council, ordered him to be produced.

He then ran home and said to his father thus; "Pappa! I can gain 10,000 pagodas by means of a word of yours."

"How?" asked the old man. Thushtaboothy then said You should go to night and conceal yourself in the cavity of a

யாதிபதி முதலானோர் வந்து அங்கிருந்த பணத்தை யார்
கொண்டுபோனார்க ளென்னும்போது, நீர் சுபுத்தி கொண்
டுபோனா னென்றாற் காரியமாகும்" என, இதைக்கேட்
டுப் பிதா "பொல்லாங்கு நேரிடுகிற காரியத்தைப் பண்
ணிச் சுகமடைய வேண்டுமென் றிச்சிக்கிறது கொக்கைப்
போன் மூடத்தனமா யிருக்கிறது" எனத் துஷ்டபுத்தி
" அதெப்படி?" எனப் பிதா சொல்லுகிறான்:—

"தான் பொரிக்கிற குஞ்சுகளையெல்லா மொரு பாம்பு
தின்னப் பறிகொடுத்துக்கொண்டு வருகிற வொரு மூடக்
கொக் கப்போது பொரித்த தன் குஞ்சுகளைக் காப்பாற்று
கிறதைக் குறித் தென்ன செய்யலாமென்று பெண் கொக்
கோடே கூட ஏரி கரையி லுட்கார்ந் தாலோசித்துக்
கொண் டிருக்கையி லக்கொக்கின் சிநேகனாகிய குளிர
னென்னும் பெயரையுடைய நண்டானது கொக்குகளைப்
பார்த்து "இன்றைக் கேன் நீங்கள் வியாகுலமா யிருக்கிறீர்
கள்?" என, அவைகள் தங்கள் விருத்தாந்த மெல்லாஞ்
சொல்ல, குளிர னதைக்கேட் டாண்கொக்கைப்பார்த்து
"நல்ல துனக்குப் பாம்பைக் கொல்லுகிற வுபாய மொன்று
சொல்லுகிறேன்; கீரிப்பிள்ளையின் வளை முதற்கொண்டு
பாம்பிருக்கு மிடமட்டும் மீன்களை யிறைத்து வைத்தாற்
காரியஞ் சித்தியாகும்" என்றது. கொக் கப்படியே செய்
யக் கீரிப்பிள்ளை தன் வளையினின்றும் புறப்பட்டு மீன்களைத்

---

tree and when the judge and others come and ask, "Who carried away the money that was there?" you should reply, "Suboothi did it" and the object will be fulfilled.

The father hearing this, said: "An attempt to reap benefit from a dangerous course will engender evil as did the folly of the stork." "How was that?" demanded Thushtaboothy. The father related as follows:—

"A foolish stork who had the misfortune to have all its young ones devoured by a serpent, was once sitting on the bank of a river with its mate, and consulted together as to how they could preserve their young ones lately hatched."

When there came a crab of the name Kooliran, their friend, who asked the storks why they were sad; and they in reply related their circumstances. Kooliran hearing this, said to the male stork, "very well, I will tell you a device to kill the serpent. Strew fishes along in a line from the hole of a mangoose to that of the serpent and you will succeed." This being done, the mangoose from his hole, went along eating the

தின்று கொண்டேபோய்ப் பாம்பையுங் கடித் தெறிந்து விட்டுக் கொக்கின் குஞ்சுகளையுஞ் சாப்பிட்டது. ஆகையா லிப்படிப்பட்ட வாலோசனை பண்ணலாகாது" எனத் துஷ்டபுத்தி பிதா சொன்னதைக் கேளாம லவனை வலுவி லிழுத்துக் கொண்டுவந்து, மரப் பொந்தி லுட்காருவித்து, விடியற் காலத்தில் நியாயாதிபதி முதலான பேரையுஞ் சுபுத்திமுதலான பேரையு மவ்விடத்திற் கிட்டுக்கொண்டு போய்ச் "சாட்சி யிந்த மரத்தைக் கேளுங்கள்" என்றான். அப்போ தந்த மரத்திலிரும் திங்கிருந்த பணமுழுதுஞ் சுபுத்தியே கொண்டுபோனா னென் றொருசத்தம் புறப் பட்டது. சுபுத்தி யீதென்ன மோசமா யிருக்கிற திங்கே யொரு பிராணியில்லாமல் தொனி யெங்கேயிருந்து புறப் பட்டது? இது தெய்வீகமாக விருந்தால் மெய்யல்லவோ சொல்லவேண்டுமென் றிப்படித் தனக்கு ளெண்ணமிட் டுக்கொண் டந்த மரத்தின்மேலேறிச் சோதிக்கையி லதி லொரு பொந்து காணப்பட்டது. உடனே யிங்கே கிருத் திரம மிருக்குமென் றெண்ணி யங்கே நெருப்பை மூட் டிப் பற்றுவித்தான். உள்ளே யிருந்த கிழவன் பாதி வே கிறமட்டும் பல்லைக் கடித்துக்கொண்டிருந்து, பொறுக்கப் போகாம லலறிக்கொண்டு வெளியே வந்து விழுந்தான். அப்போ தங்கிருந்தோ ரெல்லோரு மிதென்ன விதென்ன வெனக் கேட்கக் கிழவன் "என் பிள்ளை துஷ்டபுத்தி கப டத்தினா லென்னைப் பலாத்காரமாகக் கொண்டுவந் திங்கே

---

fishes, killed the serpent and devoured also the young ones of the stork. "Therefore," said the old man "it is not wise to have recourse to such a plan." But Thushtaboothy without listening to the advice of his father, took and thrust him by force into the cavity of the tree. The next morning, he took the judge and his men, and Suboothi and his men to the tree and pointed to it as being his witness and desired that it should be heard. Then there came a voice from the tree saying that Suboothy himself had taken away all the money. Suboothy thought that there was some stratagem played here. If this voice was divine, it must express the truth." While thus contemplating he climbed up the tree and on searching it, discovered a cavity in it. Accordingly suspecting there was some deception, he immediately kindled a fire in the cavity. The old man who wos within, bore the heat patiently until he was half burnt, when his suffering being too great he screamed aloud and jumped out. "How is this?" exclaimed they all. The old man said that Thustaboothy put him there by force, and then expired.

வைத்தான்'' என்று சொல்லி யிறந்துபோனான். நியாயாதி பதி யதைப்பார்த்து ராஜாவுக்கு விண்ணப்பம் பண்ணப் பிறகு துஷ்டபுத்தி வாயினாலேயே ராஜா வெல்லா மறிந்து கொண்டு அவனைக் கழுவிலேற்றினான்'' என்று சொல்லிப் பின்னுங் கரடகன் தமனகனைப் பார்த்து, "பாம்பை வெகு நாள் வளர்த்தாலு மெதப்படியும் வளர்த்தவனையே கடிக் கும்; ஆகையா லெனக் குன்னிடத்திற் பயந் தோன்று கின்றது; இனிமே லுன்னிடத்தில் தேவதத்தனைப்போல் நடந்து கொள்ளவேண்டும்'' என, அதைக்கேட்டுத் தம னகன் "தேவதத்த னெப்படி நடந்துகொண்டான் சொல்'' எனக் கரடகன் சொல்லுகிறது:—

"ஒரு பட்டணத்தில் தேவதத்தனென்னு மொரு சாவகாரி தான் திரவிய வீனனாய்ப் போனதினால் மறுபடி திரவியஞ் சம்பாதிக்க நினைத்து, தேசாந்தரம்போகப் புறப் படும்போது, தன் வசத்திலிருந்த வாயிர மிருப்புக் கம்பி களை யவ்விடத்திருந்த தன் சிநேகிதனிடத்தில் வைத்து விட்டுப் போனான். போனவிடத்தில் திரவிய சம்பாத்தி யத்தைக் குறித் தநேக வுபாயம் பண்ணியும், பண மகப்ப டாமையால் மீண்டும் வீட்டுக்குவந்து தன்னுடைய இருப் புக் கம்பிகளைக் கேட்டான். வைத்துக்கொண்ட சிநேகி தன் மிகுந்த துராசையினால் "இருப்புக்கம்பிகளை யெலிகள் தின்றுவிட்டன'' என்றான். இவ னிந்த வபூர்வத்தைக் கேட்டு நல்ல திருக்கட்டு மென்று சொல்லி வீட்டுக்குப்

---

The judge reported the circumstances of the case to the king who having learut the truth from Thushtaboothi caused him to be impaled alive.

Having related this story, Karadakan said to Tamanakan, "A serpent, though tamed for years, bites the master himself. Therefore I apprehend evil from you. I must therefore behave towards you like Thavatattan." On hearing this, "How did Thovatattan behave?" asked Tamanakan, to which Karadakan replied thus:—

"There lived in a city a merchant by the name of Thavatattan, who having been reduced to poverty determined to acquire riches, and before he went abroad he deposited 1,000 iron bars in the care of a friend of his and left the city. While abroad he contrived many means for aquiring riches, but they all failed of success. He then returned to his friend and demanded his iron bars; but his friend replied through covetousness that they were all eaten up by rats. On hearing this strange story, he said, "Very well" and went home. Sometime after

போனான். பிறகொருநாட் சிநேகிதன் பிள்ளையை விளை யாடுகிறதற்காக வவனிடத்தி லிருந் தெடுத்துக்கொண்டு போய் மற்றொருவீட்டி லொளித்துவைத்துப் பின்பு சிநே கிதனிடத்தில் வந் துட்கார்ந்தான். அவன் "உன்னிடத்தி லிருந்த வென்பிள்ளை யெங்கே?" எனச் சாவகாரி "உன் பிள்ளையைப் பறவை தூக்கிக்கொண்டு போயிற்று" என் றான். இதை யவன் கேட்டு மிகவுங் கிலேசப்பட்டு இவனை யிழுத்துக்கொண் டேரதிகாரியண்டை போய் "இந் தத் துஷ்ட னென் பிள்ளையைக் கொண்டுபோ யொளித்து வைத்துவிட்டுப் பிள்ளையைப் பட்சி யெடுத்துக்கொண்டு போயிற் றென்கிறான்; என் பிள்ளையை யெனக்குக் கொடுப் பிக்கவேண்டும்" என, அதிகாரி இதைக்கேட்டுச் சாவ காரியை யழைத்து "இவன் பிள்ளை யெங்கே யிருக்கிறது? சொல்" என, அவன் "இவன் பிள்ளையைப் பட்சி கொண் டுபோயிற்று" என, அதிகாரி யிதைக்கேட்டு குலுங்க நகைத்து "இந்த அசம்பவ மிதுவரைக்கு முலகத்தி லில்லை அப்படி யிருக்க நீ யெப்படிச் சொல்லுகிறாய்?" என, அப்போ தவன் "இதோ ராச்சரியமா? எப்படி யிரும்புக் கம்பிகளை எலிக டின்றுவிட்டனவோ வப்படியே யிது வுஞ் சம்பவித்த தாண்டவனே" என, இதைக்கேட்டு நியாயாதிபதி முன் நடந்தவைகளை விசாரித் தறிந்து

---

this, he came one day to the house of his friend and pretending to divert his friend's child, took it from him, and hid it in a neighbour's house; then he came back to his friend and sat down quietly.

When his friend asked him "where is my child?" the merchant coolly replied, "a bird has carried it away."

On hearing this, he felt very anxious about the child and dragging the merchant to the judge said, "this villain having concealed my child somewhere, states that a bird has carried it away: therefore please order him, I pray thee, to deliver up my child."

The judge then asked the merchant, "where is his child?" "A bird has carried it away" replied the merchant.

On hearing this, the judge broke out into a laughter, and exclaimed "an incident strange as this, has never happened in the world. How do you account for this." The merchant replied, "is this a strange thing? As rats ate up the iron rods, so my lord, did this event also happen."

The judge hearing this, enquired into what had passed before

கொண்டு " அவனுடைய விருப்புக் கம்பிகளை நீ கொண்டு வந்து கொடுத்தா லவ னுன் பிள்ளையைக் கொண்டுவந்து கொடுப்பான்" என்றவுடனே யவ் விருவரு மப்படியே செய்து தங்கள் வீட்டுக்குப் போனார்கள்" என் றிப்படிப் பட்ட கதைகளைச் சொல்லிப் பின்னுந் தமனகனுக்குக் கர டகன், " சொன்ன பொருளைத் தெரிந்து கொள்ளாதவன் கல்லுக்குச் சமானம்; அவனுக் குபதேசித்துப் பலனில்லை" என்று சொல்லிக் கரடக தமனக ரிரிக ளிரண்டும் பிங்கள னிடத்திற்குப் போம்போது, சிங்கஞ் சஞ்சீவகனோடு கூடச் சண்டை பண்ணி யதைக் கொன்றுவிட்டு விசனமா யுட்கார்ந் திருந்தது. இதைக்கண்டு தமனகன் ராஜாவைப் பார்த்து, " சுவாமி! தாங்கள் சத்துருவைக் கொன்று துக் கப்படுகிறீர்கள்; இது நியாயமல்லவே, சத்துருவைக் கொல்லவேண்டுமென்று சாஸ்திர மிருக்கிறது; பிதாவா னாலும், பந்துவானாலும், புத்திரனானாலு, மித்திரனானாலு மிவர்களில் யார் தன்னைக் கொல்லப் பிரவிர்த்திக்கிறானோ வவனை ராஜா கொல்லவேண்டும்; சுதந்தரமா யிருக்கிற பெண்சாதியுந் துஷ்ட சிநேகிதனும் விபரீத சேவகனு

---

and said to the man, " the merchant will return your child, if you will first restore his iron bars. " No sooner had the judge passed this decree than the difficulty was settled and they both did accordingly and went home.

Having said this, Tamanakan continued, " he who does not understand the meaning of what is revealed to him is like a stone. There is no use of instructing such a one. "

So saying, Tamanakan took Karadagan to the lion Pincalan and found him sitting in sorrow for having attacked and killed the bull Sunjeevakan.

Seeing this, Tamanakan said to the king "My Lord thou art grieved at having killed thy enemy. This is improper. 'We should kill our enemies,' says the shastras. He who assaults the king, whether he be father, relative, son or friend, the king should kill him. For a selfwilled wife, a wicked friend, a

மசாக்கிருதையான மந்திரியு நன்றியறியாதவனு மிருக்க லாகாது; மேலும் மெய், பொய்; கடுமை, மென்மை, கொலை, தயை, உதாரத்துவம், உலோபத்துவம், பலவழி யாகத் திரவியஞ் சம்பாதித்தல், வெகு பெயருடைய சிநேகித மிப்படிப்பட்ட பல குணங்கள் ராஜாவுக் கிருக்க வேண்டுமென்று ராஜநீதியி லிருக்கின்றன; அப்படியே தாங்க ளிது செய்தீர்கள்" என்று சொல்லித் தமனகன் சிங் கத்தைச் சந்தோஷிப்பித்தது. பிறகு சிங்க மந்தக் காட் டின் முன்போலத் தன் னிராச்சியத்தை யனுபவித்துக் கொண்டு சுகமா யிருந்தது.

முற்றிற்று.

---

perverse servant, a negligent minister, and an un-grateful person should not be suffered to live. Moreover, truth and falsehood sternness and meekness, extirpation and protection, liberality and covetousness, acquisition of riches by various sources and the friendship of many, &c., ought to be the qualities of kings, according to Shastras. Thou hast therefore done right" said Tamanakan, and so comforted the lion.

Thenceforward, the lion led a peaceful life in the enjoyment of his government over the forest.

கடவுள்துணை.

# பஞ்சதந்திரம்.

## அரும்பதவிளக்கம்.

### Page 1.

பஞ்சதந்திரகதை - பஞ்சதந்திரங்களை விளக்கும் கதை. பஞ்ச - ஐந்து, தந்திரம் - உபாயம், அவை பின்னே விளங்கும்.

வரலாறு - வந்தவிதம்.

கல்வியாகிய பொருள் - கல்விப்பொருள், செல்வமாகிய பொருள் - செல்வப்பொருள் ; இரண்டும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

உறைவிடம் — உறைவு - வாசஞ்செய்தல், தொழிற்பெயர், இதற்கு இடம், அல்லது அதனையுடைய இடம் என வேற்றுமைத்தொகையாம்.

பாடலிபுரம் என்பதற்கு பாடலீபுத்திரம், குசும புரம், புஷ்ப புரம் என்கிற பெயர்களும் உண்டு; இது பாலிபோத்ர என்று இங்கிலீஷில் வழங்கும். பாடலி என்பது பாதிரி மரம், அதன் பூவினால் அதற்குப் பெயர் வந்திருக்கிறது.

சுகுணம் - நல்லகுணம் ; சு - நல்லது.

சுதரிசனன் - நல்ல பார்வையுள்ளவன்.

விசனத்தோடும் — இதில் உம் - அசை.

தர்மகுணம் - தருமத்திற்கு உரிய குணம், வடசொற்றொடர்.

இருந்து - இருத்தலால், காரணப் பொருட்டாய் வந்த செய்தெனச்சம்.

என்ன—இந்த வினாவினைக்குறிப்புமுற்று எதிர்மறையைக் குறிக்கும்.

பால்கொடாத எருமைகளை — பசுமாடு பால்கொடாமற் போனாலும் அதைக் காப்பாற்றுவதினாம் புண்ணிய முண்டென்று சாஸ்திர மிருப்பதனால் இங்கு எருமை என்று சொல்லப்பட்டது.

பலனுண்டா — இங்கு ஆகாரவினா எதிர்மறை.

வேதசாஸ்திரம்—வேதமும் சாஸ்திரமும் என உம்மைத்தொகை, இது பால்பகா அஃறிணைப்பெயர்.

ஒரேபிள்ளை — ஏகாரம் பிரிநிலை ; [பலபிள்ளைகள் வேண்டாம் என்றபடி.]

இருந்தால் — இருந்தாலும் எனச் சிறப்பும்மை தொக்கு நின்றது.

இப்படிக்கு—கு-சாரியை, அல்லது ஏதுப்பொருளில் வந்த நான்கனுருபு.

கர்ப்பம் - கரு, அதாவது வயிற்றிலிருக்கும் பிண்டம்.

ஜன்மாந்திரம் - வேறு ஜன்மம் ; [முந்திய ஜன்ம மென்கிறபடி]

ஜன்மாந்திர புண்ணியம் — வடசொற்றொடர்.

இம்மைமறுமைக்கு — உம்மைத்தொகைத் தொடர்மொழிமேல் நான்காம் வேற்றுமை.

புத்திரன் - மகன். [புத் என்னும் நரகத்தினின்றும் நீக்குபவன்.]

பிறக்கிறான் - இது முக்காலத்தினும் ஒத்து நடப்பதாதலின் நிகழ்காலத்தால் கூறப்பட்டது.

2.

தவம் - விரதங்கள்.

சபை - பலர்கூடத்தக்க இடம்.

அல்லவோ—இது பிரசித்தத்தைக் குறிக்குந் தொடர்மொழி.

ராஜசம்—இது முக்கியமாய் டம்பத்தின் மேல் நிற்கும்.

ஒன்றொன்று - தனித்தனி யென்கிறபடி; ஒவ்வொன்று, ஓரொன்று எனவும் வரும்.

பிள்ளை யெண்ணிக்கைக்கு - ஒரு பிள்ளை இரண்டுபிள்ளை யென்கிற கணக்குக்கு; குவ் வுருபு பொருட்டுப்பொருளில் வந்தது.

நீதி சாஸ்திரம் — உலகத்துக்கு ஒப்பநடந்து தன்னைக் காப்பாற்றிக்கொண்டு பிறனை வசப்படுத்தும் உபாயங்களை அறிவிக்குநூல்; இது அர்த்தசாஸ்திரம் அல்லது பொருணூல்.

உபதேசம் - முறையாய்த் தெரிவித்தல்.

மகாபுருஷன் — மஹத் புருஷன் என்னு மிரண்டும் சேர்ந்த வடமொழிப்பண்புத்தொகை;மேன்மையான மனிதன்.

மறுஜனனம் - அறிவில்லாமையினீங்கி அறிவுள்ளவதனால்; ஒரு பிறப்புப் போலு மென்கிறபடி.

சமானமான—இது அறிவை யுடையவர்கள் என்கிற சமுதாயத்தைக் கொள்ளும்.

அதுவரைக்கும்—குவ்வுருபு இடப்பொருளில் வந்தது.

சபதம் - பிரதிக்ஞை.

திகை - திசை.

மாலுமி - கப்பலோட்டுகிறவன்.

மனம் மகிழ்ந்து - மனமானது மகிழ்ப்பெற்று, களிப்படைந்து.

உபசாரம் - வந்தன முதலான மரியாதை.

3.

சோமசன்மா — சோமன் - சந்திரன், சிவனுமாம்; சர்ம என்பது பெயரோடு கூட்டப்படுவதோர் சொல்; இது பிராமணருக்கு உரியது. அரசருக்கு வர்ம என்பதும், வைசியருக்குக் குப்த என்பதும், சூத்திரருக்குத் தாச என்பதும் உரியசொற்கள். சன்ம—ஆரியத்தின்திரிபு.

தன் வீட்டுக் கழைத்துக் கொண்டு போய்—முற்காலத்தில் ராஜகுமாரரும் பிறரும் உபாத்தியாயரிருக்கு மிடத்திலேயே சென்று அவருக்கு அடங்கி வழிபட்டுக் கல்வி கற்பது வழக்கமாதலால் வீட்டுக்கு இட்டுக் கொண்டு போய் என்னப்பட்டது.

கருப்பஞ்சாறு — கரும்பு மென்றொடர்க் குற்றுகரமொழி யாதலின் 'மென்றொடர்மொழியுள்' என்கிற விதிப்படி வன்றொடராகி அம் சாரியை பெற்று முடிந்தது. இகர உகர ஐகார ஈற்று மரப்பெயர்கள் பெரும்பாலும் அம்முச்சாரியை பெறும்.(உ-ம்) புளியங்காய், புன்னங்காய், எலுமிச்சங்காய்.

மித்திரபேதம்—மித்திர - சிநேகிதனை, பேதம் - வேறுபடுத்தல்.

சுகிர்லாபம்—சுகிர்த் - சிநேகிதனை, லாபம் - பெறுதல்.

சந்திவிக்கிரகம்—சந்தி - கூடுதலினால், விக்கிரகம் - சண்டை செய்தல்.

அர்த்தநாசம்—அர்த்தம் - பொருளை, நாசம் - போக்கடித்தல். இது ஸப்தஹானி என்றுஞ் சொல்லப்படும். ஸப்தம் - இடைத்ததை, ஹானி - போக்கடித்தல்.

அசம்பிரேக்ஷிய காரித்துவம்—அசம்பிரேக்ஷிய - நன்றாய் ஆராயாது, காரித்துவம் - செய்யுந் தன்மை.

## 4.

மங்களம் - சுபம், நன்மை.

உண்டாவதாக—உண்டாகக் கடவது; வியங்கோள்.

ஆசிர்வதித்தல் - நற்பேறு சொல்லல், ஆசிர்வாதம் என்பதும் இதுவே.

ஒருகாடு — ஒரு என்பது இங்கே எண்ணைத்தராது இன்னதென்று குறிக்கப்படாதது என்னும் பொருளைத்தரும்.

கோட்சொல்லுதல் - பிறன்மேல் குற்றத்தைச் சொல்லுதல்.

உலோபகுணம் - பிறன்பொருளைக் கவரவேண்டு மென்னுமாசை.

மஹிஷாரூப்பியம் என்பது மகிழாரூப்பியம் எனத்திரிந்தது; எருமைகளால் ரூபிக்கத்தக்கது என்பது அதன்பொருள்.

வர்த்தமானன் - வளர்கின்றவன், இதுவும் வடசொற்றிரிபு.

வர்த்தகன் - சரக்குகளைப் பரவச் செய்வோன். இவன் தொழில் வர்த்தகம் என்று தமிழில் வழங்குகின்றது.

சம்பாதிக்கவேண்டும்—இதுஇன்றியமையாமையைக் காட்டுகிற வினைமுற்று.

ஆலோசிக்கல் ஆனன் - ஆலோசித்தலை தன்னிடத்து ஆகப்பெற்றான்; இப்படியே சொல்வானுனன் முதலியவைகளும்.

உத்தமபாத்திரம் - மேலான இடம்; பாத்திரம் என்பது இங்கு கொள்வோனைக் குறிக்கின்றது. சற்பாத்திரமும் இதுவே. சத்-நல்லது, வடசொல்லில் தகரவொற்று தமிழில் றகரவொற்றாகவுந் திரியும்.

## 5.

நடைப்பிணம்—நடையை யுடைய பிணம்.

சஞ்சீவகன் - நன்றாய்ப்பிழைக்கிறவன்.

நந்தகன் - சந்தோஷப்படுத்துகிறவன்.

தேசாந்தரம் - வேறுதேசம்.

எருதோ—ஓகாரம் முன் சொல்லியதினின்றும் வேற்றுமையைக் குறிக்கின்றது.

## 6.

யதேச்சை - இச்சையின்படி; யதா+இச்சை; யதா - விதத்தைக் காட்டும் இடைச்சொல்; ஆரியத் தொடர்மொழி.

பிராணி—பிராணனையுடையது.

ராச்சியபட்டாபிஷேகச் சடங்குகள்—ராச்சியம் - அரசாட்சி, பட்டம் - நெற்றியிற் கட்டுவதோர் அணி, அபிஷேகம் - நீராட்டல், சடங்குகள் - கிரியைகள்; அரசாட்சிக்கு அடையாளமான பட்டத்தைக்கட்டி மந்திரதீர்த்தங்களாலே நீராட்டுதலைப் பற்றிய செய்கைகள் என்பது திரண்ட பொருள்.

இராஜத்துவம் - இராஜத்தனம்.

பராக்கிரமம் - பகைவரை தனக்குள் அடக்கும்படியான வீரம்; பர ஆக்கிரம என இரண்டு சொல் கூடிவந்தது.

சடிதியில் - விரைவில், இங்கு திடீரென்று எனப் பொருள்படும்.

பேரிடிமுழக்கம் - பெரிய இடியின் தொனி.

முக்காரம் - எருதின் தொனி.

நடுநடுங்கி - மிகவும் நடுங்கி; சொல் இரட்டித்து மிகுதியைக் காட்டியது. நடுங்கு என்பது இரட்டி முன்னதில் ங்கு கெட்டுநின்ற நடுநடுங்கு - பகுதி.

பிரதானமந்திரி - முக்கியமானமந்திரி.

கரடகன் - காக்கைபோன்றவன்.
தமனகன் - அடிப்பவன்.
இணைற்றுத்தவனைக்கு நாட்டுவளப் பமேன் - இணைற்றிலேயே கிடக்கிற தவனைக்கு நாட்டு வளப்பத்தை விசாரிப்பதிற் பயனில்லை.
சும்மா — இது ஒரு வினையுரிச்சொல்.

7.

கடாவிய - உள்ளே அழுந்தும்படி நாட்டிய.
சுதத்தன் - நன்றாய்க்கொடுக்கப்பட்டவன்.
திருப்பணி - மேன்மையானவேலை, தெய்வத்தைக் குறித்துச்செல்லும் நல்வேலை.
நந்தவனம் - பூந்தோட்டம்.
பிராணசேதம் - பிராணனுக்கு அழிவு.
சுவாமிகாரியம் - அரசனுடையகாரியம்.
உபகாரம், அபகாரம்,— காரம் - செய்தல், உப என்கிற உபசர்க்கத்தோடுகூட நன்மை செய்தலென்றும், அப என்கிற உபசர்க்கத்தோடுகூட திமைசெய்தல் என்றும் பொருள் விளங்கும். உபசர்க்கம் என்பது வினையோடு சேரத்தக்கதோ ரிடைச்சொல். அவை வினைகளோடு சேர வேறு வேறு பொருளைத்தரும். (உ - ம்) ஹாரம் = கிரகித்தல், ஸம்ஹாரம் = கொல்லுதல், ஆகாரம் = உண்ணுதல்; சாரம் = நடத்தல், உபசாரம் = இனிமை செய்தல், அபசாரம் = வெறுப்பைச்செய்தல்; இப்படி சம்ஸ்கிருதத்திற் பலவும் உண்டு.
ராஜசேவை - அரசனிடத்தில் ஊழியஞ்செய்தல்.

8.

காகபலி - பிராமணர் முதலானோர் சிராத்தச் சடங்குகளில் காக்கைக்கு வைக்கும் சோற்றுண்டை; பலி - பூசை.
எச்சில்—எஞ்சு என்னும் வினைப்பகுதி வலிந்து இல் விகுதி பெற்றது; உண்டு மிகுந்தது என்பது பொருள்.
கடித்துக்கடித்து - விடாமற் கடித்து; இரட்டித்து வருதல் அடிக்கடி என்பதையும் காட்டும்.
யஜமானன் — இதுயாகஞ்செய்பவனுக்குப்பேர், உடையவனுக்கு ஆகுபெயராய்த் தமிழில் வழங்குகின்றது.
கவளம் - உண்டையான உணவு.
எக்கிக்கொண்டு - குழையும்படி செய்வதோர் விகாரம்.
புகழோடு சீவிக்கிறார்களோ - புகழோடுகூடி என்று வைத்துக் கொள்ளவேண்டும்.
பாக்கியவான்கள் — வான் - இது உடையவனைக் காட்டும் விகுதி, மான் என்றுஞ் சில விடத்திலிருக்கும், (உ-ம்.) புத்திமான்; வடசொல்.
சேரங்கை—சேர் அங்கை - சேர்ந்த (அதாவது குவிந்த) உள்ளங்கை.
இதாகிதம் - இதம் அகிதம், நன்மை திமை.
பசு - நாற்கால்செந்து.

9.

மனோராச்சியம் - மனதினாலே ராஜாவானதாகப் பாவித்துச்செய்தல்.
கொம்புத்தேன் - மரக்கிளையிற் கட்டியதேன்.
பிரதானி - முக்கியமானவன், மந்திரிகளிலொருவன்.
இருக்கட்டும் — இதுவுமொரு வியங்கோள் மாதிரியான வினை. அட்டும் - விகுதி, இருக்கவிடும்

என்பது மருவியது என்று கொள்வது நேர்.

அப்பிரதானி — சமஸ்கிருதத்தில் (ந) என்கிற எதிர்மறை யிடைச் சொல் உயிர்வந்தால் (அந்) என்றும், மெய்வந்தால் (அ) என்றுந் திரியும்.

லகுவானவன் - அற்பன்.

சமர்த்தன் - கைகூடச்செய்பவன், கெட்டிக்காரன்.

கைகூடல் - காரியம் பயன்படுதல்

புத்திசாலி - புத்தியால் விளங்குகின்றவன்.

ஈனர் - குறைந்தவர்.

புத்தியீனன் - புத்தி குறைந்தவன், அறிவில்லான்.

## 10

பண்டிதன் - அறிவுள்ளவன்.

சிங்கத்தைச் சிநேகம் பண்ணிக் கொள்ளுகிறேன் — இதில் நிச்சயத்தினால் எதிர்காலம் நிகழ்கால மாயிற்று.

பட்டாற் போதும் — அழிவுண்டாம் என்பது கருத்து.

சரி என்பது ஸத்ருஶ என்கிற ஆரிய மொழி ஸ்ரிஸோ என்று பிராகிருதத்தில் திரிந்து தமிழில் சரி என்று வந்தது.

சதுரன்—கெட்டிக்காரன்.

பரதேசம்—பர - வேறு, தேசம் - நாடு.

மானம் - பெருமை.

அவமானம் - பெருமை குலையும் படியானது.

## 11.

இங்கிதம் - மனதுக்கு வேண்டியவைகள், குறிப்பு என்பது இதன் செம்பொருள்.

இரங்கல் - மனமுருகுதல், மனந் தளருதல்.

பிரகஸ்பதி - தேவதைகளுக்குக் குரு, அவர் கல்வியிலும் புத்தியிலும் சிறந்தவர் என்று சாஸ்திரம் சொல்கின்றது. பிரகத்= பெரியோர்களுக்கு, பதி - அதிபதி.

பாராட்டல் - கொண்டாடல்.

அனுசரிக்கிறது - சார்ந்திருக்கிறது. அரசர்கள் மலைபோ லனுசரிப்பதற்குக் கடினமா இருக்கிறார்கள்.

தண்டம் - தடி ; அது வீழ்ந்திருப்பதுபோல் உடம்பு நெடிதாய் பூமியில் விழுந்து கும்பிடுகிறதற்கு ஆகுபெயராய் வழங்குகிறது. கைகூப்பிக் கும்பிடுதற்கும் ஆயிற்று.

உட்காந்தவுடனே—உட்கா -பகுதி, உட்கார் என்றும் சொல்லுகிறார்கள்.

நெடுநாளாய் உன்னைக் காணோம்— ஆக என்பதுஆய்எனத்திரிந்தது.

## 12.

மற்றவைகளுக்குக் கேட்பானேன்—உதவியுண்டென்பது என்றொரு வாக்கியம் இசையெச்சமா யிருக்கிறது. கேட்பான் (கேட்பது-தொழிற்பெயர், அல்லது எதிர்கால வினையெச்சம்)=கேட்பதற்கு, ஏன்=என்னகாரணம் என்றும் உரைக்கலாம்.

சுள்ளாணி - இரிசியில் மாட்டுகிற ஆணி, மெல்லிதான ஆணி.

பற்று - பிடிப்பு.

கருவி - (உதவியானது) சாதனம்.

ஆற்றல் - வல்லமை.

பரிபாலனம் பண்ணுகிறவர் - காப்பாற்றி உபயோகிப்பவர்.

## 13.

அபகீர்த்தி - பழிப்பு. கீர்த்திக்கு எதிரானது.

பிரமாணம் - அறிவின் கருவி; நீ சொல்லியதைக்கேட்டு இன்னது செய்யத்தக்கதென்று அறிந்துகொள்வேன் என்பது கருத்து. பிரமா - மெய்யறிவு, அனம்

என்பது ஒரு விகுதியின் விகாரம், கருவிப்பொருளைக்காட்டும்.

14.

நான் செத்தேன் — தெளிவினால் இறந்த காலம், செத்ததற்குச் சமானம்.

பேரிகை - குணில்கொண்டு அடிக்கத்தக்க பெரிய தொருவாத்தியம்.

மூலம் - காரணம்.

புஷ்டி - வளர்ச்சி.

தரிசனம் - காண்பது.

15.

பிங்களன்-பொன்னிற முள்ளவன்.

சிநேக முண்டாய் - சிநேகமுண்டானதனால்.

அவசியம் - சுவாதீனமின்றி நம் இஷ்டப்படி விடக்கூடாதது; செய்தேதீரவேண்டும் என்பது கருத்து.

மத்தகம் - தலை.

அங்குசம் - மாவெட்டி, யானைத் தோட்டி.

பாகன் - ஓட்டுகிறவன்.

ஆஷாடபூதி — ஆஷாடம்=ஆடி மாதம், பூதி=பிறப்பு; ஆஷாடத்திற் பிறந்தவன்.

தேவசன்மா—தேவன்= கடவுள்.

சந்நியாசி—சன்னியாசத்தையுடையவன். சன்னியாசம் - துறவு. சம் நியாசம் என்று இரண்டு சொல்கூடி மொத்தமாய்ப் பொருள்படும்.

16.

தாசி - அடியாள், இது வைப்பாட்டிமேல் வழங்குகிறது.

பிரமசாரி - கலியாண மில்லாத நிலையிலிருப்பவன்; பிரமம் - வேதம், அதனை ஆசரிப்பவன், அதாவது ஓதுகிறவன் பிரமசாரி.

அடியேன் - அடிகளைப் பற்றின நான்.

நிசாரம் - சாரமில்லாதது. நி - இன்மையைக் காட்டு மிடைச்சொல்.

சமுசாரசாகரம்—சமுசாரம் - பிறப்பும் இறப்புமாகிய உலகநிலை. சாகரம் - கடல்; கடல்போலத் தாண்டக் கூடாத சமுசாரம் என்பதாம். சகரரால் தோண்டப்பட்டது சாகரம்.

மகாநுபாவன்—மகா-பெரியதான, அநுபாவன் - மகிமையுள்ளவன்.

பாசாங்கு - கபடச்செய்கை.

தலைமேல் கை வைப்பது காப்பாற்றுகிறேன் என்று சத்தியம் பண்ணுகிற குறி.

பயபத்தி - பயமும் பத்தியும்.

பத்தி - அன்பு.

விலாப்புறம்—விலா - பக்க எலும்புகள், புறம் - இடம், அவை சேர்ந்திருக்கு முடம்பின்பகுதி.

17.

கன்னம் - கர்ணம் என்னும் வடமொழித்திரிபு, துவாரம் என்பது பொருள்.

பரமபுருஷன்—பரம=மேன்மையான, புருஷன்=ஆண்பிள்ளை, ஆத்துமா என்றுஞ் சொல்லலாம்.

அன்னதாதா - அன்னம் கொடுக்கிறவன்.

அநுக்கிரகம் - ஆசீர்வாதம்.

பரமாத்துமா - மேன்மையான ஆத்துமா.

18.

உதிரம் - ரத்தம். ருதிரம் என்கிற வடசொல்லின் திரிபு.

அனர்த்தம் - அர்த்தம் அல்லாதது, அர்த்தம் - வேண்டுவது; துன்பம் என்பது பொருள்.

காற்றுள்ளபோது (நெல்லைத்) தூற்றிக்கொள்ள வேண்டும் — இது உவமையாய்ச் சமயம் வாய்த்தபோது காரியத்தை

நிறைவேற்றிக் கொள்ளவேண் டும் என்கிற கருத்தைத் தெரி விக்கும்.
ஏய்த்தான் - மோசஞ்செய்தான்.
உப்புகண்டம் - உப்பிட்டு உலர்த் திய மாமிசத்துண்டு.
சேகரித்தல் - முடிவுக்குக் கொண் டுவருகிறது, கூட்டுவதென்பது கருத்து.
விக்கினம் - இடையூறு.

19.

சொர்ணமாலை - பொன்மாலை.
கிருஷ்ணசர்ப்பம் - கறுத்தபாம்பு.

20.

செம்படவன் - கல்லபடவை ஓட்டு கிறவன்.
நிர்மூலம் - வேரற்றுப்போனது, அடியோடே நாசமானது.
அபாயம் - நாசம், கேடு.
உபாயம் - கைகூடிவரும் வழி.
பரோபகாரி - அன்னியருக்கு உப காரஞ் செய்கிறவன்.

21.

ஜீவகாருணியன் - ஜீவன்களின் மேல் கிருபையுள்ளவன்.
பரிவாரம் - ஒருவனைப்பற்றி நிற் கிற ஜனக்கூட்டம், அதாவது வேலைக்காரர் முதலானோர்.

22.

குமாரி - மகள்.
மஞ்சனசாலை - குளிக்குமிடம்.
எவன் புத்திமானோ அவன் பலவா ன் என்றால், புத்திபலமே பல மன்றி மற்றச் சேனை முதலான பலம் சிறந்ததன்று என்பது கருத்து.
மதோன்மத்தன்—மத - மதத்தி னால், உன்மத்தன் - பித்தம் பிடித்தவன்; மிகுந்த மதமுள்ள வன்.

23.

மிருகேந்திரன் — மிருகங்களுக்கு இந்திரன் [அரசன் என்றபடி].
விலங்குகள் - மிருகங்கள்.
மெள்ள — இது மெல்ல என்பது மருவி வந்தது; குறிப்பு வினை யெச்சம்.

24.

பாழ்ங்கிணறு என்கிற பண்புத் தொகையில் ஙகரம் மிகுந்தது. "யாழவொற்றின் முன்" என் கிற [நன் - எழுத்தியல்-சுஅ - வது சூத்திரம்]
விசுவாசம் - நம்பிக்கை; அன்புக் கும் வழங்குகிறது.

25.

பிரதானி - ராஜகாரியத்தை முற் றும் பார்க்கிறவன்.
ராஜலக்ஷ்மி - ராஜ சம்பத்து செல்வத்துக்கு லக்ஷ்மி தேவ தையாதலால் தேவதையோடு பேதமின்றி வழங்குவார்கள்.
சுவதந்திரன் — தனக்குத்தான் வச மாயிருக்கிறவன், ஒருவனுக்குக் கீழ்ப்படாமல் இருப்பவனென்ப து கருத்து. இது சுதந்திரன் என மருவியது. தந்திரம் - பிரதா னம், இங்கு வசப்பட்டிருப்பது.

26.

அநேகம்—ஏகம்-ஒன்று, அது அல் லாதது அநேகம்=பல.
சாதுக்கள் - சமர்த்தர்; காரியாகா ரிய மறிந்தவர்கள்.
விபத்து - ஆபத்து.
துர்லபம் - கிடையாதது. லபம்= லபிப்பது, கிடைப்பது; துர் — வருத்தத்தை அல்லது இன்மை யைக்காட்டும் உபசர்க்கம்.
காதகன் - கொல்லுகிறவன்.
அபயம் - பயமில்லாமை.
துரோகம் - கேடு, துன்பம்.
குணக்கு - கோணல்.
அமுதம் - பால்.
விர்த்தாந்தம் - செய்தி.
பாமரர் - மூடர், இழிசனர்.

27.

ஜாக்கிரதை - விழித்திருத்தல்.

மந்திரம் என்பதேயோசித்தல், மந்திராலோசனை என்பது "ஒரு பொருட் பன்மொழி சிறப்பினி ன்வழா" என்கிறபடி இரண்டு பெயரும் ஒட்டிவந்தது.

ரகசியம் — ரகஸ் - ஜனக்கூட்டமில்லாத விடம், அங்கே சொல்லத்தக்கது.

பஞ்சணை - பஞ்சினாற் செய்த படுக்கை.

மந்தவிசர்ப்பணி - மெள்ள ஓடுவது.

டிண்டிபன் - பெருத்தவன் என்னலாம்.

28.

சயனம் - படுக்கை.

சோதனைக்காரர் - ஆராய்ந்து பார்ப்பவர்.

சகவாசம்—கூட இருத்தல், சக - கூட.

29.

சம்பத்தும் விபத்தும் கூடவேயிருக்கின்றன—இவைகள் மாறி மாறிவரும் என்பது கருத்து.

யாசகன் - இரப்பவன்.

இந்தக்காலமேது — இது கெட்ட காலம் என்பது கருத்து.

30.

சம்பவித்தது - உண்டானது, நேரிட்டது.

துர்ச்சனர் - துஷ்டஜனங்கள்; துர்—பொல்லாங்கைக் குறிக்கிறது.

விபரீதம் - மாறுயிருப்பது, [நன்மைசெய்தால் தீமையாக நினைக்கிறான் என்கிறபடி.]

உண்டாக்கு - செய்.

31.

அண்ணே—அண்ணன் என்பதின் விளி. "ஒருசார் னவ்வீற் றுயர்திணை" என்கிற சூத்திரவிதிப்படி ஈறு கெட்டு அயலகரம் ஏகாரமாயிற்று.

மதோற்கடன்—மத- மதத்தினால், உற்கடன் - மிகுந்தவன்.

மந்திரி - ஆலோசனை செய்பவன்.

மந்தானகன்—மந்த - மெதுவாக, அனகன் - நடப்பவன்.

32.

பீடிக்கப்படுகிறது - வருந்தும்படி செய்யப்படுகிறது.

பாதகம் - பாவம்; நரகத்தில் வீழ்த்துவது என்பது பொருள்.

33.

வெண்ணெய் — வெண்மையான நெய்; நெய் - சாரம்.

பூமியைத் தொடுவது துக்கத்தினால்; சத்தியத்திற்காக என்னவுமாம்.

சிவசிவ என்று ஈசுவரநாமத்தை யுச்சரிப்பது கேட்ட பாவம் போக.

காதின்மேற் கைவைப்பது கெட்ட சொல்லைக் கேளாமைக்கு.

அடைக்கலம் - அடையத்தக்க ஸ்தானம் [இரக்ஷிப்பானது என்றபடி.]

அசுவமேதம் - ஒருயாகம்; அசுவம் - குதிரை, மேதம் - யாகம் அசுவமேதத்தினால் வரும் புண்ணியம் அசுவமேத புண்ணியம்.

ஐவாவே.-இதற்கும் "ஒருசார்னஃறீற்று" என்கிற சூத்திரம்.

விஞ்ஞாபனம்—விஞ்ஞாபனம் என்கிற வடமொழித்திரிபு, முந்திப் பிராகிருதத்தில் திரிந்து பின்பு தமிழில் வந்ததென்றுஞ் சொல்லலாம்; அறிவித்துக்கொள்ளுதல் என்பது பொருள்.

சாவ—செய்தெனெச்சம், குச்சாரியைபெற்று சாக என்றும்வரும்.

34.

கீழ்கள் - தாழ்ந்த ஜனங்கள்.

35.

சண்டைமுனையிற் செத்தார்சொர்க்கம் — சண்டையில் இறந்தவ

னுக்குச் சொர்க்கம் கிடைக்கு மென்பது சாஸ்திரம்.
சூரர் - பகைவரை வெல்லத்தக்க சாமர்த்திய முள்ளவர்.
தாரதம்மியம் - தாழ்வும் உயர்வும். தர - கீழ்ப்பட்டது, தம - மேற்பட்டது, இவைகளின் தன்மை.

36.

செப்பட்டை - சிறகு.
விகடசங்கடம் — விகடம் - விசாலம், சங்கடம் - நெருக்கம்.

37.

சம்புக்கிரீவன்—கம்பு - சங்கு, அது போன்ற கிரீவன் - கழுத்துள்ளவன், வெண்மையான கழுத்துள்ளவன் என்றபடி.
புலால்தின்பவர் — புலால் - மாமிசம், அதைத்தின்பவர்.
அசட்டை - அலக்ஷியம்.

38.

நிமிஷம் - இமைக் கோட்டுதல், நிமிஷமென்றும் வழங்கும்.

39.

திராணி — இது மாறிவந்ததோர் வழக்கச்சொல். ஆரியத்தில் திராணம் என்று இரட்சிப்புக்குப் பெயர். இது வல்லமைக்குத் தமிழ்வழக்கத்தி லிருக்கிறது. திராணி, திராணீ என்றிருவிதமாயும் பிரயோகிக்கிறார்கள். இக்கீரவீறு தப்புத்தான்.
கருடன் - விஷ்ணுக்கு வாகனம்.
சரணம் - ரக்ஷிக்கிறவன்.

40.

அகங்காரம் - கர்வம், மதம்.
சுத்தவீரன் - பின்வாங்காத வீரத்தனமுள்ளவன்.
செரித்து - உயரவாங்கி நிற்கச் செய்து.
வாயில் மண்விழுகிறது புதைக்கப் படும்போதாகையால் சாவுக்குக் குறியாக வழங்கும்.
விசனம் - துக்கம்.

41.

சாமம் - சமானமாயிருக்கிறது, நற்பேச்சுப் பேசுகிறது.
தானம் - பணமுதலானதைக் கொடுக்கிறது.
பேதம் - பயமுறுத்தி வேறு படுத்துகிறது.
தண்டம் - தண்டிப்பது, அடிப்பது, கொல்லுவது முதலானது.
சித்தி - கைகூடுதல்.
பொல்லாப்பு — பொல்லா என்கிற எதிர்மறைப் பகுதிமேல் (பு) தொழிற்பெயர் விகுதி வந்தது; கெடுதி.
குணவந்தர் - குணவான்கள்.
கபடம் - வஞ்சனை.
சம்பத்து - செல்வம்.
உபயோகி - உதவியானவன்.

42.

ராஜாபிரகாசிப்பான் என்றால் எங்கும் பேர்பெற்று கீர்த்தியடைவான் என்பது கருத்து.
கூட்டுறவு - சேர்ந்திருப்பது, சகவாசம்.
உபதேசம் - மந்திர முதலானவைகளைப் போதிக்கிறது.
மின்னாம்பூச்சி—மின் ஆம் பூச்சி - மின்னலுக்குச் சமானமாகிய பூச்சி என்பது பொருள். மின்மினிப்பூச்சி என்றும் வழங்குகிறது. மின்மின் என்பது அற்பப் பிரகாசத்தைக் குறிக்கும், அதை உடையது மின்மினிப் பூச்சி. இ - விகுதி.
சுமுகன் - நல்ல முகத்தையுடையவன்.

43.

மௌனம் - பேசாம லிருப்பது; பேசாமல் மவுனமா யிருந்ததென்பது உலகவழக்கம்.
துஷ்டபுத்தி - குற்றமுள்ள புத்தியுள்ளவன்.
சுபுத்தி - நல்லபுத்தி யுள்ளவன்.

செட்டு — பணம் சேர்த்தல், அத் தன்மையுடையவன் செட்டி.

44.

நியாயாதிபதி - நியாயத்தை நடத் தும் அதிபதி.

பஞ்சாயத்து—பஞ்ச=ஐந்து, பஞ் சாயிதம் = அஞ்சா யிருக்கை, என்றால், வாதிபக்ஷத்தார் இரு வர், பிரதிவாதி பக்ஷத்தார் இரு வர், மத்தியஸ்தன் ஒருவன், இ வ்வைவர் சேர்ந்தசபை என்பது கருத்து; அல்லது பஞ்சாயத்த ம் = ஐவர் அதீனமாயிருப்பது என்றும் ஆகலாம்: வழக்கத்தில் இப்படி சிதைந்திருக்கிறது.

கெடு— யடி என்கிற வடமொழித் திரிபென்று தோன்றுகிறது; கா லம் என்பது பொருள்.

45

குளிரன் - நண்டுக்கே பெயர்.

46.

தெய்விகம்-தெய்வச்செயல், தெய் வத்தன்மை யென்றுமாம்.

சாக்ஷி - நேராய்க்கண்டவன், கேட் டவனுமாம்.

கிருத்திமம் - இயற்கையா லன்றிச் செயற்கையாலாகியது; கபடச் செய்கை என்பது கருத்து.

பல்லைக் கடித்துக்கொண்டிருந்து - வேதனையைச் சகிப்பவன் பல் லைக்கடித்திருந்தால் சற்று ஆறு தலாயிருக்கும், உலகவழக்கம்.

பலாத்காரம் - வலிமை செய்கி றது.

47.

ழு என்பது ஒருவிதமரம்; நுனி யில் கூர்மையான இருப்புச்சலா கை நாட்டியிருக்கும். கொலை செய்யத்தக்க குற்றஞ் செய்தவ னை அதில் ஏற்றி ஆசனத்தில் அழுக்கிக் கொல்வது பூர்வகா லத்துவழக்கம். இது சூலம் போறு மிருக்கும். சிறுவை யென்றுஞ் சொல்லலாம்.

தேவதத்தன் - தேவனால் கொடுக் கப்பட்டவன்.

சாவகாரி — இது வர்த்தகனுக்கு இந்துஸ்தானியில் வழங்கும் பெ யர்.

திரவியஹீனன்—திரவியம்-பணம்; அதனால் ஹீனன் - குறைந்தவன்.

சம்பாத்தியம் - சேர்க்கிறது.

துர் ஆசை - கெட்ட ஆசை.

அபூர்வம் - முன் எப்போதும் உன் டாகாதது.

48.

கிலேசம் - விசனம்.

பக்ஷம் - சிறகு; அதனையுடையது பக்ஷி.

அசம்பவம் - உண்டாகமாட்டா தது.

49.

பந்து - உறவின்முறையார்.

மித்திரன் - சிநேகிதன்.

பிரவர்த்திக்கிறது - ஏற்படுகிறது, எத்தனஞ்செய்கிறது.

சுதந்தரமா யிருத்த லாவது புரு ஷன் முதலானோர் சொற்படி நடவாமை.

விபரீதசேவகன் - சொன்னதற்கு மாறாய் நடக்கிற வேலைக்காரன்.

50.

கடுமை மென்மை—கடுமை ┐ கடி னமானதாயிருப்பது, மென்மை அதற்கு எதிராயிருப்பது, மெது வாயிருப்பது.

தயை - இரக்கம், அதாவது பிற னுக்கு நேர்ந்த துன்பம் தனக்கு நேர்ந்ததுபோற் பாவிக்குந் தன் மை.

உதாரத்துவம் - பிறருக்குக் கொ டுக்குந் தன்மை; உலோபத்து வம்—அதற்கு எதிர்.

அனுபவித்தல் - அதன் பயனைக் கொள்ளுதல்.

கடவுள்துணை.

# பஞ்சதந்திரம்.

# PANCHATANTRAM

## இரண்டாவது—II.

## சுகிர்லாபம் அல்லது நட்புப்பேறு.

## Sughirlapam or the Art of Making Friends.

புத்திசாலிகளா யிருக்கிற சிநேகிதர்கள் திரவிய மில்லாதிருந்தாலும், வேறே சாதனங்க ளில்லாவிட்டாலுங் காகமு மெலியு மாமையு மானு நட்பினா லொன்றையொன்று காப்பாற்றினாற்போ லொருவர்க் கொருவ ருதவுவார்க ளெனச் சோமசன்மா சொல்ல, ராஜகுமாரர்க ளதெப்படி யெனச் சொல்லத் தொடங்கினான்.—

"கோதாவரிக் கரையிலிருக்கிற வொரு பெரிய வன்னிமரத்தில் லகுபதனனென்னுங் காகம் வாசஞ் செய்துகொண்டிருக்கையி லொருநாள் விடியற்காலத்தி லங்கே யமனைப்போல மிகவும் பயங்கரமா யொருவேடன் வந்தான். லகுபதன னவனைப்பார்த்துப் பயப்பட்டு, இந்தத் துராத்மா வென்ன பண்ணுவானோ தெரியவில்லை; ஆகையா லிதைச் சோதிக்க வேண்டுமென் றிரைதேடுகிற யத்தனத்தை விட்டிருக்க, இதற்குள்ளே யவ்வேடன் வலையை

---

"Wise friend," said Somasanma, "though destitute of property or other means of living, would, through friendship, help each other as did the crow, the rat, the tortoise and the deer."

"How was that?" demanded the princes; and Somasanma related as follows:—

"On the banks of the river Godavery, there stood a Vanny tree, upon which dwelt a crow called Laghupatanan.

Early one morning, there came a fowler as frightful in appearance as Yama, (the infernal god), and Laghupathanan terrified at seeing him, wishing to know what the wretch would do, stopped from going out in search of food and watched his movements. In the meantime the fowler spread his net and strew-

விரித்துப் பலவகைப்பட்ட தானியத்தைத் தெளித் தங்கே யோர் செடிமறைவிற் பதுங்கிக்கொண் டிருந்தான். அதன் பிறகு தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந்திறங்கின சித்திரக்கிரீவனென்னும் புறாவரசு வங்கே யிறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்துத் தன் பரிவாரப் புறாக்களுடனே "இந்த நிர்மானுஷியமான காட்டில் தானிய மெப்படி வரும்? யாராகிலுங் கொண்டுவந்து போட்டிருக்க வேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலல்லாம லிதைப் பக்ஷிக்கலாகாது; ஒரு பிராமணன் பொற்காப்புக் காசைப் பட்டுப் புலியினா லெப்படி மரண மடைந்தானோ வப்படிக் கேதோ வொரு விபரீதமாகத் தோற்றுகிறது" என, புறாக்க ளதைக்கேட்டு "அதெப்படி மஹாராஜாவே" எனச் சித்திரக்கிரீவன் சொல்லுகிறது:—

"நான் தென் காட்டில் மேய்ந்துகொண் டிருக்கையிற் பார்த்தே னதைக் கேளுங்கள். ஒரு கிழப்புலி பலவீனத்தா லாகாரஞ் சம்பாதிக்கக்கூடாம லோரேரிகரையில் நீராடிக் கையில் தருப்பை வைத்துக்கொண் டுட்கார்ந் திருக்கையி லொரு பிராமண னந்தவழியில் வந்தான்; புலி யவனைப்பார்த்து, "ஓ பிராமணா! இந்தப் பொற்காப்புத் தருகிறேன் வா" என, இதைக்கேட் டந்தப்பிராமண னப்புலியைப்பார்த் திந்தக்காப்பு நமக்கு வலியக்கிடைக்

---

ed over it different sorts of grain and then hid himself behind a bush. After a while, there came a flock of pigeons with their leader named Chittragriva. On seeing the grains strewed on the ground, he addressed his attendants as follows :—" Whence, think you, should grain be found in this uninhabited forest? Some person must have conveyed it hither, and therefore we should ascertain how they came here before feeding on them; for as a brahmin by his avarice for a gold-bracelet, exposed himself to the fury of a tiger, so our present condition appears to be dangerous."

"How was it?" asked the pigeons; and Chittragriva bagan to relate as follows :—" Hear what I have observed one day when flying about in the southern forest in search of food."

" A tiger, being unable through infirmity to procure his own food, bathed himself in a lake and sat upon its bank, with a tuft of Tarpa-grass in his hand. As he sat there, he saw a brahmin pass by. " Oh! Brahmin," called out the tiger, " here is a gold-bracelet, come and take it."

The brahmin, on hearing this, meditated thus " this bracelet is offered to me voluntarily but the tiger is a ferocious animal;

கிறது; மரணத்துக் கிடமாகிய புலியின்கிட்டப் போக லாகாது; ஆகையா லிந்தக்காப்பி லாசைவைக்கலாகா தென் போமானால் மரணத்துக்கு நாலண்டையும் வழி யாகையா லிதைக்குறித்துப் பிரயத்தன மவசியம் பண்ணவேண்டு மென்று தன் துராசைக்கேற்பத் தனக்குள்ளே யாலோ சித்து நிச்சயித்துக்கொண்டு புலியைப்பார்த்து "ஐயா புலி யாரே! காப் பெங்கேயிருக்கிறது?" என, புலி கையில் வைத்துக்கொண்டு "இதோ பாரும் பிராமணோத்தமா" எனக் காண்பித்தது. பிராமணன் "உன்னிடத்தி லெனக் கெப்படி நம்பிக்கை?" என, புலி, "நான் வைகறையில் மூழ்கி நித்தியதானம் பண்ணிக்கொண் டிருக்கிறேன்; நகமும் பல்லும்போன கிழவனா யிருக்கிறேன்; இப்போ தென்னிடத்தில் நம்பிக்கை யில்லையா? வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசை யின்மை யென்னு மிவ்வெட்டுத் தருமங்களையு நா னறிந் திருக்கிறதனா லிந்த வபூர்வ வஸ்துவை யார்க்காகிலுங் கொடுக்க விச்சிக்கிறேன்; இதனா லென்னிடத்தில் நற்குண மிருக்கிறதென்று மெவ்வளவானாலும் துர்க்குண மிருக்கிற தென்றும் அறியவில்லையா?" என, அப்போது பிராம ணன் இதுமெய்தான், ஆனாலும் புலி மனிதரை யடித்துத் தின்னுகிறதென்று மிகவும் லோகாபவாத மிருக்கிறது"

---

it is dangerous to approach him; but indeed death may come from any quarter, and I should not therefore indulge my fears too far; every endeavour should therefore be made to obtain the bracelet"

Having resolved to do so agreeably to the dictates of his, avarice, Brahmin asked "O Tiger, where is the bracelet?" "See, my good brahmin, it is here;" said the Tiger, holding it in his hand. "How can I trust you." Said the brahmin. The Tiger answered, "I bathe every morning and do daily acts of charity. I am old and have lost my teeth and claws. Can you not trust me now? I esteem and practice the eight following acts of virtue, viz. 1. Offering sacrifice; 2. Studying the Vedas; 3.Giving alms, 4. Doing penance; 5. Maintaining truth; 6. Keeping promises; 7. Exercising patience; 8. Cherishing disinterested benevolence. It is from these principles that I wish to give the bracelet away to any one. Can you not judge from this, whether I possess good or bad feelings?"

"True," said the brahmin, "but it is a proverbial saying that tiger devours men."

எனப் புலி "நான் தருமசாஸ்திரமு மறிந்திருக்கிறேன்; தன் பிராணன் தனக்கெப்படித் தித்திப்போ வப்படி யெல்லார்க்கு மிருக்குமென் றறிந்து, சாதுக்கள் பிராணிகளிடத்தில் தயையா யிருக்கிறார்கள்; தன்னைப்போலச் சுகதுக்கங்களைப் பிறரிடத்தில் நினைக்கிறார்கள்; நீ மிகவுந் தரித்திரனாகையா லுனக்குக் கொடுக்க யத்தனிக்கிறேன்; சாஸ்திரமு மிப்படியே யிருக்கிறது; எப்படியு மேழைக்கே கொடுக்க வேண்டும்; செல்வமுள்ளவனுக்குக் கொடுக்கலாகாது; மருந்து நோயாளிக் கெப்படிக் குணங்கொடுக்குமோ வப்படி நோயில்லாதவனுக் காகுமா? நீ யிந்த வேரியிலே மூழ்கிவந்து காப்பை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போ" என்றவுடனே, பிராமணன், ஐயோ! பிராமணனுக்குப் பின்புத்தி யாகையால் புலியின் பேச்சை நம்பி ஸ்நானம் பண்ணுகிறதற்கு ஏரியி லிறங்கினவுடனே, உளையிற்புதைந்து காலைப் பிடுங்கிக்கொண்டு வரக்கூடாமல் திகைத்தான். புலி யதைப்பார்த்து, "பிராமணா! பயப்படாதே, நானுன்னைச் சேற்றினின்று மெடுக்கிறேன்; சற்றிரு" என்று சொல்லிக்கொண்டு மெல்லெனப்போ யவனைப் பிடித்துக்கொண்டது. அப்போது பிராமண னெண்ணமிடுகிறான்; துஷ்டர்கள் வேதாத்தியயனம் பண்ணியிருந்தாலுந் தருமசாஸ்திர மறிந்திருந்தாலு மவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைக்கலாகாது. எவன் சுபாவ

---

The tiger replied "I am learned in the Dharma Shastras. Knowing that the life of another is as dear to him as it is to one's self, the virtuous are kindly disposed towards their fellow creatures, and consider that happiness and misery are common to all alike. As you are very poor, I am disposed to give the bracelet to you. Shastras do also enjoin the same. Charity should only be bestowed on the poor and not on the rich. Will medicine be as useful to the healthy as it would be to an invalid? Bathe in that tank and take the bracelet away." Alas! the brahmin, through his usual want of forethought, went into the lake, trusting in the words of the tiger, but being stuck in the mud, was much perplexed at finding himself unable to get out.

The Tiger on seeing this, said, "Brahmin, fear not, be patient and I will help you out of the mud." So saying the Tiger moved up towards him leisurely and seizing him, held him fast.

The poor Brahmin now meditated though too late, that the words of the wicked are not to be depended upon though they are learned in the Vedas and Dharma Shastras; for, the inherent

மெப்படியோ வதெப்போதும் போகாது. இப்படி யிருக்கையில் நம்முடைய சாதிக் கியல்பாயிருக்கிற பேராசையினு லிந்தத் துஷ்டனிடத்தில் விசுவாசம் வைத்து மோசம் போனே னென்றிப்படிப் பச்சாதாபப் பட்டுக்கொண்டிருக்கையில் அந்தப்புலி கொன்றுதின்றது. ஆகையால் மிகவு மாலோசனைபண்ணி யேதொன்று செய்யத்தக்கதோ வதைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் யாதொரு தீங்கு நேரிடாது" என்றிப்படிச் சித்திரக்கிரீவன் சொன்ன வார்த்தையைக்கேட் டொருபுறு கர்வத்தோடு "இப்படி யாலோசித்தா லோ ரிரையு நமக் ககப்படாது; மேலும் வெட்கப்படுகிறவன், பொறாமையுள்ளவன், சந்தோஷப் படாதவன், குரோதமுள்ளவன், நிராச்சந்தேக முள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன், இவ்வாறுபேருந் துக்கத்தையே யனுபவிப்பார்கள்" என, இதைக்கேட்டுப் புறுக்களெல்லாந் தானியத்தைத் தின்னும்பொருட்டுப் போய் நிலத்திலிறங்கி வலையிலகப்பட்டன. புறுவரச னதைப் பார்த் தெல்லாரு மென்சொல்லைக் கேளாமற் போனார்கள். இப்போது நா னொன்றியா யிருந்து பலனில்லை; என்று சொல்லி அதுவும் வலையில் வந் தகப்பட்டது. வேடன் பக்ஷிகள் வலையிற் சிக்கிக்கொண்டதைப் பார்த்து அதனிடத்திற்கு வரத் தொடங்கினன். அதைப் புறுக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து "நாங்கள் நீசன் புத்தி

---

disposition of man remains the same for ever. It is through the avariciousness which characterizes our caste that I am delivered into the hands of this murderer. While he was bewailing thus, the Tiger devoured him.

Hereupon Chittragriva remarked "Whatever is worthy of being done, is also worthy of our careful examination before we engage in it and no evil will happen. "On hearing this, one of the pigeons haughtily replied, "If we are to be so scrupulous, we can find no food and further it is said "that the diffident, the envious, the discontented, the passionate, the suspicious, and those who are dependent upon others, these six, are always unhappy."

Then, the whole flock flew down to pick up the grain and was caught in the net. On seeing this, the leader of the pigeons observed "they have all disregarded my advice; and there is no use of my being alone," so saying he too flew down and was caught in the net.

The fowler, seeing that the pigeons were entrapped, started to the place. Upon this the doves addressed their leader

யைக்கேட் டுன்னை யவமானம் பண்ணினோம்; அதன் பலன் பிராப்தியாயிற்று" என, அப்போது சித்திரக்கிரீவன் "இப்போ திதைச்சொல்லிப் பயனென்ன? இதற்கோருபாய மிருக்கிறது; எல்லோரும் வலையோடுகூட வொருமிக்கப் பறந்து வேறிடத்திற்குப் போகவேண்டும்; அப்படிச் செய்தாற்றான் பிராணனைக் காப்பாற்றலாம்" என, இதைக் கேட்டவுடனே யெல்லாப் பறவைகளும் வலையோடுகூடச் சடிதியிற் பறந்துபோயின. அதை வேடன் தூரத்திலிருந்து பார்த் தாச்சரியப்பட்டு இவைகளொரோ மனதாய் வலையைக் கொண்டுபோயின. ஆயினுமிவைகளி லொன்றுக் கொன்று சண்டைநேரிடும்; அப்போ தென்கையி லகப்படுமென நினைத்துக்கொண் டவைகளின் பின்னே யோடும்போது புறாக்கள் கண்ணுக்கு மறைந்துபோய்விட்டன. பிறகவன் வருத்தப்பட்டுத் திரும்பி வந்துவிட்டான். இவ்வாச்சரியமெல்லாம் பார்த்திருந்த லகுபதனென்னுங் காகம் அந்தப் புறாக்களின்பின்னே போயிற்று. கபோதராஜா தன் கூட்டத்தைப் பார்த்து "கண்டகிநதி தீரத்தி லிருக்குஞ் சித்திர வனத்தி லென் சிநேகிதனான இரணியகனென்னு மோரெலியரச னிருக்கிறான்; அவன் பல்லினாலே நம்முடைய வலையை யறுப்பான்; அங்கே நடவுங்கள்" என, இதைக்கேட் டப்படியே யெலியரசன் வளையண்டை யிறங்கின. அப்போது ஏதாவ

---

thus "We have dishonored you by listening to the counsel of a wretch, and we now reaped the fruits of it."

"Repentance will avail nothing now," said Chittragriva, "there is still a means of escape; we may save our lives, if we, with one accord, lift up the net and fly away."

On hearing this, they all, with one accord, lifted the net and flew away with it. The fowler observing it at a distance, was astonished, and ran after the pigeons, hoping that some disagreement would arise among them and that he could then secure them; but they were soon out of sight and the poor fowler returned greatly grieved with his vain pursuit.

The crow Laghupathanan who witnessed what had passed, followed the flock of pigeons (to see what would further happen.) While they were flying, the chief of the Pigeons said "There is a friend of his, named Eraniakan, the king of rats, who lived in the beautiful forest by the river Gunduck, and he would be able to gnaw their snares asunder with his teeth, if they should go to him.' So they all agreed and flew to his residence.

தாபத்து நேரிடு மென்பதைக் குறித்துத் தன் வளைக்கு
நூறுவழி செய்துகொண் டுள்ளேயிருந்த எலியரசன்
புறுக்க ளிறங்கின சப்தத்தைத் கேட்டுப் பயந் தடங்கி
யிருக்கையிற் சித்திரக்கிரீவன் "சிநேகிதா இரணியகனே!
எங்களோடே யேன் பேசவில்லை?" என, இதைத் தன்
சிநேகிதனுடைய திங்குரலென் றறிந்து சந்தோஷத்தோடு
கூடச் சீக்கிரமாக வளையினின்றும் வந்து, "நான் புண்
ணியவா னாகையாற் சித்திரக்கிரீவனென்னு மித்திரன் என்
வீட்டுக்கு வந்தான்; இவ்வுலகத்தில் மனமொத்த மித்
திரனோடு சம்பாஷிக்கிறதிலும் வேறே யானந்த மேது?"
என்று உபசாரஞ் சொல்லிப் பிறகதனுடைய அவஸ்தை
யைப் பார்த்து மிகவும் துக்கித்து, "மித்திரா, நீ யெல்லா
ரைக் காட்டிலுஞ் சமர்த்தனுமே, உனக் கிப்படிப்பட்ட
காரிய மெப்படி நேரிட்டது?" என, புறு "எந்தக்காலத்தி
லெது நடக்குமோ வது நடக்கும்; விதி வலிது; அதன்முன்
யாருடைய வுபாய நடக்கும்? கடல் பெருகி மேலிட்டா
லதற்குக் கரையேது?" என, இரணியகன் "இந்தப்பேச்சு
மெய்யே; நூறு நாழிகைவழித் தூரத்திலிருந்து வஸ்துக்
களைத் தெரிந்துகொண்டுபோகிற நீ யின்றைக்கு வேடன்
வலையிற் பாராமற் சிக்கிக் கொண்டையே பார்; சந்திர
சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும்,
யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும், புத்தி

The king of rats, who apprehensive of unforeseen danger, kept himself within his hole with a hundred outlets, hearing the noise occasioned by the descent of the pigeons, was startled with fear and stood silent. Upon this, Chittragriva called out, "Frriend Eraniaka, What! Why wilt thou not speak to us?" Eraniakan, recognizing it to be the sweet voice of his friend, came out of his hole with joy and exclaimed,—"O how great are my acts of merit that my friend Chittragriva is come to my house! Is there a greater happiness in this life than that of conversing with sincere friends? "But seeing Chittragriva's suffering, he was much aggrieved and said,—'Friend, thou art wiser than others, how happened it then that thou art entangled in the net?" Chittragriva replied,—"Whatsoever is destined to happen, will by all means, come to pass in its time. Fate is mighty and what, man's wisdom can prevail against it? If the ocean swell and overflow, where is the shore?" "True," said Eraniakan, "thou who can spy out things at the distance of a hundred *Nalikai* art today involved in the net of a fowler. The evil which the sun and moon suffer from Raku and Kathu, the entanglement of elephants, birds, and serpents, and the

சாலிகளுக்கு வறுமை வருதலுந் தெய்வத்தின் மகிமையே யல்லாமல் வேறல்ல" என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண் டிருக்கிற வலைக் கயிற்றை யறுக்கத்தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன், "மித்திரா! முன்னே யென் பரிவாரத்தினுடைய கயிற்றை யறு; பிறகென் பாசத்தைத் துணி" எனக் கேட்டு, எலி "என் பல்லு; மிகவு மெதுவானது; அதற்குப் பலமுங் கொஞ்சம்; இத்தனை பெயருடைய பந்தனைக ளெனக் கெப்படி யறுபடும்? உன் தளையை யறுத்துப் பின்னென் சாமர்த்தியத்துக்குத் தக்கதாக வவர்களுடைய தளையையு மறுப்பேன்" எனச் சித்திரக்கிரீவன் "நல்லது முன்னே யிவர்களுடைய பாசத்தை யறு" என, இரணியகன் "தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும்; அறம் பொரு ளின்பம் வீடாகிய விவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதனமாகையா லதைக் காப்பாற்றினா லெல்லாவற்றையுங் காப்பாற்றினாற்போ லாகிறது" என, சித்திரக்கிரீவன் "இந்த நீதி சரிதான்; ஆயினு மிப்படிப் பட்ட வேதனையினின்றும் பாலனம் பண்ணுகிறதற் கல்லவோ என்னை யிவர்கள் ராஜாவாக நினைக்கிறார்கள்? ஆகையா லென் பிராணனிடத்தி லிச்சையைவிட் டிவர்களைப் பிழைப்பி" என, அதைக்கேட் டெலி "நீ பரமசாது; அடுத்தவர்களை யாதரிக்கிறவனா யிருக்கிறாய்; எசமானனிடத்தில் விசுவாசமாயிருக்கிற சேவகனும், சேவகனிடத்திற்

poverty of the wise, are to be ascribed to none but the glory of God." So saying, he ran to gnaw asunder the cords by which Chittragriva was bound. "Not so, my friend," said Chittragriva, "gnaw asunder first the bonds of my flock and then you can attend to mine." "My teeth," said Eraniakan, "are weak and they have but little strength; how can I then, cut up the bonds of all these? I will first gnaw thy snares and then those of others to the best of my strength." "No," said Chittragriva, "relieve their bonds first." "One" said Eraniakan, "should first protect himself and then his flock; for life is the highest object of charity, wealth, pleasure and heaven; if this is preserved, every other is preserved." "This principle" interrupted Chittragriva, "is correct; but it was to protect them on such an occasion as this, that they recognize me as their chief; therefore please save them first without regard to my life." Upon this, the rat said :—"Thou art very good, wishing to protect such as are dependent upon thee. The servant that is faithful to his master and the master who is kind to his servant, are

பிரீதியா யிருக்கிற வெசமானனுஞ் சுகமடைவார்கள்” என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையு மறுத்துச் சித்திரக்கிரீவனுடைய கட்டையுஞ் சேதித்தது. பிற கொன்றுக்கொன்று தழுவிக்கொண்டு பிரியவார்த்தைகள் சொல்லின. சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடுகூடத் தன்னிடத்திற்குப் போனது. லகுபதனனென்னுங் காக மிவையெல்லாம் பார்த் தாச்சரியப்பட் டிரணியகனை நோக்கி, “நீ பாக்கியவானா யிருக்கிறா யாகையால் நானு முன் சிநேகத்தை விரும்புகிறேன்; நீ தயைசெய் தெனக்குச் சிநேகனாக வேண்டும்” என, அப்போ திரணியகன் “நீ யார்?” என்னக் காகம், நான் லகுபதன னென்கிற காக்கை” என, அதைக்கேட் டெலி “உனக்கு மெனக்கும் வெகுதூரம், உலகத்திற் சமானஸ்தர்களுக்கே சிநேக முண்டாகிறது; நா னுனக்கிரை; நீ யென்னைத் தின்கிறவன்; இப்படி யிருக்கையி லெதெப்படியாகும்? ஆபத்துக்கே முகாந்தரமாம்; நரி சிநேகத்தினா லொருமான் வலையி லகப்பட்டதுபோ லுன்னா லெனக்குப் பொல்லாங்கு நேரிடும்” என, லகுபதன னதைக்கேட்டு “மா னெப்படி வலையிற் சிக்கிக் கொண்டது?” என, எலி சொல்லத் தொடங்கிற்று:—

“மகததேசத்திற் சண்பகவனத்தில் மானுங் காகமு மொன்றுக்கொன்று நட்பாயிருந்தன. அப்படி யிருக்கையி லந்தமான் மனதின்படி புல் முதலானவைகளை மேய்ந்து

---

happy.”—So saying, he gnawed asunder the bonds of the rest first and then that of Chittragriva. Embracing each other they exchanged their respectful compliments, and Chittragriva with his flock returned to his place. The crow Laghupathanan, having been a spectator of all that had passed, was amazed, and called out—“O Eraniaka, thou art a great being! I therefore court thy friendship. Do favour me with it.” “Who art thou?”, questioned Eraniakan. ‘I am the crow Laghupathanan,’ replied he. Upon hearing this, Eraniakan said, ‘There is a great disparity between you and me. It is only among those who are equal on earth that reciprocal friendship is formed, but I am your prey and you are my devourer, how can friendship subsist between us? It will end in misery as was the case with a deer who had associated with a jackal.’ ‘How was that,’ demanded Laghupathanan and the rat related thus:—

In a forest of *shanpagah* trees in Magada country there lived a deer and crow in mutual friendship. A jackal, seeing that the deer was fattening by luxurious feeding on grass and other

கொழுத்திருக்கிறதை ஒரு நரி பார்த்துத் தனக்குள்ளே யாலோசித் திவன் நமக் கசாத்தியனா யிருக்கிறா னாகையா லிவனை வஞ்சனையாற் கொல்லவேண்டுமென் றிப்படி நிச்சயித்து, அதன் சமீபத்திற்போய்ச் "சிநேகிதா! சுகமா?" என, அதைக்கேட்டு மான் "நீயார்?" என, நரி "நான் குத்திரபுத்தி யென்கிற நரி; இந்தக் காட்டில் யாருமற்ற பாவியா யொருவனாகத் திரிந்துகொண் டிருந்தேன்; இன்றைக் குன்னைப்பார்த்து மிகுந்த சந்தோஷத்தை யடைந்தேன்; இப்போ துனக்கு வேலைசெய்துகொண் டுன்னிடத்திலிருக்க விச்சிக்கிறேன்" என, இதைக்கேட்டு மான் "நல்லது" என்று பொழுது போனவுடனே யிரண்டுஞ் சண்பகமரத்தின் கீழே வந்தன. அம்மரத்தின்மேல் வாசம் பண்ணிக்கொண் டிருக்கிற மானின் சிநேகிதனாகிய சுபுத்தி என்னுங் காக மிவ்விரண்டையும் பார்த்து, மானை "ஓ மித்திரா! உன்னண்டையி லிருக்கிறவன் யார்?" என, மான் "இந்தச் சம்புக னென்னுடன் சிநேகிக்க விரும்புகிறான்" என, அப்போது காகம், "மித்திரனே, சடிதியில் வந்த வழக்கமில்லாதவனை நம்பலாகாது; ஒருவன் குலமு நடத்தையுந் தெரியாம லவனுக் கிடங்கொடுத்தா லொரு பூனைக்குச் சரற்கவனென்னுங் கழு கிடங்கொடுத் திறந்தாற்

---

vegetables, said to himself "I cannot subdue this fellow; I must therefore resort to some means for his destruction." Thus deciding, the Jackal then approached the deer and saluted him, "Friend, Art thou happy?"

"Who art thou?" questioned the deer. The jackal replied, "I am Kuttrabootty and I lead a solitary life in this forest, deprived of friends and connections; and am therefore exceedingly gratified in meeting you; and moreover I should be happy to be engaged in your service."

Upon this, the deer received the jackal, and at sun-set took him under the *shangapah* tree. But the crow Subutty, the friend of the deer, who perched upon the tree, seeing the two in company, called out to the deer, "O friend, who is there with you?"

The deer replied, "This jackal promises to live with me in friendship."

"Ah! my friend!" interrupted the crow; "you should not trust the words of a stranger whom you happen to meet, nor receive into your friendship one, with whose birth and character you are unacquainted, for if you do, you will suffer as did the eagle Saratkavan when he admitted a cat into his company."

போல நேரிடும்" என, அதைக்கேட்டு மான் "சரற்கவ
னெப்படிச் செத்தான்" என, காகஞ் சொல்லுகிறது:—

பாகீரதி தீரத்தில் திரிகூடமென்னு மலையி லொரு
முதிய வித்திமரத்தின் பொந்தில் வாசம் பண்ணிக்கொண்
டிருக்கிற நகமுங் கண்ணு மில்லாத சரற்கவ னென்னு
மொரு கிழக் கழுகானது மற்றைப் பக்ஷிகள் தன்னிடத்தி
லிரக்கம் வைத்துத் தங்க ளாகாரத்திற் கொஞ்சங் கொஞ்ச
நெருக்கிக் கொடுக்கத் தின்றுகொண்டு சீவித்திருக்கையி
லொருநாள் நெடுஞ்செவிய னென்னும் பூனை பறவைக
ளுடைய குஞ்சுகளைத் தின்னவேண்டி யந்த மரத்தின்கீழே
வர, அதைக் குஞ்சுகள் பார்த்துப் பயந்து பெருங்கூச்ச
லிட்டன. கழுகு கேட்டு "நீங்க ளேன் பயப்படுகிறீர்கள்?
இங்கே யார் வந்தான்?" என, இதற்குள்ளே பூனை சரற்கவ
னைப் பார்த்து நான் செத்தேனெனப் பயப்பட்டு, உடனே
மனதில் தைரியம் பண்ணிக்கொண்டு, இந்தச் சத்துருவைத்
தப்பித்துக்கொண் டோடுகிறதற்கு நமக்குச் சக்தியில்லை;
ஆகையா லிவன் சமீபத்திற் போகவேண்டும்; பின்ன ரேது
வுண்டாகுமோ வது வுண்டாகட்டுமென் றிப்படி நிச்சயித்
தந்தக் கழுகின் கிட்டப்போய், "சமர்த்தனே, உனக்கு
வந்தனம் பண்ணுகிறேன்" என, கழுகு அதைக்கேட்டு
"நீயார்?" என, அப்போது பூனை "நெடுஞ் செவியனென்

---

"How did Saratkavan die?" asked the deer; and the crow related as follows:—

In the hole of an old Itty tree standing on the mount called Trigoodem by the side of the river Bhagirati, there lived an old eagle called Saratkavan, who had lost the use of his eyes and claws. He lived by the compassion of other birds who daily fed him with a small portion of what they acquired for themselves. One day, a cat called Nedunchevian, with a view to devour the young of the birds, went under the tree where they were; upon which they made loud cries of alarm. The eagle hearing this, asked them why they were alarmed and who came there? In the meantime, the cat, seeing Saratkavan, was frightened nearly to death, but recovering himself thought within himself "I have not the ability to escape this enemy; I should therefore go forward towards him, come what will." He accordingly drew near the eagle and saluted him. "O thou powerful! I bow to thee."

"Who are you?" asked the eagle. "I am," said the cat 'Nedunchevian."

னும் பூனை" என, பின்பு கழுகன் "நீ சீக்கிரமா யிவ்விடம்விட் டோடிப்போ, இல்லாவிட்டாற் சாவாய்" என, பூனை "நானென் விர்த்தாந்தத்தைச் சொல்லுகிறே னதைக் கேள்; பிறகு கொல்லத்தக்கதானாற் கொல்லு; சாதி பேதத்தினாலேயே பிராணிகளைக் கொல்லுவதாவது பூசிப்பதாவது யோக்கியமல்ல; அதனா லவனவன் நடத்தையைப் பார்த் ததெது செய்யத்தக்கதோ வது செய்யவேண்டும்" என, கழு கிதைக்கேட்டுப் பூனையைப்பார்த்து "நீ யேன் வந்தாய் சொல்?" என, பூனை "நான் கங்காதீரத்தில் நித்யஸ்நானம் பண்ணிச் சாந்திராயண முதலாகிய விரதங்களாசரித்துக்கொண் டிருக்கின்றேன்; நீ மிகவுந் தருமவானாயிருக்கின்று யென்று பக்ஷிகளா லெப்போதுங் கேள்விப்படுகிறதினாலும் வயதின் முதிர்ந்த வித்துவானிடத்தில் தருமங் கேட்கவேண்டுமென்று சாஸ்திர மிருக்கிறதினாலு நா னுன்னிடத்திற்கு வந்தேன்; நீ தர்மத்தைவிட் டென்னைக் கொல்லத் துணிந்தாய்; இப்படி யில்லறத்தாருடைய வாசார மெங்கும் பார்த்ததில்லை; சத்துருவுந் தன்வீட்டுக்கு வந்தாற் சாதுக்க ளவனுக்குச் சம்மானம் பண்ணுவார்கள்; மரந் தன்னை வெட்டுகிறவனுக்கு நிழல் கொடுக்கவில்லையா? சாதுக்கள் தங்கள் வீட்டுக் கெவன்வந்தாலும் பூசிக்கிறார்கள்; குறைச்சலொன்றும் பண்ணுகிறதில்லை; அதிதியாருடைய வீட்டுக்கு வந்து முகம் வாடிப்போகிறானோ வவன் தன் பாவத்தை யவ்வீட் டெசமானனுக்குக் கொடுத்

---

"On peril of death get away soon from this place" said the eagle.

"But" said the cat, "first hear my story and then you may kill me if I deserve it. Reference should be had to one's character and not to his caste, as the ground of hostility or kindness." "But why did you come here?" asked the eagle. "I bathe daily in the Ganges" replied the cat, "and observe *chandrayanum* and other fasts." As I hear from birds that you are ever very pious, and as the Shastras direct that knowledge of jurisprudence should be acquired of a sage advanced in years, I came to you, and you have now resolved to kill me disregarding the rules of justice. Such conduct in householders is not witnessed anywhere. Even an enemy is welcome, when he resorts to the house of the virtuous. Does not a tree afford shelter [shade] to one who is to cut it down? The virtuous welcome without distinction those who resort to their house and shew no disrespect. The guest that retires dejected from a house, takes away the virtue of the host, leaving to the latter his sin in return, and

திவன் புண்ணியத்தைக் கைக்கொண்டு போகிறானாகையா லெல்லாரிடத்திலுந் தயை செய்கிறார்கள் ; சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்” என, இதைக்கேட்டுக் கழுகு “பூனை யிறைச்சிகளைத் தின்கிறது ; மேலுங் கொலை செய்கிறதென்று நினைத் திப்படி நான் சொன்னேன்” என, அதைக்கேட்டு நெடுஞ்செவியன் பூமியைத் தொட்டுச் சிவசிவ வென் றுச்சரித்துக் காதின்மேற் கையை வைத்து, “நான் தருமசாஸ்திரங்கள் கேட்டு மிகுந்த வைராக்கிய மடைந்து பொல்லாத கருமங்களை யெல்லாம் விட்டுவிட்டேன் ; அநேக சாஸ்திரங்களில் கொலைசெய்வதுபோல வேறொரு பாதகமில்லையென்று சொல்லி யிருக்கின்றது ; எவர்கள் மற்றொருவனைக்கொன்று தங்களுக்குச் சுகத்தை விரும்புகிறார்களோ வவர்கள் நரகத்தை யடைகிறார்கள் ; ஆகையாற் கொலைசெய்யாம லிருப்பது போல வேறொரு தரும மில்லையென்று நினைத்துக் காட்டிலிருந்துகொண்டு காய் கனி கிழங்குகளைச் சாப்பிடுகிறவர்கள் பாதக மெப்படிப் பண்ணுவார்கள்?” என்றுசொல்லிக் கழுகுக்கு நம்பிக்கை வரப்பண்ணி யதன் வீட்டிலிருந்தது. பிற கந்த ருத்திராக்ஷப்பூனை பட்சிகளின் குஞ்சுகளை நாடோறு மங்கே கொண்டுவந்து தின்றுகொண் டிருக்கத் தலைப்பட்டது. அப்போது குஞ்சிழந்த பறவைகளெல்லாங் கிலேசப்பட் டொன்றாய்க்கூடித் தங்கள் குஞ்சுகளைத் சோதிக்கத் தொடங்கின. பூனை யிதையறிந் தவ்விடம்விட்

---

so they, the virtuous, are well disposed towards all. The moon shines even in the house of a villain."

On this, the eagle replied that he remarked so, knowing that cats feed on flesh and kill other animals.

Hearing this, the long-eared, (cat), touching the ground, uttering the mystic words—Siva, Siva,—and covering his ears with its hands, replied thus:—"Hearing jurisprudence and acquiring religious zeal, I renounced all evil deeds. Many Shastras declare that there is no sin greater than that of killing. He who desires to be happy at the cost of the life of another, goes to hell. How can then one commit sin who lives in a forest feeding on fruits ripe and unripe and roots of vegetables, thinking that there is no charity better than that of abstaining from killing?" By such arguments, gaining the confidence of the eagle, the cat lived in his house. Thenceforward the hypocritical cat continued to bring young birds and feed on them there. The birds that were bereft of their young ones, being much aggrieved, began collectively to search for them. Learning this, the cat ran away.

டோடிப்போயிற்று. அந்தப் பக்ஷிக ளங்கே பார்த்துக் கொண்டே கழுகின் பொந்தண்டைவந்து பார்க்கையி லக் குஞ்சுகளுடைய வெலும்புகளும் சிறகுகளும் விழுந்து கிடக்கக்கண்டு, நம்முடைய குஞ்சுகளை யிந்தத் துரோகிக் கழுகே பக்ஷித்ததென்று நிச்சயித் தந்தக்கழுகைக் கொத் திக் கொன்றன. ஆகையா லொருவனுடைய குணந் தெரி யாம லவனுக் கிடங்கொடுக்க லாகாது" என, அப்போது நரி "ஒருவன் சுபாவஞ் சிநேகிக்கிறதற்கு முன்னே தெரி யுமா? நல்லோர்களுக்குச் சுபாவத்தினலே காரியமில்லை; அவர்களுடைய சிநேகங் கண்டமாத்திரத்திலேயே யாகி றது" என, மா னதைக்கேட்டுக் காகத்தைப்பார்த்து "எப் படி நீ யெனக்கு மித்திரனோ வப்படியே யிவனு மிருக்கட் டும், நீ யொன்றுக்குந் தடைசொல்லாதே" என்று சொல்லி நரியைத் தன்னிடத்தில் வைத்துக் கொண்டது. பிறகு மூன்றுந் தங்கள் மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக் கொண்டு ராத்திரிச் சந்தவிடத்தில் வந்துகொண் டிருந் தன. இப்படியிருக்கையி லொருநாள் நரி மானைப்பார்த்து "மித்திரா! இந்தக்காட்டி லிளவிளவென்று நேர்த்தியான பயிரிருக்கிறதை யுனக்குக் காண்பிக்கிறேன்" என்று சொல் லி யதை யிட்டுக்கொண்டுபோய்க் காட்டிற்று. அன்று முதலா யந்தமான் போய்த் தினமானம் பயிரை மேய்ந்து கொண் டிருக்கையி லதைக் கொல்லைக்காரன் பார்த் தங்கே வலைகட்டினன். பின்பு மானங்கே வழக்கப்படி மேயப்போ யதிற் சிக்கிக்கொண் டிப்போ தென்னை மித்திரனைத் தவிர

The birds in their seaich found that the bones and feathers of the young ones were scattered about the habitation of the eagle, and concluded that this treacherous eagle had fed upon them and so they all pecked him to death. Therefore should no shelter be given to one whose disposition is not known."

The fox then replied, "how can the disposition of one be ascertained before associating with him? As for the good, there is no need for seeing the disposition, as their friendship is formed at the first interview." The deer then addressing the crow, said "let him be my friend as you are, and do not say anything against it," and so saying he kept the fox with him. Then all the three continued to feed themselves in their own fashion and to resort to this place every night. While so living, one day the fox told the deer that he would shew him a place where the herbage was very nice and tender and directed him thither. From that day forward the deer daily grazed on the herbage and the cultivator observing this, set a trap. The deer grazing as usual, was caught

யார் விடுவிப்பானென்று மனதி லெண்ணிக்கொண் டிருக்கையில், அங்கே நரிவந் தென்னுடைய மனோரத நிறைவேறிற்று, இப்போது நா னித னெலும்பையு மாமிசத்தையு நிரம்பத் தின்னுவேனென்று வாயூற மனதிலெண்ணிக்கொண்டு சும்மாவிருந்தது. அதைக்கண்டு மான் “மித்திரா! ஏன் சும்மா விருக்கிறாய்? என்னுடைய தளையைச் சீக்கிரமா யறுத் தென்னை விடுவி; சங்கடகாலத்திற் சிநேகிதர்க ளுடையிழந்தவன் கைபோ லுதவுகிறார்கள்” எனச் சம்புகன், “ஆம நீ சொல்வதெல்லா மெய்யே, ஆயினுமெனக் கின்றைக்கு விரததின மாகையால் நானிந்தத் தோல்வலையைத் தீண்டமாட்டேன்; நாளைக் கென்ன சொன்னாலுங் கேட்பேன்; சிநேகிதனுக்காக நான் பிராணனை விடத்தக்கவன்” என்று சொல்லி யதன் கண்ணுக்குத் தப்பித்துக்கொண் டங்கே யோரிடத்தி லொளித்துக் கொண்டிருந்தது. காகம் இராத்திரிக்கு மான் வரவில்லையென் றதைத்தேடும்பொருட் டிங்குமங்குந் திரிந்துகொண் டங்கே வருகையி லந்த மானி னவஸ்தையைப் பார்த்துச் “சிநேகிதா! உனக்கிந்த வவஸ்தை யிப்படியேன் வந்தது?” என, மான் “இது வுன்வார்த்தையைக் கேளாமையால் வந்த பலம்” என, காகம் “உன் கூட்டாளியான சம்புகனெங்கே போனான்?” என, மான் “என்னுடைய விறைச்சியைத் தின்கிறதற்காக விங்கேதானே யொளித்துக்கொண் டிருப்பான்” என, அதைக்கேட்டுக் காகம் “தனக் கிதம்

---

in the net and was meditating who could help him but his friend. While so, the fox came there and seeing this, thought earnestly within himself, that his desire was then accomplished and that he would fully feed on his bone and flesh and remained silent. The deer observing him, said “O Friend, why art thou quiet? Cut off my bond and relieve me. In time of distress, friends help just as the hands of one whose garment is loosened.” “What you say is true” said the fox, “but to-day is a fast day with me and so I cannot touch this skin trap. I would readily do whatever you want tomorrow; I am one who will give up his life for the sake of his friend,” so saying, the fox went out of sight and hid himself near.

The crow, seeing that the deer did not come for the night, flew here and there in search of him, and saw the distress of the deer, when he said “Friend ! how did this come to you?” The deer replied “This is the result of not listening to your words.” “Where is your friend, the fox,” asked the crow; and the deer answered “he would be lurking here to feed on my flesh.”

பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவனுக்கு விபத்துச் சீக்கிரமாக வரும்; பின்னு மவன் சத்துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கிறான்" எனச் சொல்லிக்கொண் டிருக்கையிற் கொல்லைக்காரன் கையி லொருதடியை யெடுத்துக் கொண்டுவர, அவனைப் பார்த்துக் காகம் மானுக்கு "மித்திரா! நீ யிப்போது மூச்சை யடக்கிக் கொண்டு செத்தவனைப்போலக் கிடந்தா லவ னுன்னைப் பார்த்து நீ செத்தாயென் றெண்ணிக்கொண்டு கட்டிய வலையை யவிழ்த்துச் சுருட்டி வேறோரிடத்தில் வைக்கப் போவா னப்போது நான் கத்துகிறே னதைக் கேட்ட மாத்திரத்தில் நீ மிகவும் விரைவா போட்டம் பிடி" என்று சொல்லித் தா னப்படியே பொய்யாக மானின் கண்ணைக் குத்திக்கொண்டிருந்தது. இதற்குள்ளே வந்த கொல்லைக்காரன் மானைப் பார்த்துச் செத்ததென் றெண்ணிக் கட்டியிருந்த வலையை யவிழ்த் தோரிடத்தி லொன்றாகக்கூட்டி வைக்கப் போனான். காக மதைப்பார்த்துச் சங்கேதப்படி கத்த, மானதைக் கேட்டவுடனே போட்டம் பிடித்தது. அதைக் கொல்ல நினைத்தக் குடியானவன் தடியை விசிறி யெறிய அது பதிவிருந்த நரிமேற்பட் டிறந்தது. ஆகையாற் புண்ணியமாவது பாவமாவது மிகுதியானா லதன்பல னுடனே யுண்டாகிற தென்று சொல்லிப் பின்னு மெலி யிப்படி மானுக்கு நரியின் சிநேகம்போ லுன்னுறவு உபயோகமன்று" என, காகம் "உன்னைத் தின்றா லெனக்குப் போ

---

The crow hearing this said, "Misfortune soon befalls him who does not attend to the advice of his friend who does him good. He further creates pleasure in his enemies." While he was thus conversing, he observed the cultivator coming with a stick in his hand and addressed the deer as follows:—"Friend, suppress your breath and fain to be dead, and the cultivator taking you to be dead would release you, and take away the net to secure it. Then I would crow, when you should run away with all speed." After saying this, he falsely pecked at the eye of the deer. The cultivator who arrived in the meanwhile, taking the deer to be dead, loosened the net and took it away collectively to secure it. The bird then crowing as arranged, the deer ran away and the cultivator flung his stick to kill the deer, which struck the fox that was lurking there and killed him.

"So," said the rat, " the result of sin or virtue when they increase will soon come to pass and your friendship will be just like that of the fox to the deer."

The crow then replied "you will not suffice me as food; if

தமா? நீ பிழைத்திருந்தால் நான் சித்திரக்கிரீவனைப் போ
லச் சுகமடைவேனென் றுன் நட்பை விரும்புகிறேன்"
எனப் பின்னு மிரணியகன் "நீ யெனக்குப் பகைவன்; உன்
னுடனே நான் சிநேகம் பண்ணுகிற தில்லை; சத்துரு தனக்
கனுகூலமா யிருந்தாலு மவனோடே சிநேகிக்க லாகாது;
தண்ணீர் வெந்நீரானாலு நெருப்பை யவிக்கும்; எது தக்க
தோ வதைச் செய்யவேண்டும்; தண்ணீரில் வண்டியும் பூமி
யின்மேற் கப்பலு நடக்குமா? இதனாற் சத்துருக்களிடத்
திலும் வியபிசாரியிடத்திலு நம்பிக்கை வைக்கலாகாது"
என் றிப்படி பலவிதமாகச் சொல்லக் காகம் "நானுன்
னுடனே சிநேகிப்பே னில்லாவிட்டாற் பட்டினியா
யிருந் திங்கேயே பிராணனை விடுவேன்; நெருப்பின் வெப்
பத்தினாற் பொன் முதலானவை யுருகி யொன்றுகிறது;
யாதேனு மொரு நிமித்தத்தினாலே விலங்கு பறவைகள்
மித்திரத்துவத்தை யடைகின்றன; பயத்தினாலாகிலும்
யாதோ ராசையினா லாகிலு மூடர்களுக்குச் சிநேகமுண்
டாகிறது, சாதுக்களுடைய சிநேகமோ கண்டமாத்திரத்தி
லுண்டாகிறது; மண்பானை சீக்கிரமா யுடைகிறது; பிறகு
பொருந்துகிறதில்லை; பொன்குடஞ் சீக்கிரத்திலுடையாது;
உடைந்தாலு மொன்றும்; இப்படியே துர்ச்சன சற்சனர்க
ளுடைய சிநேக மிருக்கிறது" என, இதைக்கேட் டிரணி
யகன் "உன் வார்த்தையால் நான் சந்தோஷ மடைந்தே

---

you live, I shall benefit as did Chitragrivan and therefore do I desire your friendship."

The rat Eraniakan said, "you are my enemy and I will not therefore form any friendship with you. Even if the enemy was prone to favor one, he should not befriend him. The cold water, though heated hot, will still quench a fire. Consequently what is proper should alone be done. Can carriage move on water and ship sail on land? Consequently no trust can be laid on an enemy or a prostitute." The crow replied, "I should be friend to you or else I would die here starving. Gold and other metals melt and mix together by heat of fire. The beasts and birds unite in friendship by some cause or other. Through fear or desire, friendship is formed among the illiterate, while the friendship of the virtuous is formed at the very first interview. Earthen pot soon breaks and never joins afterwards, but the golden one will not easily break, and even if it should, it can be soldered. The friendship of the good and wicked is of a smilar nature."

Hearing this, the rat Eraniakan said; "I am pleased with your conversation. We should move together with unsullied

னிப்போ துனக்கு மெனக்குஞ் சிநேகத்துவ மிருக்கட்டு மினிமேல் நாமிருவரு மொருமனதா யிருக்க வேண்டும்; உபகாரம் பண்ணுகிறவன் மித்திரனென்றும், அபகாரம் பண்ணுகிறவன் சத்துருவென்று மறிந்து மனக்களங்க மில்லாமல் நடக்கவேண்டும்" என் றிப்படிப்பேசி நிச்சயித் திரணியகன் லகுபதனனுக்குச் சிறிதாகாரங் கொடுத்துத் தன் வளையிற் போயிற்று. சிநேகலாபம் பெற்ற காகமு மதனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு தன்னிடத்திற்குப் போயிற்று. அதுமுதலா யிவைக ளத்தியந்த சிநேகமா யொன்றுக்கொன் றாகாரங் கொடுத்துக்கொண்டு பலபல வார்த்தைகள் பேசிக்கொண் டிருக்கையி லொருநாள், லகுபதன னெலியைப் பார்த்து, "மித்திரா! இப்போ திங்கே யிரை யகப்படாமையால் வேறோரிடத்துக்குப் போக விச்சிக்கிறேன்" என, அதைக்கேட் டிரணியகன் "எங்கே போகிறாய்?" என, அப்போ தது "தண்டகாரணியத்திற் கர்ப்பூரகௌர மென்கிற தடாகத்தி லிருக்கிற வாமையாகிய மந்தரனென்பவ னெனக்குச் சிநேகிதனா யிருக்கிறான்; அவனெனக்கு விதம் விதமான மீன்களைக் கொடுத்துப் போஷிப்பான்; அதைக் குறித்து நானவ னிடத்திற்குப் போகிறேன்" எனக்கேட் டிரணியகன் "மித்திரா! அவ்விடத்திற் கென்னையுங் கொண்டுபோக வேண்டும்; நான் தேசாந்தரம்போக விரும்புகிறேன்" என, அப்போது காக்கை "நீ யப்படி விரும்புவானேன்?" என, இரணியகன்

---

heart, reckoning him as friend who does good and him as an enemy who does evil." By these arguments, they at last determined to be friends. The rat after giving Laghupathanan some food retired to his hole. The crow benefited by friendship took leave of the rat and returned to his place. Thenceforward their intimacy increased,they mutually exchanged food, and conversed on different topics. In the meanwhile, the crow addresssing the rat one day, said :—" I intend going to another place, as at present, no food can be procured here." The rat asked, whither do you intend going? The crow replied :—

" I have a friend Mautharan, a tortoise, who resides in the tank called Karpuragowram, situated in the forest known as Thandakaranium. He will feed me with different kinds of fish and so I intend going to him."

Hearing this the rat Eraniakan said;—" Friend ! take me also with you; I intend going to a foreign country." The crow asked the rat, why he desired to do so; and the rat replied that

"அங்கே போனபின்பு சொல்லுவேன்" என, லகுபதனனிரணியகனை யெடுத்துக்கொண் டந்தவிடத்துக்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து மந்தர னவ்விரண்டுக்கு மாதித்தியம் பண்ணிற்று. அப்போது லகுபதனன் மந்தரனைப் பார்த்து "இந்த விரணியகன் மிகவும் பரோபகாரி; இவன் சித்திரக்கிரீவனை யவன் கூட்டத்தோடுகூட வலையினின்றும் விடுவித்தவன்; அப்போ திவன் நட்புநிலைமையைப் பார்த்து நானு மிவனுடனே நட்புக்கொண்டேன்" என, அதைக்கேட்டுக் கூர்மஞ் சந்தோஷப்பட்டிரணியகனைப்பார்த்து, "மித்திரா! நீயிந்த மனிதசஞ்சாரமில்லாக் காட்டில் வருவானேன்?" என, அப்போ தெலி சொல்லுகிறது:—

"சம்பகாவதி யென்னும் பட்டணத்திற் சூடாகர்ணனென்னு மொரு சந்நியாசி, மிகுந்த சோற்றைக் கப்பரையிற் போட்டுறியின்மேல் வைத்துவிட்டு நித்திரை பண்ணிக்கொண் டிருப்பான்; பின்பந்தச் சோற்றை நான் தின்றுகொண்டு சுகமாக விருக்கிற நாளி லங்கே வீணாகர்ணனென்னு மொரு சந்நியாசி வந்தவனோடுகூட வநேககதாப்பிரசங்கம் பண்ணிக்கொண் டிருக்கையி லந்தச் சூடாகர்ணன் கையிலொரு தடியினாலே பூமியைத் தட்டிக்கொண்டு சோற்றைக் காப்பாற்றிக்கொண் டிருந்தான்; அப்போது வீணாகர்ணன் "என்னுடைய கதையை யநா

---

he would relate the same after going there. The crow, Lagupathanan, carried the rat to the place. Mantharan seeing these, gave them a welcome.

Then Laghupathanan addressing Mantharan said. "This Eraniakan is benevolent; he relieved Chittragrivan with his whole clan from the net in which he was caught; I then saw the steadiness of his friendship and contracted the same with him." The tortoise was much pleased at hearing this and said "Friend, what brought you to this uninhabited forest.?" The rat then replied as follows:—

'In the city of Sambakavathi there lived an ascetic named Sudakarnan who would hang up in a net work the remains of his food after meals in an earthen basin and then retire to rest. I then used to eat the same and live happily. In the meanwhile, there came another ascetic named Venakarnan, who was holding a discourse on different topics, while the former was striking the ground with a staff in his hand in order to protect the food (from me). Upon this Venakarnan asked the other, 'Why do

தரவு பண்ணி நடுவே வேறே யென்னவியாபாரத்தி லிருக்கிறாய்?" என, சூடாகர்ணன் "உன் வார்த்தையை யநாதரவு பண்ணவில்லை; இவ்வெலி யென்பாத்திரத்தி லிருக்கிற வன்னத்தை நாடோறுந் தின்னுகிறது; அதை யோட்டுகிறேன்" என, வீணாகர்ண னப்போ துறியைப் பார்த்துக் "கொஞ்ச பல முள்ள விந்த வெலி யிவ்வள வுயரமெப்படிக் குதிக்கிறது? இதற் கேதோ வொரு காரணமிருக்க வேண்டும்; அதுதா னேதவா யிருக்கலாமென்றாலோசித்துப் பார்த்தால் மிகவு மிங்கே திரவிய மிருக்க வேண்டும்; உலகத்தில் திரவியமுள்ளவர்கள் பலமுள்ளவர்களா யிருக்கிறார்கள்; அசாத்தியமான காரியங்களைச் சாதிக்கிறார்கள்; ராசத்துவத்துக்கு மிது காரணமாகும்; எல்லா மிதினு லாகின்றன" என்று சொல்ல, அந்தச் சந்நியாசி யிதைக்கேட்டு மெய்தானென்று நம்பிப் பூமியை வெட்டி, ஐயோ! என் திரவியத்தை யெடுத்துக்கொண்டான்; அன்று தொடங்கி நானிளைத்துப் போனேன்; பின் பெனக் கிரையுங் கிடையாததினால் மெள்ள மெள்ள நடந்துகொண்டிருக்கையி லந்தச் சந்நியாசி பார்த்துப் "பாரிந்த வெலி யிப்போது தன்னுடைய சாதித் தன்மையை யடைந்திருக்கிறது; முன்னிருந்த தனமதம் போய்விட்டது; ஆகையாற் பணமில்லாதவர்களை யெல்லோரு மற்பமாய் நினைக்கிறார்கள்" என, இதைக்கேட்டு நானிப்போ திங்கே யிருக்கிறது சரியன்று; இதை வேறொருவரோடுஞ் சொல்லலாகாது;

---

you neglect my stories and attend to other things?' Sudakarnan thereupon replied, 'I do not neglect what you say, but this rat daily eats the food in my dish, and I am driving it away.' Venakarnan then seeing the hanging net work said:—'How is this creature of little strength able to jump up to so great a height? There must be some cause for it; if well considered, there must be great wealth here. In this world those who have wealth are very strong, and they accomplish even things which seem to be impossible. Even royalty is upheld by it; all things are accomplished by this (i. e. riches).'

The other ascetic believing this to be true, dug up the earth and took possession of my treasure. From that day forward I grew weak and walked about feebly, not being able to procure any food. The ascetic seeing me thus walking, said 'see this rat has now assumed the usual state of its species: it had lost its spirit of wealth. Thus it is that people without wealth are held in low estimation.' It is not right to remain here, neither should I reveal this to others. Loss of wealth, family affairs,

பொருளிழவுங் கிருகச்சித்திரமுந் தானமு மானமு மவ
மானமு மாயுளுந் தனமுமாகிய விவைகளைப் புத்திமான்
வெளிப்படுத்த லாகாது; தன்விதி பிரதிகூலமா யிருக்குங்
காலத்திற் பராக்கிரமமு முயற்சியும் வீணாகின்றன; பண
மில்லாதவனுக்கு வனவாசத்தைக் காட்டிலுஞ் சுகமில்லை;
எந்தவிடத்தில் நாம் பணக்காரரா யிருந்தோமோ அந்த
விடத்தி லேழையா யிருக்கிறது உத்தம மன்றென்று மறு
படி யிழந்த பணத்தை யெடுத்துக்கொள்ள வாயத்தப்பட்
டேன்; அப்போது சந்நியாசி யென்னைத் தடியா லடித்தா
னதனாலே மிகவுந் துக்கப்பட்டு வுன் சிநேகிதனோடேகூட
விங்கே வந்தேன்" என, மந்தரன் "மித்திரா! நீ யிதனா
லதைரியப்பட் டுறைவிடந் துறந்தோ மென்று வருத்தப்
படவேண்டாம்; சாதுக்க ளெங்கே போனாலு மரியாதை
பெறுகிறார்கள்; சிங்கம் வேறொரு காட்டுக்குப்போனாலும்
புல்லைத் தின்கிறதில்லை, யானையையே தின்னும்; உற்சாக
முள்ளவன், சந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன்,
களங்கமில்லாதவ னிவர்களிடத்திலே லட்சுமி தானே வந்
தடைகிறாள்; நீ பணமிழந்தாலு மெப்போதுஞ் சந்தோஷத்
தோடே கூடியிருக்கிறாய்; ஆகையா லுனக்கிருக்கிற சுகம்
பணத்தாசையான் மயங்குகிறவர்களுக் கில்லை; இன்னுங்
கேள்; மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, இளம்புல்,
பாலஸ்திரீ, யௌவனம், தன மிவைகள் வெகுநாளைக்கு

---

charity, honor, disgrace, age and wealth, these things should not be revealed by the wise. When fortune is adverse, valour and labour prove fruitless. To the destitute, nothing is more happy, than residing in forests It is not advisable for us to live poor in the same place in which we were once rich. Reflecting in this manner, I attempted to regain my treasure, when the ascetic struck me with his staff. Being much aggreived by it, I came here with your friend."

Mantharan then addressing him said, " Friend, Do not be dispirited by this, nor be grieved for having abandoned your abode. The virtuous are respected wherever they go. The lion even when he goes to another forest will prey only upon an elephant and not eat the grass. The goddess of fortune will of herself favor the resolute, the cheerful, the courageous, the heroic and the honest. Although you have lost your treasure, yet you are always cheerful. The happiness you enjoy is not found in those who are deceived by avarice. The shade of clouds, the favor of the wicked, the tenderness of grass, maiden beauty, the (freshness of) youth, and riches are all of short

கில்லா; ஆகையா லிவை யிழந்துபோனா லழுதுகொண்
டாகாரத்தைக் குறித் தேங்கி யிருக்கலாகாது; எவன் கர்ப்
பத்தி லிடுகிறானோ வவன் பிறக்கிறதற்கு முன்னே தானே
தாய் முலையிற் பாலை யமைத்து வைக்கிறான்; அப்படிப்
பட்டவ னாயுசுள்ள வரைக்குங் காப்பாற்ற மாட்டானா? நீ
நல்ல விவேகியா யிருக்கிறதினா லிவையெல்லா முனக்குத்
தெரிந்தேயிருக்கும்; இனிச் சிநேகமா யென்னிடத்திற்
சுகமா யிரு" என, இவை யெல்லாங் கேட்டு லகுபதனன்
'மந்தரா! நீ சகலகுண சம்பன்னன்; மேலுஞ் சற்குணன்,
சாதுக்களுக்கு வந்தவாபத்தைச் சாதுக்களே நிவர்த்தி
பண்ணுகிறார்களென் றறிந்து நாங்களுன்னை நாடி வந்
தோம்" என்று சொல்லி, நீண்ட பெரியமரத்தின்மேற்போ
யுட்கார்ந்து தன் சுபாவப்படியே யிங்குமங்கும் பார்த்துக்
கொண் டிருக்கையி லேதோ வொரு பயமுகாந்தரத்தை
யறிந் தவ்விரண்டுக்கும் "நீங்க ளுங்களிடத்தி லொளித்துக்
கொண்டிருங்கள்" என, மந்தரன் தண்ணீரிற் போயிற்று.
எலி வளையில் நுழைந்தது. காகம் விருட்சத்தின் நுனியி
லிருந்து பார்க்கையி லேதொன்றுங் காணப்படாமையால்
பின் பம்மூன்று மொன்றுக்கொன்று பேசிக்கொண் டிருக்
கையி லங் கவைகளின் சமீபத்திற் சித்திராங் னென்னு
மொரு கலைமான் வந்து "நான் வேடர் பயத்தா லுங்க
ளிடத்தி லிருக்கலாமென்று வந்தேன்" என, அதைக்கேட்டு

---

duration. If these are lost, we should not grieve with too much concern for our livelihood. He who forms the child in the womb provides milk in the mother's breasts before it is born. Will not such a *Being* protect you as long as you live. As you are very intellegent, these may be known to you. You may hereafter be my friend and live happily here."

Hearing all this, Laghupathanan spoke as follows:—" O Manthara, you are blessed with all good qualities and possessed of an excellent disposition. Knowing that the virtuous alone deliver the virtous from the misfortunes which befall them, we have come to you." So saying it perched on a large high tree and looked about according to its nature. On apprehending some danger, it directed the other two to hide themselves. Mantharan went into the water, the rat into his hole and the crow seated itself on the top of the tree. Finding nothing to fear, they were again conversing together, when there came near them a stag named Chittrangan who said " I came hither for protection through fear of hunters "

மந்தர னதற்குச் சம்மானம்பண்ணி "இது வுன்வீடு, நானுன் சேவகனென் றெண்ணிக்கொண்டு சுகமா யிருக்க வேண்டும்" என, முகமலர்ந்து மனங்கலந்த வின்சொற் சொல்ல, பிற கதுவு மிவைகளுடன் நட்புக்கொண் டிருந்தது. அப்படி யிருக்கையி லொருநாட் சித்திராங்க னென்னு மான் புன்மேய வேறோரிடத்திற்குப் போய் மீண்டு சாயங்காலம் வராமையா லாமை மேயப்போன மா னின்னமுங் கேன் சாயந்திரம் வரவில்லை? என்று விசனப்பட வதையறிந் ததெல்லாம் விசனமடைந்தது. மறுநாள் விடியற்காலத்திற் காக்கை பறந்து நாலுபக்கத்திலும் பார்த்துக்கொண்டுபோகையிற் சித்திராங்கன் தோல்வலையி லகப்பட்டிருக்கிறதைக்கண் டதன்கிட்டப்போய் "மித்திரா! வுனக்கிந்த வவஸ்தை யெப்படி நேரிட்டது?" என, மான் "இப்போ திதைக்கேட்டுப் பிரயோசன மில்லை' நீ போ யிரணியகனைச் சீக்கிரமா யிட்டுக்கொண்டு வந்தா லவன் வேடன் வருகிறதற்கு ளென் பாசத்தை யறுத் தென்னை விடுவிப்பான்; வேடன் வந்தா லொ ருபாயமு நடவாது" என, இதைக் கேட்டவுடனே விரைவாகப்போ யவைகளுடனே நடந்த காரியத்தைச் சொல்லி யிரணியகனை யிட்டுக்கொண்டு வந்தது. அந்த விரணியகன் மானைப்பார்த்து "நீ சமர்த்தனு யிருக்கையில் வலையி லெப்படி யகப்பட்

On hearing this, Mantharan heartily welcomed him, and said "Look upon this as your own house, and upon me as your servant, and live comfortably. "From that time, the stag also lived on terms of friendship with the rest. While they were thus living, it happened on a certain day, that the stag Chittrangan who went to graze in another place, did not return in the evening. The tortoise felt sorry for his absence; and the others also were sorry, when they knew it. The next morning, the crow, flying in all directions, came across the place where the stag Chittrangan was caught in a net of skin, went near him, and spoke as follows: "O friend, how did this disaster happen to you?" The stag replied thus: "There is no use of asking this question just at this moment; you must go at once, and bring Eraniakan here quickly. If he comes, he will set me free by biting asunder the thongs of the net before the hunter comes; after his coming no craft will succeed." As soon as he heard this, he went back with all haste, informed them of the matter, and brought Eraniakan to the place. Then the rat Eraniakan inquired of the stag, "How is it that you being a clever fellow, have fallen into the net?" The stag

டாய்?" என, மான் "வல்லமை யிருந்தாலும் வருவது வரும், இப்போ தென்னைச் சீக்கிரமாய் விடுவி, எனக்குப் பழைய பய மிருக்கின்றது; முன் நான் குட்டியாயிருக்கையில் வேடன் வலைகட்டி யென் கூட்டத்தை வளைத்தான்; மற்றவைகள் பெரிய மான்களா யிருந்தபடியாற் குதித்து வலையைத் தாண்டிப்போயின; எனக்குக் குதித்தோடச் சக்தியில்லா திருந்த தாதலால் வேடன் பிடித்திராஜனிடத்திற் கொண்டுபோனான்; ராஜா வாங்கித் தன் பிள்ளைகையிற் கொடுக்க, அங்கே நான் வெகுநாளிருக்கையி லொருநாள் மேக கர்ச்சனையைக்கேட்டு மிகவுஞ் சஞ்சலப்பட்டுக் காற்றுமழையாற் பீடிக்கப்பட்டு மான் கூட்டங்களோடும்போ தவற்றின்பின் நா னோடுவேனோ வென்று மனுஷ பாஷையி லெனக்குள்ளே பேசிக்கொண்டேன்; ராஜகுமார னிதைக்கேட்டு நாற்றிசையும் பார்த் தென்னையும் பார்த்தான்; பின்பு சற்றுநேரஞ் சும்மாவிருந்து இது மனுஷனைப்போ லெப்படி யுச்சரித்தது? ஆகையா லிது வொரு விசித்திரப் பிராணியா யிருக்கிறதென்று நினைத்துப் பயத்தினாற் சுரத்தில் விழுந்தான்; பிறகு விடியற்காலத்திற் சோதிஷர்களை யழைப்பித் தவர்களுடனே யிதைச் சொல்ல, அவர்க ளெல்லா மிருகங்களு மனிதரைப்போற் பேசுகின்றன; ஆயினு நமக்கு முன்னே பேசுகிறதில்லை; அதுவு முன்னைப் பாராமற் பேசிற்று; இதற்காக நீ பயப்

replied thus:—" Though one may be powerful, yet what is destined to happen, will happen. Set me free as soon as possible. I am still labouring under a former fear. When I was young, a certain hunter spread his net for catching all our party. As the rest of the deer were full-grown they escaped by leaping over the net. As I was not able to leap over it, the hunter caught and took me to the king. The king received me and gave me to his son. While I was living there for a long time, hearing, on one occasion the sound of the thunder and being much perturbed, I spoke to myself in human language thus: 'When herds of deer are overtaken by rain and wind, and begin to run, shall I be able to keep pace with them ?' The prince, on hearing these words, looked around on all sides, and then looked at me also. Reflecting for a time, he said: 'How did this deer articulate like a man ? This must be a wonderful animal' So thinking, he caught fever through fear. The next morning, he sent for the astrologers, and told them what had happened. They all replied: 'All animals speak like men; but not in our presence. This deer spoke, not noticing that you were present.

படவேண்டாம் இது யாதொரு விசித்திரப் பிராணியன்று; இதனா லுனக் கெவ்வளவும் பயமில்லை யென விதைக்கேட்டு ராஜகுமார னென்னை விட்டுவிட்டான்; பிற கிக்காட்டில் வந்தேன்; இப்படி முன்னொருதரம் வலையி லகப்பட்டேனாகையா லென்னைச் சீக்கிரமாக விடச்சொல்லுகிறேன்” என, இதற்குள்ளே மித்திரத்துவத்தினாலே மந்தரனு மங்கேவந் திரணியகனைப் பார்த்து, “மித்திரா! இப்படித் தாமசம் பண்ணுகிறது சரியன்று; இப்போது வேடன் வந்தால் நாமெல்லா மோடிப்போவோம்; வலையிலகப்பட்ட சித்திராங்கனைப் பிடித்துக்கொள்வா னிதைக்குறித் தெனக்குக் கிலேசமா யிருக்கிறது, நினைப்பின்படி மனதிலிருக்கிறதை யறிகிற சிநேகிதனும் மனோகர ஸ்த்ரீயும் பிறர் துக்க மறிகிற பிரபுவுங் கிடைக்கிற தருமை” என் றிப்படி மந்தரன் சொல்லிக்கொண் டிருக்கையில் வேடன் சடிதியி லெமனைப்போல் தூரத்தில் வருகிறதை லகுபதனன்கண்டெலியைப் பார்த்து, “மித்திரா! வேடன் வந்தான்; இப்போது பெரிய சங்கட நேரிட்டது” என, அதைக்கேட்டிரணியக னதிசீக்கிரமாய்ச் சித்திராங்கன் வலையை யறுத்தது. அறுத்தவுடனே கிட்டவந்த வேடனைப் பார்த்

Therefore you need not be afraid of this. This is not an unusual creature. Be not afraid of it at all. On hearing this, the prince set me free. After this, I came to this forest; as I was once before caught in a net, I ask you to set me free as soon as possible."

In the meantime, the tortoise Mantharan, induced by friendship, also arrived at the place, and addressed Eraniakan thus: "O friend, delaying in this way is not good. If the hunter were to come now, we should all run away; and he would seize Chittrangan who is caught in the net. This is a sorrow to me. He who ascertains what is in the mind of his friend, a woman of pleasing manners, and a prince who sympathises with the sorrows of his subjects, are rare objects." While Mantharan was thus speaking, the crow Laghupathanan beheld at a distance the hunter coming suddenly like Yama, the god of death, and spoke to the rat as follows: "Friend, the hunter is come. Great trouble has befallen us." Hearing this, Eraniakan bit asunder the thongs that bound Chittrangan as quicly as possible. No sooner did the hunter approach than they all ran off. He was extremely

தெல்லா மோட்டம் பிடிக்க வப்போ தவன் விசன மடைந்து நாலண்டையும் பார்க்கையில் மந்தரன் தன் நடை யின்படி நடந்துகொண் டிருந்தது. வேட னதைப் பார்த்துத் தன் வில்லிற் சேர்த்துக் கட்டிக்கொண்டு கொஞ்சஞ் சந்தோஷத்தோடே போகும்போ ததைப்பார்த்து மானு மெலியுங் காகமு மிகவுஞ் சிரமப்பட் டிப்போ தென்ன செய்யலா மென்று வேடன் பினனே போகத் தொடங்கின. அப்போ திரணியகன் "ஒரு சங்கட நிவர்த்தி யாகிற தற்குள்ளே மற்ரொன்று வந்து நேரிட்டது; ஆகையால் ஜீவனுக்குத் தேகத்தோடு கூட வநேகந் துக்கங்களை யனுபவிக்கவேண்டி யிருக்கிறது. இந்தத் துன்பஞ் சிநேகத்தினால் நமக்கு வந்தது; எவன் மித்திரனிடத்தில் விசுவாசம் வைக்கிறானோ வந்த விசுவாச மவனுக்குத் தாய், தந்தை, சகோதரன், பிள்ளை, சுற்றங்களிடத்தி லிராது" என் றிப்படி வெகுவிதமாய்த் துக்கித்துப் பின்னும் "வேடன் தூரமாகப் போவதற்குமுன்னே மந்தரனை விடத்தக்க வுபாயம் பண்ணவேண்டும். பிறகு ஆகமாட்டாது" என, அப்போ தவைகள் "என்ன செய்யலாஞ் சொல்" என, எலி "சித்திராங்க னேரிகரையிற் செத்தவனைப்போலக் கிடக்கவேண்டு மதன்மேற் காக முட்கார்ந்து கொண்டு பொய்

---

sorry, and while looking round on all sides, saw Mantharan moving at a slow pace. He took hold of him, tied him tightly to his bow, and walked towards home with some pleasure. When he was thus going, the stag, the rat, and the crow, seeing this, were overwhelmed with deep sorrow, and not knowing what to do, began to follow the hunter. Then Eraniakan spoke thus: " Before one trouble has ended, another is come. It is necessary for the soul to suffer many evils, as long as it is in union with the body. We suffer all these troubles on account of friendship. He who sincerely confides in his friend will not equally confide in his parents, his brothers, his children or his relatives." Again, Eraniakan proceeded to speak as follows: "We must have recourse to some artful contrivance for saving Mantharan before the hunter gets far. Afterwards, we cannot succeed." Then all of them asked, "What can be done? Tell us." The rat replied "The stag Chittrangan must lie on the bank of the tank as if dead; and the crow must sit on him, and pretend to

யாகக் குத்த வேண்டு மப்படியிருந்தா லதை வேடன் பார்த்து மந்தரனைப் பூமியில் வைத்துவிட்டு மானண்டை போவா னிதற்குள்ளே நா னுமையின் கட்டைச் சேதிப் பேன், பிற கவ்வாமை தண்ணீரி லோடிப்போம்" என, இதைக்கேட் டெல்லா மவ்வாறே செய்து மந்தரனை விடு வித்தன. பிற கந்த வேடன் வாய்த் தவிடும்போ யடுப்பு நெருப்பு மிழந்தவள்போல வெட்கி மிகவும் வருத்த மடைந்து கைக்கு வாராத பெரிய லாபத்தை யிச்சித்துக் கைக்குவந்த சிறிய லாபத்தை யிழந்தேனே, யார்க்கு மதிக வாசை யதிக நஷ்டம்; கிடைத்த மட்டும் போதுமென்று நினைக்கிறவனே மகா புருஷன் என் றிங்ஙன மெண்ணிக் கொண்டு தன் வீட்டுக்குப் போனவுடனே யந்தக் காகமு மாமையு மானு மெலியு மிகச் சந்தோஷ மடைந்து தங் களிடத்தில் முன்போல வாழ்ந்திருந்தன."

முற்றிற்று.

---

peck his eyes. The hunter, seeing this will put Mantharan on the ground and come to the stag. In the meantime, I will bite asunder the cords that bind Mantharan." They did accordingly and saved Mantharan. Then the hunter, being ashamed like the woman who having bran in her mouth attempted to blow the fire and lost not only the bran but also quenched the fire and being greatly distressed, thought within himself thus: " Coveting the great gain that could not be obtained, I lost the small gain that I had in my hand. Great desire leads to great loss. The contented man is the great man. So thinking, he went home. After this, the crow, the tortoise, the stag, and the rat returned to their abodes with great joy, and lived happily together as before.

---

FINIS.

கடவுள் துணை.

# பஞ்சதந்திரம்.

## அரும்பதவிளக்கம்.

### Page—1.

சுகிர்லாபம்—சுகிர்த்-மித்திரனை, லாபம் - பெறுகிறது. வடமொழிச்சந்தியால் தகரம் லகரமாகத்திரியும்.

புத்திசாலிகள் - புத்தியால் விளங்குகிறவர்.

சாதனங்கள்—கருவிகள், ஒரு காரியத்தை முடிக்க உதவியாயிருப்பவைகள்; வடசொல்.

கோதாவரி - சொர்க்கம் கொடுக்க வல்லதாய் யாவராலும் வேண்டப்படுவது; வடசொல்.

வன்னி—ஆரியத்திரிபு, நெருப்பின் பெயர்; யாகத்துக்கு இந்த மரத்தின் கட்டையைக் கடைந்து நெருப்பு எடுப்பதனால் இந்த மரத்துக்கு வன்னிமரம் எனப் பெயர் வந்தது.

லகுபதனன்—பதனம் - விழுதல், பறந்து இறங்கல், லகு - சுலபமான, என்றால் வருந்தாமல் பறந்திறங்குந் திறமுள்ளவன். லகு - சீக்கிரம் எனவு முரைக்கலாம்.

யமன் - அடக்குகிறவன்.

பயங்கரம் - பயத்தைச் செய்வது.

துராத்துமா—துர் - கெட்ட, ஆத்துமா - மனதையுடையவன்.

சோதித்தல் - ஆராய்ந்து அறிதல்.

யத்தனம் - முயற்சி.

### 2.

தெளித்தல் - இறைப்பது.

பரிவாரம் - ஏவலாள் முதலான கூட்டம்.

சித்திரக்கிரீவன்—சித்திரம் - பல வர்ணமான, கிரீவன் - கழுத்தை யுடையவன்.

நிர்மானுஷியம் - மனுஷ்யர் இல்லாதது.

விபரீதம்—சாதாரணத்துக்கு எதிராயிருப்பது.

"பார்த்தேன்" என்னும் வினைக்கு மேல்சொல்லும் செய்கையை எனச் செயப்படுபொருள் வருவித்துக்கொள்க.

கேளுங்கள்—கேளும் என்கிற பன்மைவினைமேல் கள் என்பது விகுதிமேல் விகுதியா வந்தது.

ஆகாரம் - உணவு, ஆஹாரம் என்னும் ஆரியத்தின் திரிபு.

தர்ப்பை - ஒருவகைப் புல். வைதிகக்கிரியை செய்வதற்காக அதை வைத்துக்கொண்டிருப்பது.

வலிய—வலிமை என்னும்பண்படியாகப் பிறந்த குறிப்புவினை யெச்சம், கிடைக்கிற தென்பதற்கு உரியாக அமைந்தது.

### 3.

மரணத்துக்கு இடமாகிய - சாவுக்கு ஏதுவாகிய.

மரணத்துக்கு நாலண்டையும் வழி—பல ஹேதுக்களால் மரணம் கிடைக்கிறது என்பது கருத்து.

அவசியம் - இன்றியமையாமை.

புலியாரே - உயர்வினால் அஃறிணை பொருமையில் உயர்திணைப் பன்மை வந்தது. [பொது-சூ-உ௮.

இதோபாரும் — இதோ என்பது பொருளைப் பிரத்தியக்ஷமாகக் காட்டுகிற அருத்தில் பிரயோகிக்கப்பட்டது. இது சுட்டுப் பெயர், ஓ - பிரசித்தமேன்னுங் குறிப்பில்வந்த இடைச்சொல், அல்லது இட்டழிப்பட்ட இடத்தில் நியதியாய் வரத்தக்கதோர் அசைச்சொல்லுமாம். "முற்றுமற்றொரோவழி" என்பதனுல் உகரங் கெட்டது.

பிராமணோத்தமா - பிராமணருள் மேலானவனே, பிராமண உத்தம எனப் பிரிக்கவேண்டும்.

வைகறை - விடியற்காலம். வைகுதல் - தங்குதல், அறை - நீங்குவது, அறு - பகுதி, ஐ - தொழிற்பெயர்விகுதி. துக்கம் நீங்குகிறகாலம்.

நித்தியதானம் - நாள்தோறும் நியதியாய்க் கொடுப்பது, நித்தியம் தானம் எனப் பிரிக்க.

வேட்டல் - யாகஞ்செய்தல்.

ஓதல் - வேதம்படித்தல்.

கொடுத்தல் - தக்கவருக்குப் பொருள்கொடுத்தல்.

தவம் - விரதங்களைச்செய்தல்.

சத்தியம் - பொய்பேசாதிருத்தல்.

உறுதி - நல்வழியினின்று மனஞ்சலியாமை.

பொறுமை - தனக்குப் பிறர்செய்யுந் தீங்கைக் குறித்து மனங்கொதியாமை.

ஆசையின்மை - பிறர்பொருளை விரும்பாமை.

அபூர்வ வஸ்து - முன் ஒருபோதும் உண்டாகாதபொருள்; அ - எதிர்மறையைக்குறிக்கும் ஒரு உபசர்க்கம்.

லோகாபவாதம் — அபவாதம் - பழிப்பானசொல், உலகத்தார் சொல்லுகிற அபவாதம்.

4

தருமசாஸ்திரம்; தருமத்தை அறிவிக்கிற சாஸ்திரம்; இதுதான் ஸ்மிருதி என்று சொல்லப்படுகிறது.

பிராணி - பிராணனுள்ளது.

சுகதுக்கங்கள்-சுகமுந் துக்கமும், உம்மைத்தொகை.

தரித்திரன் - இல்லாதவன், பணமில்லாதவனுக்கு வழங்கும்.

ஐயோ — இரக்கக்குறிப்பாகிய இடைச்சொல்.

உலையில் - சேறுந் தண்ணீருங் கூடிய இடத்தில்.

திகைத்தல் - ஒன்றுந்தோன்றுமலிருத்தல்.

பயப்படாதே — எதிர்மறை ஏவலொருமை, வழக்கில் வருவது, எதிர்மறை விகுதி, தே - முன்னிலை யொருமை விகுதியாகக் கொள்க.

மெல்லென — குறிப்பு வினையெச்சம்.

எண்ணமிடுகிறுன் — இயல்பினுல் இறந்தகாலம் நிகழ்கால மாயிற்று.

வேதாத்தியயனம் - வேதத்தை ஓதுதல்; அத்தியயனம் - ஓதல்

5.

விசுவாசம் - நம்பிக்கை.

பச்சாத்தாபம் - ஒன்றைச்செய்து அதற்காகப் பின்னிட்டு வருந்துகிறது. பச்சாத் - பின், தாபம் - தபித்தல், வருந்துதல் என்றபடி.

குரோதம் - கோபம்.

நீசன் - தாழ்ந்தவன்; பறையனுமாம்.

6.

அவமானம் — மானம் - பெருமை, அல்லது மேன்மை; அதற்கு

எதிரா யிருப்பது சிறுமை, தாழ்மை.

பிராப்த்தியாயிற்று - கிடைத்தது; பிராப்த்தி - கிடைத்தல்

உபாயம் - சாதனம்.

ஒருமிக்க — ஒன்ருக, இறந்தகால வினையெச்சம், ஒருமை யென்னும் பண்படியாகப் பிறந்த ஒருமி - பகுதி.

சடிதி - சீக்கிரம், வடசொல்.

கபோதராசன் - புருக்களின் அரசன், கபோதம் - புரு.

கண்டகிரதி - கேடாளதேசத்தில் ஓடுவதோராறு; சாளக்கிராமமென்ற சிலைகள் இதிற் கிடைக்கின்றன வென்கிருர்கள்.

தீரம் - கரை.

சித்திரவனம்- வியக்கத்தக்கவனம்.

இரணியகன் - பொன் போன்றவன், அல்லது பொன்னையுடையவன்.

7.

தீங்குரல் - மதுரமான குரல்; தீ - இனிமை, மெலி மிகுந்தது.

சம்பாஷிக்கிறது - கூடிப் பேசுகிறது.

அவஸ்தை - நிலை, இது சங்கடமானநிலைக்குத் தமிழில் வழங்குகிறது.

சமர்த்தனுமே — இதில் உம் ஏ என்பன அசை, அல்லது வெளிப்படையைக் குறிக்கும், ஆச்சுதே எனவும் வழக்க முண்டு.

ராகு கேதுக்களால் பீடையாவது கிரகணம். பீடை - வருத்தம், கிரகணகத்துக்கு ஏதுவா யிராநின்ற நிழல்களை ராகுகேது என்று சோதிஷ சாஸ்திரிகள் வழங்குகிருர்கள். புராணங்களில் இவர்கள் அசுரர் என்றும் பாம்பின்வடிவானவர் என்றும் பகைமையால் சூரிய சந்திரர்களைப் பிடிக்கிருர்கள் என்றும் சொல்லியிருக்கிறது. சில வித்துவான்கள், அவ்வசுரர் அந்தநிழலைச் சார்ந்து மறைப்பதனுல் இரண்டெட்க்ஷும் சரி என்று ஒற்றுமைப்படுத்தி அதற்குத் தக்க வேதவாக்கியத்தை உதாகரித்திருக்கிருர்கள்.

8.

பாசத்தைத் துணி—பாசம் - கயிறு, அதன் கட்டை அறு என்றதாம்.

பந்தனை - கட்டு.

தளை - கட்டு.

நீதி - உலகத்துக்கு ஒத்தநியாயம்.

வேதனை - வருத்தம், நோய்.

பாலனம் - காப்பாற்றல்.

பரமசாது - மேலானசாது.

எசமானன்—யஜமாந என்கிறவடசொல்லின்திரிபு, யாககர்த்தாவுக்குப் பெயர். யாகத்துக்கு அவன் உடையவனுனதுபற்றி இலக்கணையால் அதிபதிக்குப் பெயராய் தமிழ்முதலிய பாஷைகளில் வழங்குகிறது.

9.

சேதித்தது - அறுத்தது. சேதி - பகுதி, ஆரியம்.

பாக்கியவான் - நல்ல அதிர்ஷ்டமுள்ளவன், வான் - உடைமைப்பொருளைக் காட்டும் விகுதி, ஆரியம்.

சமானஸ்தன் - ஒத்தநிலையிலிருக்கிறவன், ஸ்த - இருப்பது.

முகாந்தரம் - வேறுமுகம், இங்கே காரணம் என்கிற பொருள் கொள்ளத்தக்கது.

மகததேசம்—இது மாளவத்துக்குக் கிழக்கி லிருப்பது; இப்போது பேஹாரிற் சேர்ந்தது. பாடலிபுரம் என்பது இதன்பட்டணம்.

## 10.

அசாத்தியம் - வசப்படுத்தக் கூடா தது.

குத்திரபுத்தி - க்ஷுத்ரபுத்தி என்னும் ஆரியத்தின் திரிபு; அற்பம் அல்லது ஈனமான புத்தியுள்ளது; அன்மொழித்தொகை.

சம்புகம் - நரி.

சரற்கவன்—ஜரத் - கிழத்தனமுள்ள, கவன் - நேத்திர முள்ளது.

## 11.

பாகிரதிதீரத்தில் - சங்கைக்கரையில். பகிரதன் என்னும் அரசனால் பூமிக்குக் கொண்டுவரப்பட்டதனால் சங்கைக்குப் பாகீரதி என்கிற பெயர் வந்தது. தீரம் - கரை.

திரிகூடம் - மூன்று சிகரங்களுள்ளது.

முதிய—முதுமையின் அடியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்.

இத்திமரம் - இறலிமரம்.

நெடுஞ்செவியன் - நீண்ட காதுள்ளவன்.

நான்செத்தேன்—இங்கே நிச்சயம் பற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று.

உண்டாகட்டும்—இது ஒருவகை வியங்கோள் வினைமுற்று, உண்டாகு - பகுதி, அட்டும் - விகுதி யென்கிறார்கள்.

சமர்த்தன் - எடுத்தகாரிய முடிக்க வல்லவன்.

## 12.

சாதிபேதம் - சாதிவேறுபட்டிருக்கிறது; சாதியாவது பலபொருளிலும் தொடர்ச்சியா யிருப்பதொருதன்மை.

சாந்திராயணம் — சந்திரன் கலை தேயத்தேய உணவில் ஒவ்வொரு கவளமாய்க் குறைத்துப் பின் அது வளர வளர ஒவ்வொன்றாய் உயர்த்தி யுண்பதாகிய தொருவிரதம், சந்திர அயநம் எனப் பிரியும், அயநம் - ஓட்டம், சந்திரனுடைய கதியைப் பற்றிய தெனப் பொருள்படும். ஒன்றிற்கு இயற்பெயராகையால் நணு ஆயிற்று, ராமாயணம் என்பதுபோல்.

விரதம் - நியதியாய்ச் செய்வதொரு வைதிகக்கிரியை.

ஆசரித்தல் - ஒழுகல், செய்தல்.

ஆசாரம் - நடக்கை.

சம்மானம் - மேன்மைப் படுத்துகிறது.

குறைச்சல்—குறை - பகுதி, அல்-தொழிற்பெயர் விகுதி, சகரம் இடையில் தோன்றியது பெயர்ப்பகுபத இடைநிலை, சகரம் - சந்தி.

அதிதி—அதிகமாயிருப்பவன் என்பது அவயவப்பொருள், விருந்தாளி.

## 13.

சண்டாளன்-நீசன், கொலைத்தொழிலோன், பறையன்.

பூமியைத் தொடுகிறது — பூதேவி அறிய என்று பிரமாணஞ்செய்யுங் குறி.

வைராக்கியம் - ஆசையின்மை, ராகம் - ஆசை, வி - இன்மையை விளக்கும், விராகன் - ஆசையில்லாதவன், அவன் தன்மை வைராக்கியம்.

ருத்திராக்ஷப்பூனை - ருத்திராக்ஷங்களை அணிந்திருக்கிற பூனை. ஒரு பூனை ஒரு கோயிலில் சிவலிங்கத்தண்டை எலிகள் மிகுதியாய் வரத்துப்போக்கா யிருக்கதை அறிந்து அங்கேபோய் ருத்திராக்ஷங்க ளணிந்துகொண்டு சிவத்தியானம் பண்ணுகிறதுபோல் கண் மூடிக்கொண்டு

எல்லாவற்றையுங் கொஞ்சமுஞ்செய்யாததுபோல் இருக்க, எலிகள் பயமின்றி நித்தியம் வந்துபோய்க்கொண்டிருக்கையில் கடைசி எலியைச் சந்தடி செய்யாமல் தின்றுகொண்டு காலங்கழித்தது என்றொருகதை. அந்தப் பூனையைப்போல் வேடம் போட்டு வஞ்சனை செய்கிறதென்னுங் கருத்தினால் இப்படி சொல்லப்பட்டது.

தலைப்பட்டது - அதற்சென்று ஏற்பட்டது, ஆரம்பித்தது.

14

துரோகி - துரோகஞ்செய்தவன்.

துரோகம் - கெடுதி.

தங்கள் மார்க்கத்தின்படி - எதெது எங்கெங்கே போய் இரை தேட வேண்டியதோ அப்படி என்பது கருத்து.

இளை இளைவென—மிகவும் இளைமையாக என்பது கருத்து. விசேஷத்தைக் காட்டப் பண்படி இரட்டித்தது. என என்னு மிடைச்சொல், தான் சேருவதின் விதத்தைக் காட்டும். [இடை - கூ - ரு.]

தினமானம் - தினந்தோறும், மானம் - அளவு, தின அளவாக என்பது பொருள்.

51.

மனோரதம் - இஷ்டம், மனஸ் ரதம் எனப் பிரித்து மனஸ் ஆகிய தேர் எனப் பொருள் கொள்க. தேர்போல் ஓடுந் தன்மையுள்ளதாகையால் அப்படி வழங்கப் படுகிறது.

ஓரண்டை - ஒரு பக்கத்தில்.

16

விபத்து - ஆபத்து.

“சத்துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கிறான்” என்றால், ஒருவனுக்குத் துன்பம் வந்தால் அது அவன் சத்துருக்களுக்குச் சந்தோஷமாகையால் அதை படைக்கிறான் என்பது கருத்து.

சங்கேதம் - (இப்படி நடக்கிறதென்கிற) ஏற்பாடு.

]7.

பதிவிருத்தல் - ஒளித்திருப்பது.

தண்ணீர் - தண்மையான நீர்.

வெந்நீர் - வெப்பமான நீர்.

வியபிசாரி - வேறு புருஷனைச் சேருகிறவள்; வி அபி இரண்டு உபசர்க்கங்களோடு கூடிய சாரி என்பது கலியாணம் பண்ணாதவரோடு சேருகிறவளை யுணர்த்தும்.

நிமித்தம் - காரணம்.

விலங்கு - விலகிப் பிறந்தது, சிருட்டியில் இவை குறுக்காய்ப் பிறந்தன என்பதனால்; திர்யக் என்று சமஸ்கிருதத்தில் பெயர்.

பறவை—பற,வ்-பகுதி விகுதிகள், ஐ-கர்த்தாப்பொருள் விகுதி.

சிநேகமோ—இதில் ஓ முன்சொன்னதில் பின்சொல்வது வேறுபாடுள்ளதென்பதைக் குறிப்பிக்கிறது. இது இடைச்சொல்.

ஒன்றும் - கூடும், வினைமுற்று.

துர்ச்சன சற்சனர்கள் - கெட்டமனிதரும், நல்லமனிதரும். துர்ஜனர் — துர் = கெட்ட, சத்ஜனர் — சத் = நல்ல.

18.

அத்தியந்தம் - மிகுந்த, அதி அந்தம் எனப்பிரியும்; அந்தம் = முடிவு, அதைக்கடந்தது அத்தியந்தம்.

தண்டகாரணியம் - தண்டகன் என்கிற அரசனுடைய ராச்சியம் சாபத்தாற் காடானது. தண்டக ஆரணியம் எனப் பிரிக்க.

கற்பூரகௌரம் - கற்பூரம்போல் வெளுத்தது.

மந்தரன் - மெதுவா யிருப்பவன்.

போஷிப்பான் - காப்பாற்றுவான்.

19.

ஆதித்தியம் - அதிதிக்குச் செய்ய வேண்டிய கடமை.

பரோபகாரி - பர உபகாரி=பிறருக்கு உபகாரஞ் செய்கிறவன்.

கூர்மம் - ஆமை.

மனிதசஞ்சாரம் - மனிதர்நடமாடுகிறது.

சம்பகாவதி = செண்பக மரங்களுள்ளது.

சூடாகர்ணன்—சூடா = சிகரம், குடுமி, கர்ணம்=காது, சிகரம் போன்ற காதுள்ளவன், அல்லது காதண்டை குடுமி யுள்ளவன் என்பதுபொருள்.

சந்நியாசி — சந்நியாசம் - துறத்தல், அதையுடையவன்.

கப்பரை - கர்ப்பரம் என்பதின் திரிபு.

வீணாகர்ணன் - வீணைபோன்ற காதுள்ளவன்.

கதாப்பிரசங்கம் - கதைகளைச்சொல்லுதல்.

20.

அநாதரவு - பிரியமில்லாமை ; ந என்பது அ எனத்திரிந்தது.

திரவியம் - பணம்.

ராஜத்துவம் - ராஜாவா யிருத்தல்.

மெள்ள — இது மெல்ல என்கிற வினையெச்சம் மருவி வந்தது ; மிகவும் மெள்ள என்கிற பொருணிலையினால் அடுக்கியது.

தனமதம் - தனத்தினாலுண்டான செருக்கு ; தனம் - பணம்.

21.

கிருகச்சித்திரம் - வீட்டிலுள்ள சச்சரவு ; கிருகம் - வீடு, சித்திரம் - ஓட்டை, ஓட்டைபோல் பிறர் பிரவேசிக்க இடமா யிருக்கிற கலகம் என்பது கருத்து.

தானம் - ஒருவன் கொடுத்த பொருள்.

மானம் - ஒருவனால் சேர்ந்தபெருமை.

விதி ; - (ஒருவனுக்குப் பிறக்கும் போதே இன்னபடியாகக் கடவது என்று கடவுள் ஏற்படுத்திய) அமைப்பு ; இது அதிர்ஷ்டம் என்றும், தலையெழுத்து என்றும் வழங்கும் ; விதிக்கப்படுவது விதி ; விதித்தல் - கட்டளையிடுதல்.

பிரதிகூலம் - விரோதமா யிருக்கிறது ; பிரதி - எதிர், கூலம் - கரை என்றால், விரோதித்திருக்கிற எல்லை என்பதாம். அநுகூலம் என்பதில் அநு = உடந்தையான, கூலம் எனக்கொள்க.

ஆபத்தப்பட்டேன் - சித்தமானேன்.

மரியாதை - எல்லை ; அதுமேன்மைப் படுத்துவதற்கு வழங்கும்.

உற்சாகம் - மனவெழுச்சி, ஒரு வேலைசெய்ய மனம் துணிந்திருப்பது.

தைரியசாலி - தைரியத்தால் விளங்குகிறவன்.

களங்கம் - அழுக்கு=குற்றம்.

லக்ஷ்மி - செல்வம்; அதற்கு அதிபதியான திருமகள் பெயர் உபசாரமாய் வழங்கப்படுகிறது.

மேகச்சாயை - மேகத்தினாலுண்டாகும் நிழல்.

பாலஸ்திரீ - இளமையான பெண்.

யௌவனம் - வாலிபம்.

22.

கர்ப்பம் - வயிறு.

சகலகுண சம்பன்னன் - எல்லாக் குணங்களோடும் கூடியவன்.

பயமுகாந்தரம் - பயத்தின் காரணம்.

சித்திராங்கன் - சித்திரவர்ணம் பொதிந்த அங்கமுடையவன்.

## 24.

மேககர்ச்சனை - மேகத்திலுண்டாகிற பேரிரைச்சல்.

சஞ்சலம் - மனக்குழப்பம், விசனமென்பது கருத்து.

பீடிக்கப்பட்டு - வருத்தப்படுத்தப்பட்டு.

விசித்திரப்பிராணி - ஆச்சரியமான ஜந்து.

சோதிஷர் - சோதிட சாஸ்திரங் கற்றவர்; சோதி = வானத்திலுள்ள கிரகநக்ஷத்திரங்கள், அவற்றாலாகுங் காரியத்தை யுணர்த்துஞ் சாஸ்திரம் சோதிஷம்; ஜ்யோதிஷ்ம் என்பதின் திரிபு.

## 25.

தாமசம் - காரியத்தைச் சீக்கிரஞ் செய்யாமற் காலம் போக்குதல்; தமஸ் சம்பந்தமானது தாமசம். தமஸ் - மாயையின் முக்குணத்திலொன்று.

மனோகரஸ்திரீ - அழகானபெண்; மநஸ் ஹர எனப்பிரிக்க; மனதை இழுக்கும்படியான என்பது பொருள்.

பிரபு - அடுத்தவர்களைக் காப்பாற்ற வல்லவன்.

## 26.

சிரமப்படுதல் - வருந்துதல்.

சங்கடம் - நெருக்கம்; துன்பமென்பது கருத்து.

நிவர்த்தி - தீர்த்தல்

ஜீவனுக்கு - ஆத்மாவுக்கு.

சகோதரன் - சஹ உதரன் எனப்பிரிக்க; ஒரு வயிற்றிற்பிறந்தவன் என்பது பொருள்.

## 27.

வாய்த் தவிடும்போய் அடுப்பு நெருப்புமிழந்தவள் = ஒருத்தி பசியாயிருக்கையில் கொஞ்சம் தவிடுவாயிற் போட்டுக்கொண்டு அடையாகிலும் சுட்டுத் தின்னலாமென்று அடுப்பைப் பற்றும்படி ஊத, தவிடு பறந்துபோயிற்று; அதுபட்டு நெருப்பும் அவிந்துபோயிற்று; அதுபோல் இங்கே கையில் அகப்பட்ட ஆமையும்போய் எடுக்கப் போனமானும் போய்விட்டதென்பது கருத்து.

மகாபுருஷன்—மஹா=மேன்மையான, புருஷன்.

---

7-1000-'901.

# பஞ்சதந்திரம்.

# PANCHATANTRAM.

## மூன்றாவது—III.

## சந்திவிக்கிரகம் அல்லது அடுத்துக்கெடுத்தல்.

## Sandhi Vighraham or Forming a Friendship with enemies to compass their ruin.

"முன்னே பகையாளிகளா யிருந்தவர்களுடைய விசுவாசத்தில் நம்பிக்கை வைக்கலாகாது. நம்பினு லெப்படிக் காகங் கோட்டான்களின் குகையைக் கொளுத்தி நாசம் பண்ணினதோ அப்படி நேரிடும்" என, அதைக்கேட்டிராஜகுமாரர்கள் "அதெப்படிச் சொல்லும்" எனச் சோமசன்மா சொல்லுகிறான்:—

"தென் தேசத்தில் மயிலைநகரத்தின் சமீபத்தி லொரு பெரிய ஆலமரத்தில் மேகவர்ணனென்னுங் காகராஜன் தன் கூட்டங்களோடு கூடவிருக்கையில், அங்கே உருமர்த்தனனென்னு மிராச கோட்டான் கூட்டத்தோடு மலைக் குகையிலிருந்துவந்தாலமரத்தை வளைத்துக்கொண் டிராத்திரியி லகப்பட்ட காகத்தையெல்லாங் கொன்றுவிட்டு நாடோறும் போய்க்கொண்டிருந்தது. அதனு லவ்விடத்தை விட்டுவிடும்படி காக்கைகட்கு நேரிட்டதனுல், மேகவர்ணன் தன்மந்திரிகளையழைத்து "நம்பகைவர் நாடோறு

---

"No faith cau be put in the friendship of thoↄe who once were enemiee ; for, if we put faith, then, as the crow burnt and destroyed the owls' den, so things will turn." So said Somasarma : whereupon the princes asked "Pray, say how it was" and thus spoke Somasarma :—

"In the neighbourhood of the city of Mailai in the south, on a large banian tree, there lived Meghavarna, the king of crows, with all his kindreds. And every day, during the night time, Urumardhana, the king-owl, used to issue out of his mountain cave with his followers, surround the banian tree, and kill all the crows it came in contact with. At the crows were thus obliged to quit their place, Meghavarna summoned his advisers and said :

மிங் கிராமாறு வந்து காக்கைகளைக்கொல்லுகிறார்கள்; நமக்
கோ விரவிற் கண் தெரிகிறதில்லை; மேலு மவர்க ளிருப்
பிடமு மறியோம்; அறிந்தா லங்கேபோ யவர்களைக் கொல்
லலாம்; பகைவரை யசட்டைபண்ணினா லது நோய்போற்
பெருகிப் பொல்லாங்கு விளைக்கும்; ஆதலா லிப்போழ்து
சந்திவிக்கிரகம், பேதம், கலகமென்னு மிவற்றுள் தக்க
திதுவென்று சொல்லுவீர்கள்" என, இதைக்கேட்டு மந்
திரிகள் "அரசன் கேட்பதற்கு முன்னேதானே பிரதானிக
ளிதஞ்சொல்லவேண்டும்; இல்லாவிடிற் கேட்டபிறகாயி
னும் விரைவாய்ச் சொல்லவேண்டும்; அப்படிச்செய்யாமற்
சும்மா விச்சகம் பேசுகிறவனை யரசனுக்குச் சத்துருவென்
று நினைக்கவேண்டும்" என் றிவ்வாறு சொல்லிப் பின்பு
மந்திரிகளைந்தும் "என்ன செய்வோம்?" என் றொன்றுக்
கொன் றாலோசிக்கத் தொடங்கின. அப்போ தவைகளி
லுத்தமசீவியென்ப தரசனை நோக்கி "மகாராஜாவே! வலி
யவர்களுடனே பகைபண்ணலாகாது; சமாதானமே தகுந்
தது; பகைவர்களை வணங்கிக் காலம்பார்த்து மோசம்பண்
ணுகிறவர்கள் சுகமடைகிறார்கள்; ஆற்றில் தண்ணீர் நிரம்
பிப் பெருகிவருகையில் வணங்கிய செடி நாசமடையா
மற் பின்பு முன்போல நிமிர்ந்திருக்கிறதே; நெருக்கமான

---

"Our eneinies daily come here during the night-time, and destroy the crows. We cannot see in the dark. Besides, we do not know their abode. If we know it, we may go there and kill them. Should we slight our enemies, it would grow like disease and bring on evil consequences. Therefore you shall advise which is the most suitable to be followed of the three political arts, viz., the policy of destroying enemies under the guise of Friendship, (Sandi Vighraha), the policy of causing differences (Bhedam), and the policy of exciting rebellion, (Kalakam.)"

On hearing these words, the five ministers discussed among themselves in the following manner:—"Ministers should give advice before the king asks. But, after having been asked, they should at least be ready with their advice. He who does not do so but flatters must be counted as an enemy to the king." Then they began to consult one another as to what should be done.

Afterwards one of them, Oothamajivi, addressed the king thus:—"O great king! Contest with superiors is bad. Peace alone is good. Those alone prosper who yield to their enemies till at the proper time they take advantage of them. The plant that bends to the rising flood in a river is not destroyed but after the

காலத்தில் துஷ்டர்களுடனே சமாதானம்பண்ணியுயிரைக் காப்பாற்றினாற் பின்பெல்லாச் செல்வமுஞ் சம்பாதிக்கலாம்; மேலுந் தனக்குப் பலபேர் பகைவர்களிருந்தாலவர்களி லொருவனோடு உறவுகொண் டெல்லாரையுங் கெடுக்கவேண்டும்; நிலமும் நட்பும் பொருளுமாகிய விவற்றினிருப்பைத் தன்னிடத்திலு மாற்றானிடத்திலு மிவ்வளவென் றாராய்ந்துகொண்டு கூடுமானாற் பின்பகைவனுடனெதிர்க்கவேண்டும்; இல்லாவிடிற் கூர்மவிருத்தியை யநுசரித்துத் தனக்குப் பலமுள்ள காலத்திற் கிருஷ்ணசர்ப்பத்தின் வியாபாரத்தை யநுசரிக்கவேண்டும்; வெலிப்புந் தோற்பு மொருவன் பக்கத்தில வாராதலான் மாற்றானுடைய வலியும் வலியின்மையும் பார்த்தேது செய்யத்தக்கதோ வது செய்யவேண்டும்; அசமயத்திற் கொக்குப்போலுறங்கியிருந்து சமயத்திலதன் குத்தைப்போ லிருக்கவென்று பெரியோருஞ் சொல்லியிருக்கிறார்களே" என, இப்படி யதன் வார்த்தையைக்கேட்டு ராசனிரண்டாம் பிரதானியைப்பார்த்து "உன் கருத்தென்ன சொல்" என, இரண்டா மந்திரி "அவன் சொன்னவற்றிற் சிறிது நன்மையில்லை; பெரிய சங்கட நேரிட்ட போது பகைவருடனே சந்திபண்ணலாகாது; நெருப்பினாற் காய்ச்சின நீரந்த நெருப்பை யவியாதா? நம்மைக் கோட்டான்கள் வருத்துகின்றனவென் றவர்களோடு சந்திபண்ணினாற் கொல்லுவார்கள்;

---

flood subsides it rears up its head as usual. If, in time of distress we save our lives by making peace with the wicked, then every kind of wealth may be acquired. Besides, if a person has several enemies, then he must contract friendship with one of them and thereby ruin all. One must first ascertain how much land, friendship and wealth, he and his enemy are possessed of, and then, if possible, attack him, or follow the manner of the tortoise, and when in power, act the part of the black cobra. Success or failure does not always attend one side. Hence after considering the strength and weakness of the enemy, what is fit to be done must be done 'When inopportune, slumber like the crane, and strike like it at the fit opportunity.' So say great men".

These words, the king heard, and turning to the second minister said "Say, what is your opinion." And then he spoke :—" A portion of what he has said is not good. In time of pressing danger, it will not do to make friendship with the enemy. Will not the water that has been heated by fire extinguish that fire? If we now form friendship with the owls because they trouble us, they will kill us. As fever is aggravated by

விஷமச்சுர மப்பியங்கனத்தால் வளர்கிறதுபோலும், நெய்யினால் நெருப்பு விர்த்தியாகிறதுபோலும், பொல்லாங்கு சம்பவிக்கும்; சத்துரு வலியவன் நாமெளியோ மென்பீரானால் அதற்குச் சிந்தையில்லை; யானை பெரிதா யிருந்தாலுமதைச் சிங்கக்குட்டி கொல்லாநிற்கும்; ஆதலான் மனோபலத்தோடு பகைவனைக் கொல்லவேண்டும்; அரசனுடைய கொடுந்தண்டத்தைப் பார்த்து வைரிக ளியல்பாய்ப் பயமடைகிறார்கள்; எங்கும் பெயர்பெற்றிருக்கிற பராக்கிரமசாலியாயு மெல்லாராலு மறியப்பட்ட வனாயு மிருக்கிறவனெவனோ அவனே பாக்கியவான்; இல்லாவிடில் தாயின் யௌவனத்தைக் கெடுத்துப் பயனென்ன? பராக்கிரமத்தாலுயிர்த்திருக்கிறவனே யுயிருள்ளவன்; மற்றவர்கள் பிணத்துக் கொப்பானவர்கள்" என்றிப்படி யது சொன்னவற்றையெல்லா மரசன் கேட்டு, மூன்றாம் பிரதானியைப் பார்த்து "உன் கருத்தைச் சொல்வாய்" என, அது "அரசனே! கேள், பகைவன் தன்னிலும் வலியனாயிருந்தா லவனோடு பொருத்தலாவது பொருதலாவ தொன்றுஞ் செய்யாமல் தன்னிடத்தை விட்டு வேறிடத்திற் போகவேண்டும்; இதுவே நல்லது; இவ்வேளை சண்டைசெய்ய லாகாதென்று வைரியின் பலத்தைப்பார்த் தெவன் தேசத்தைத் துறந்துபோகிறானோ அவன் பாண்டவர்களைப்போற் சுகமடைகிறான்; இதைவிட்டெவன் செருக்குடனே யுத்தஞ்செய்கிறானோ

---

anointing the head, as fire is kindled by oil, so evil will happen. If you say that the enemy is stronger, and that we are weaker, that signifies nothing. Huge as the elephant is, the young lion kills it. Hence we must destroy the enemy by the force of our mental powers. At the sight of the severe rod of the king, enemies naturally take fright. He is a fortunate man who is renowned everywhere as a powerful person and who is known to all. Else what is the good of impairing the youthful vigour of the mother (by being born.) He alone is a living being who lives by his valour. All others resemble the dead."

After hearing this speech, the king turned to the third minister and asked "What is your opinion." The third minister accordingly began :—"O king! hear; if the foe be stronger, then without either contending or forming friendship with him, it is better to leave one's place, and go away to another. This alone is good. Whoever, seeing that the present time is inopportune to fight, because of the superior strength of his opponent, quits his place, prospers in the same way as the Pandoos. Whoever, on the other hand

வவன் குல முதலறக் கெடுகிருன்” என, இதைக்கேட்ட ரசன் நாலாமந்திரியைக் கேட்க, நாலாமந்திரி “தன்னிடம் விட்டுப் பெயர்தல் தகுதியாகக் காணவில்லை; முதலை தன்னிடத்திலிருந்தால் மலையொத்த யானையையு மிழுத்துக் கொண்டு போகிறது; அதுவே தன்னிடம்விட்டுப் பெயர்ந்தா லதை நாய்களு மிழுத்துக்கொண்டுபோகின்றன; ஆகையால் தன்னிடத்திலிருந்து நட்புள்ளவர்களை யுதவிக்காக வழைப்பித்துக் கொண்டு பகைவர்களைக் கெடுக்கவேண்டும்; எவன் சத்துரு வருகிருனென்று பயந்து தன்னிடம் விட்டுப் போகிருனே அவன் மறுபடி யவ்விடத்திற்கு வருகிறதில்லை; பற்பிடுங்கின பாம்பும் மதமில்லாத யானையு மிடம்விட்டுப் பெயர்ந்த வரசு மெல்லாராலு மவமான மடைகின்றன; மேலுந் தன்னிடத்திலிருந்தா லொருவனே நூறுபெயருடன் யுத்தம்பண்ணுகிருன்; ஆதலால் துர்க்கத்தையு மதிலையு மேற்படுத்திக்கொண் டவற்றின் சார்பாற் பகைவருடனே யுத்தம் பண்ணவேண்டும்; அதனுல் வெற்றிபெற்ருல் லட்சுமியைப் பெறலாம்; செத்தாற் சொர்க்கம் பெறலாம்; ஆகையா லிவ்விரண்டையுந் துறக்கலாகாது; நிலத்திற் சிக்கெனவூன்றிய வேரையுடைய மரங் காற்றினுல் விழாது; அந்த மரமே தன்னிடத்தி லிராவிட்டால் வாயுவதைத் தள்ளுகிறது; ஆகையால் மேலொன்று

---

haughtily engages in fight, ruins himself and his whole family to the very root" The king then addressed himself to the fourth minister, who said:—"It does not seem proper to change place. If the crocodile continues in its own place, it can draw in even the mountain-like elephant. But once it leaves its element, even dogs drag it away; consequently a person must hold to his own place, and drawing his friends to his help must vanquish his foes. He who, afraid of the enemy's approach, deserts his place and flies to another, never comes back to it. The serpent that has been deprived of its venomous teeth, the elephant that is not in rut, and the king that has left his place are disgraced by all. Further, a single person can, if he sticks to his own place, contend with a hundred men. Therefore hill-forts and ramparts must be secured and under their cover we must give battle to the enemy. If thereby, success be achieved, fortune may be made; if death ensue, then heaven may be gained. So neither of these can be given up. The tree that is rooted fast in the ground, will not fall by the wind. This very tree is blown down by the wind if it be out of its place. Therefore whatever is fit to be done must

செய்யத்தக்கதோ வதை யிங்கேயிருந்து கொண்டே செய்ய வேண்டும்” என, இப்படி யதன் கருத்தை யறிந்துகொண் டைந்தாமந்திரியை “உன்னப்பிராய மெப்படி” என, அது “சுவாமி! என்னுலோசனையு மிப்படியே யிருக்கிறது; சார் பைவிட்டாற் சமர்த்தர்களும் பராக்கிரமக்குறைச்ச லடை கிறார்கள்; ஆதலால் யாரையானாலு முதவிக்குச் சேகரித்துக் கொள்ளவேண்டும்; அதுவு மிருப்பிடத்திலிருந்தே சம்பா திக்க வேண்டும்; உறைவிடம் விட்டுப் பிரிந்தவனுக்கு யாரும் வாய்ப்பேச்சினாலுஞ் சகாயம் பண்ணார்கள்; எப் போ தக்கினிக்குப் புற் சருகு முதலியவற்றின் சேர்க்கை யாற் காட்டைக் கொளுத்த வலியுண்டாகிறதோ வப்போது வாயு மித்திரத்தனமா யுதவிபண்ணுகிறது; அந்நெருப்பே விளக்கு வடிவா யந்தரமா நிற்கும்போது காற்றே யதை யவிக்கிறது; மேலும் வலியவர்களுடைய சார்பிருந்தா லெல்லோர்க்கும் பெருமை யுண்டாகிறது; தாமரையிலை யைச் சார்ந்த நீர்த்துளி முத்தினொளியை யடைகிறது; சார்பில்லாமல் யாதொரு காரியமு மாகிறதில்லை; ஆகை யால் மற்றொருவனை யனுசரிக்கவேண்டும்; இதுவே யென் கருத்து” என, பிறகு மேகவர்ணராஜன் பிதாவின் மந்திரி யாகிய சிரஞ்சீவியைப்பார்த்துக் கும்பிட்டு “உம்முடைய சந்நிதியி லெல்லோரையுங் கேட்டவர்கள் சொன்ன வுத்த ரங்களையு மும்மைக் கேட்பித்தேன்; இவற்றி லெது தக்

---

be done by remaining in the same place.”

Having thus taken the views of the fourth minister, the king asked the fifth adviser “what is your view,” and he replied:—

“Liege! my view is to the same effect. Even heroes, if they quit their defences, will suffer their heroism to be stained. Some person must therefore be taken for help, and that too by remaining in the same place. No body will assist, even by word of mouth, that person who has deserted his residence. Whenever with the help of grass, dry-leaves, and other stuffs fire is able to burn a forest, then the wind cordially assists. If the same fire burns unassisted in the form of a lamp, then the same wind puts it out. By the help of the powerful all gain distinction. The drops of water on the lotus-leaf derives the brightness of the pearl. Without assistance nothing can be accomplished. Hence a second person must be sought for aid. This is my opinion.”

Then the king, Mehavarna, addressed himself to his father's minister, Chiranjeevi, and bowing to him said:—“In thy presence have I asked all, and their replies thou hast heard. Thou shalt

கதோ வதை நீர் சொல்லும்" என, இப்படி ராஜா சொன்ன தைக் கேட்டுக் கிழமந்திரி "எல்லோரு நூற்சார்பாலேயே சொன்னமையால் யோக்கியமாகவே யிருக்கின்றன ; சத்துரு பலவானாயிருந்தாலு மவனுக்கு விசுவாசங்காண்பித் தவனைக் கெடுக்கவேண்டும்; இல்லாவிட்டால் துர்க்கமுதலியவற்றிலிருந்து தனக்குஞ் சத்துருவுக்கு மிருக்கிற பலாபலங்களை யறிந் தேதுசெய்வதோ வது செய்யவேண்டும்; இது விகிதமாம் ; மாதர்கள், முகநட்புள்ளவர்கள், பகைவர்கள், சூதாடுகிறவர்க ளிவர்களிடங்களிலே மெய் முன்னுக்கு வராது ; தெய்வங் குரு விவர்களிடத்தின் மெய்யாகவே நடக்கவேண்டும்" என, இப்படிப் பெரிய மந்திரியின் வசனங்களைக் கேட்டு மேகவர்ணன் "பிறனுடைய புனைசங்களை யெப்படி யறியலாம்?" என, சிரஞ்சீவி "மறைந்த பொருள்களைப் பிராமணர்கள் வேதத்தினாலேயும், பசு வாசனையினாலேயும், அரசன் வேவுகாரரை யனுப்பியும், மற்றவர்கள் தங்கள் கண்களாலு மிப்படிப் பலவிதமா யறிகிறார்கள்" எனக் கேட்டு, மேகவர்ணன் "நல்லதிந்தப் பிரதானிகளேன் பலபல விதமாய்ச் சொன்னார்கள்?" என, சிரஞ்சீவி, "நாரதர் தருமராஜனுக்குச் சொன்னதைக் கேள்; அரசன் தனக் குபயோகமானவற்றைக் குறித் தொரு நாழிகை விசாரியாவிட்டாலு முடனே கெடுதி வரும்; உடையவன் கண்ணோடாப் பயி ரழியாதா? ஆதலால் மந்திரி முதலா

---

tell me which of them is sound." The aged minister, hearing these words of the king, replied :—

" Every thing that has been said is right and proper in as-much as all have spoken in canformity with science. Strong though the enemy be, he must be ruined by showing him friend-ship. Otherwise, by remaining in forts and other defences one must compare his own strength or weakness with that of the enemy, then do whatever is fit to be done. This is proper Truth does not succeed with women, flatterers, enemies and gamblers We must act truthfully in respect to God and priest." Hearing these words of the great minister, Meghavarna asked ;—"How can the secret weakness of another be known?" Chiranjeevi returned . " Hidden things are known in several ways. Brahmins learn them by the light of the Vedas. cows by scent, the king by sending spies, and others with their eyes." Upon this Meghavarna said : " Very well, why did these ministers speak in so many different ways ?" Cheranjeevi rejoined : " Attend to what Naratha said to Dharmaraja. If the king, even for a nashigai [24 minutes] fail to enquire about things that concern him then evil will soon happen. Will not the crop that is not taken care of by the owner

ணவர்களுடைய சமாசாரங்களைக் கணந்தோறுந் தெரிந்து கொண் டெப்போதுந் தா னெச்சரிக்கையா யிருக்கவேண்டும்" எனக் கேட்டு மேகவர்ணன் "காகங்களுக்குங் கோட்டான்களுக்கும் வைர மெப்படிவந்தது சொல்லும்" எனக் காலங்கண்ட கிழமந்திரி சொல்லத்தொடங்கிற்று:—

"ஒருநாண் மயின் முதலாகிய பறவைகளெல்லாங் கூடி யிருந்து நமக்கெல்லாங் கருட னரசனாயிருந்து நம்மைக் கொல்லுகிற வேடர்களினின்று நம்மைக் காப்பாற்றாம லிதாகிதமுந் தெரியாம லிருக்கிறான்; இத்தன்மையுடைய விறைவ னிருந்து பயனென்னை? நமக் கரசனே வேண்டா மென்போமானால் மீகாம னில்லாமற் கப்பல் கரைகாணா ததுபோ லரச னில்லாவிட்டால் நிலைகெட்டுப்போவோம்; ஆகையால் எல்லாப் பறவைகட்கு மரசனாகக் கோட்டானை நியமிக்க வேண்டுமென நிச்சயித் திராசபட்டாபிஷேகத் துக்கு வேண்டிய பதார்த்தங்களைச் சேகரித்துப் பின்பு பலவாத்தியங்களை முழக்கிக் கோட்டானைச் சிங்காதனத் தின்மே லுட்காருவிக்கவேண்டுமென் றிருக்கையி லொரு காகம் வந்தவற்றைப்பார்த்து "இதென்ன காரியமிதென்ன காரியம்!" என, வப்போ தெல்லாப்பறவைகளும், பறவை களில் வஞ்சகமுள்ளது காகமும், மனிதரில் நாவிதனும், விலங்குகளில் நரியும், மாதர்களிற் பணிப்பெண்ணுஞ் சது ரர்களா யிருக்கிறார்கள்; ஆதலா லிச்செய்தியை யிதற்குச்

---

be destroyed? Therefore the views of ministers and others must every moment be taken, and the king must always be on the alert." Then Meghavarna asked "say, what caused the spite between the crows and the owls." Thereupon the aged minister that had seen a long course of years continued:—

"One day the peacock and other birds assembled and debated thus:—"Though Garuda is sovereign over all of us, yet he does not protect us from the fell fowlers that kill us, nor does he know right and wrong. What is the good of having a king of this character? If we say we want no king, then as a ship without a pilot fails to go in sight of land so if there be no king we shall be thrown into disorder. Therefore the owl must be made the king of all birds." With this resolution they brougt together all things necessary for the coronation ceremonial, but as they were about to seat the owl on the throne with the sound of various musical instruments, a Crow appeared, and seeing all, exclaimed: "What, what is this!" Then thought all the birds, "As among birds the most artful is the crow, among mankind the barber, among quadrupeds the fox, and among women the

சொல்லி யித னுடன்பாடும் பெறவேண்டுமென்று தீர்மா னித் ததைப்பார்த்து " எங்களுக் கரசனில்லாமையா லிக் கூகையை யரசனாக்கிக் கொள்ளுகிறோம், இதற்கு நீயு முடன்படு" என, இதைக்கேட்டக்காகங் குலுக்கென்று நகைத்துச் சிரக்கம்பனம்பண்ணி " ஓ ஓ ! இது முழுதுங் கெட்ட காரியம் ; அழகும் வல்லமையு முண்டாகிய மயில் முதலாகிய வநேகம் பறவைக ளிருக்கையி லிந்தப் பகற்குருடாகிய குரூபி யரசுக்குத் தக்கவனா? குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளலாமா? தோலோதோ லிதற்கு நானுடன்படேன் ; கருடராஜனிருக்கையில் மிகவும் பயங்கர சுபாவமும் வலியின்மையுமுள்ள விக்கூகையை யரசனாக்கி யுங்கட்குப் பலனென்னை ? ஒருவன் சுவாமியாயிருக்க வேறொருவன் குணசாலியா யகப்பட்டாலு மவ னுபயோகியாகான் ; பராக்கிரமமுங் குணமு முள்ள வரச னுலகத்திலொருவனே போதும் ; பல பெய ரரசர்களானால் மனிதர்கள் துன்ப மடைகிறார்கள் ; கருடன் பெயரினாலேயே யெல்லா வரங்களும் பெற்று மனிதர்கள் நம்மிடத்தில் மதிப்புண்டாயிருக்கிறார்கள் ; வலியவர்களுடைய பெயரினாலே யெளியவர்களுக்குக் காரியமாகின்றது, முன்னொரு முயல் சந்திர விம்பத்தைக் காட்டிச் சுகமடைந்ததை யறியீர்களா ? " என, அதைக்கேட்ட பறவைகள் " முய

---

servant maid, we must acquaint the crow with this affair, and obtain its assent thereto" With this resolusion they turned to the crow and said : "As we are without a king, we take this owl for our king You must also give your consent to this." On hearing this, the crow laughed heartily, shook its head and said ' Oh, no ! this is all bad ; while there are strong and beautiful birds like the peacock and others, does this day-blind ugly owl deserve to be king? In the attempt to wash ourselves, can we soil ourselves with mire ? no, no ; I will not at all assent to this ; while Garuda continues to be sovereign what good do you derive by crowning this naturally frightful and impotent owl ? While there is already a master, though a well qualified person may be had, he will be of no use. One only Sovereign, powerful and good-tempered, and well qualified will do in the world. Where many rule at the same time, people suffer. With the mere name of Garuda men have obtained all the requisite favours, and they therefore esteem us. By the name of powerful men, the weak attain their ends. Are you not aware of a hare which in former times gained success by pointing to the reflected image of the moon ?" The birds that heard this asked, "Brother, tell us

னெப்படிச் சுகமடைந்த தன்மை சொல்லவேண்டும்" என
க்காகஞ் சொல்லலுற்றது :—

"ஒருகாட்டிற் சதுரதந்தனென்னு ராசயானை பல
யானைகளோடு கூடிக்கொண் டிருக்கும்போ தங்கே மழை
பெய்யாமையா லேரி குளங் குட்டை கசங்க ளெல்லாம்
வற்றிப்போக, அப்போ தியானைக ளெல்லாந் தாகித்துச்
சதுரதந்தனைப் பார்த்துச் "சுவாமி ! நாங்களெல்லாந் தாகத்
தின்பொருட்டுச் செத்தாற்போ லானோம்" சிலர் தண்
ணீர்க்காகச் செத்தார்களானபடியால் மிகவுந் தண்ணீ
ருள்ள விடந்தேடிப் போயிருப்போமானா லெல்லாஞ் சுக
மடைவோம்" என, இவற்றின் பேச்சைக் கேட்டுத் தன்
மனதில் யோசித்து, இதற் கைந்துநாளைப் பயணதூரத்தி
லொரு பெரிய மடுப் பாதாளகங்கையினால் நிறைந்திருக்
கிறது, அங்கே போனா லெல்லோர்க்கு மிகவுந் தண்ணீர்
கிடைக்குமென் றிப்படி யுறுதிசெய்துகொண் டப்படியே
யங்கே போய்த் தெளிந்த நீரைக் கண் டந்திவரைக்குஞ்
சலக்கிரீடை செய்துகொண்டிருந்து கரையில் வந்திருந்
தன. அப்போ தங்கே வாசம் பண்ணிக்கொண்டிருந்த
வெகு முயல்களிற் சிலயானைகளின் காலின்கீ ழகப்பட்
டிறந்தன. சிலச்சில முயல்களுக்குக் கால் கைக ளொடிந்
தன. சிலவற்றிற் குடல்கள் நொறுங்கின. சிலசிலவற்றிற்

---

how the hare gained success?" Thereupon the crow began to speak :—

"In a certain forest there lived Sathurathantha, the king of elephants together with many other elephants. There was no rainfall there and the rivers, lakes, tanks, ponds, and springs all became dry. Thereupon all the elephants feeling thirsty, addressed Sathurathanta thus :—" Sovereign ! we have all become nearly corpses by thirst, some having actually died for want of water. Therefore if we seek and find some place where there is plenty of water we shall all be happy." Hearing the words of these elephants, the king-elephant thought to itself and concluded : " Within five days' journey from this there is a large stream filled with water from the Ganges of the abyss. If we go to that place we shall all have plenty of water." They accordingly went there, and seeing the transparent water, played in it till evening and then returned to the bank. Then, of the many hares that lived there some were trampled to death by the elephants. Some were mutilated in their limbs. The bodies of some were crushed. The bowels of some were thrown into

குக் குடல்கள் சரிந்தன. சிற்சில விரத்தத்தால் நிறைந்
தன. இப்படிப் பொல்லாங்கு நேரிட்டவுடனே சில
முயல்க ளொன்றாய்க்கூடி இன்றைக் கியானைக் கூட்டம்
வந்து நம்மை யழித்தது;இப்படியே தினமுமிருக்கும்;இங்
கே வேறே தண்ணீரில்லை ; இதனால் நமக்கு மீளாச்சங்கட
நேரிட்டது ; யானை தொட்டாலும், பாம்பு மோந்தாலும்,
அரசன்நகைத்தாலும், துர்ச்சனன் மரியாதைபண்ணினாலு
முயிர்ச்சேதம் வரும்;ஆதலா லிதற் கேதாவ துபாயம் யோ
சிக்கவேண்டும்'' என, அப்போது சிலமுயல்கள்'' உயிரைக்
காப்பாற்றும் பொருட்டுப் பூமியை விட்டுவிடலாமென்
றிருக்கிறதினா லிவ்விடத்தை விட்டுவிட வேண்டும்'' என,
இதைக்கேட்டு வேறு சிலமுயல்கள் " நம்முடைய பெரி
யோர்கள் வாழ்ந்த விடத்தைவிட்டு வேறிடத்திற் போகா
மல் யானைக ளஞ்சத்தக்க தந்திரமெடுக்கவேண்டும்;நஞ்சில்
லாப்பாம்பும் படமெடுத்தா லதற்கு நஞ்சில்லாதிருந்தும்
பயங்கரமாயிருக்கிற படத்தின் வடிவைப் பார்த்து மனிதர்
கள் பயப்படுகிறார்கள்'' என அதைக்கேட் டொருமுயல்
"யானைகள் பயப்படும்படி யோருபாயஞ்சொல்லுகிறேன்;
விசயதந்தனென்னு நம்முடைய சுவாமி சந்திரமண்டலத்தி
விருக்கிறா னவன் தூதனுப்பினானென் றொருநிமித்தம்
வைத் தொரு பொய்த்தூதனை யவர்களிடத்துக் கனுப்பி

---

disorder. And some others were steeped in blood. After the occurrence of this misfortune, some hares joined together and deliberated thus :—" This day the crowd of elephants have come and destroyed us. This will be the case every day. There is no other spring here. Consequently this irretrievable misfortune has befallen us. If the elephant touches, if the serpent smells, if the king laughs, or if the wicked respects, loss of life will follow. We must therefore try and discover some means of escape." Then said some hares :—" It is held that, for the sake of saving life, we may give up land. We must therefore quit this place." Upon this some other hares replied : " Without leaving the place where our ancestors lived and flourished, we must fall upon some expedient which may frighten the elephants away. If even the venomless serpent lift up its head and wave it in the form of the hood of a Cobra, then though it is not venomous yet the people are struck with fear." Hearing this, a hare retorted :—

" I will suggest a means of frightening the elephants away. Our master Vijayathantha is in the moon's orbit. If we send to them a messenger under the pretext that he has sent him,

னால் நங்காரியமாகும்'' என, இதைக்கேட்டவுடனேயெல்
லா மப்படியே நிச்சயித்து நெட்டைக்காதனைப்பார்த்து"நீ
சாதுரியவான், எதிரிகளைச் சமாதானம் பண்ணுகிறவன்,
ஆதலால் தூதகாரியத்தில் நிபுணனாயிருக்கிறாய்; மௌட்
டிய மில்லாமையும் சோம்பாமையும் பொய்யாமையு
மூகித்தறிதலும் தூதலக்ஷணமென்று சொன்னவற்றிக்கு
நீயே வாசஸ்தானமென்று நினைக்கிறோம், ஆகையால் நீ
போனால் நம்முடைய காரியங்கைகூடும்; மூடத்தூதனை
யனுப்பினாற் காரியங் கெட்டுப்போம்'' என்று சொல்லி
யதை யனுப்ப, அது போ யானைகள் வரும் வழியி லோ
ருயர்ந்த மேட்டிலுட்கார்ந்திருந்து யூதபதியைப் பார்த்துச்
சொல்லுகின்றது: " அடாதுஷ்டயானையே! வெட்கத்தை
விட் டிந்தமடுவில் வந்து பலவகைப்பட்ட விளையாட்டு
விளையாடுகிறா யாதலால் நானெல்லாரையு மடித்தெறிந்து
விடுவேன்'' என இதைக்கேட் டியானை " உன்பேச்சைக்
கேட்டு நான் மிகவு மாச்சரியப்படுகிறேன், நீ யார் ?'' என,
முயல் " விஜயதந்த ராசனுடைய தூதன், அவன் கட்டளை
யை யுனக்குச் சொன்னேன், அவன் சந்திரமண்டலத்தி
லிருக்கிறபடியாற் சந்திர னுன்னிடத்திற் கனுப்பினான்''
என, இதைக்கேட் டிவன் வலியவனுடைய தூதனென்
றெண்ணி யதைப்பார்த்துச் "சந்திரனுடைய கட்டளை

---

then our object will be gained." No sooner did they all hear this than they agreed to it and turning to Nettaikathan [the long eared] said "you are a clever fellow; you reconcile enemies, consequently you are expert in the duties of a messenger. We think that, of wisdom, diligence, truthfulness, and tact which are held to be the characteristic qualities of a messenger, you are the seat. Therefore, if you go, our object will be accomplished. If a foolish messenger be sent, then our object will be frustrated. They accordingly sent him up He proceeded and sat upon a high ridge by the side of which the elephants used to pass. While there, he saw the king of the elephants and said " Thou wicked elephant! dead to all feeling of shame, thou comest to this stream, and indulgest in various sports. Therefore I will blow you all away." Thereupon the elephant replied :—" I am much surprised at your words. Who are you ?" The hare replied, I am a messenger from king Vijayathanta, I have conveyed to thee his royal command. He is in the moon's orbit and the moon has sent me down to thee." Hearing this the elephent thought this was the envoy of a powerful person, and turning to it asked: "What is the moon's command ?" The hare replied:

யென்ன?" என, அது "நீ யிங்கே வந்து நாணமில்லாமற்
கிரீடைசெய்து வெகுமுயல்களைக் கொன்றாய், ஆகிலு நா
னொருதரம் பொறுத்தேன், இப்போ துனக் குயிர்மே
லாசையிருந்தால் மீண்டிங்கே வரவேண்டாம் என்றிப்
படிச் சந்திரனுடைய கட்டளையா யிருக்கிறதை யுனக்கு
நான் சொன்னேன், இப்போ இதற்குப் பிரதியுத்தரவு
சொன்னாற் சுவாமி திருவடிகட் கறிவிப்பேன்" என,
யானை "அவனிடத்திற் றென்னை யழைத்துக் கொண்டு
போ, நானுன் னெசமானனுக்கு நமஸ்காரம்பண்ணி வே
றொரு குளத்திற்குப் போவேன்" என, இதைக்கேட்டு
முயல் "நீ தனியா யென்னோடு கூட வா, உனக்குச் சுவாமி
யைக் காண்பிக்கிறேன்" என, இரண்டும் போகையி
லோரேரியி னருகே போய் முயல் யானையைப் பார்த்
துச் "சந்திர னிந்தத் தண்ணீர்க்குள்ளே வந்திருக்கிறான்,
அவனை நமஸ்கரித்துவிட்டுக் கடுகெனப்போ, இல்லாவிட்
டா லவனுடைய சமாதிக்குப் பங்கம் வந்தா லவற்கு வெகு
கோபம் வரும்" என, அப்போ தியானை பயந்து சந்திரபிம்
பத்துக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போயிற்று. அது
முதற்கொண்டு முயல்க ளங்கே சுகமுற்றிருந்தன. அப்ப
டிப் பெரியோரை யடுத்திருந்தால் மலைபோலவந்த வினை
சூரியன்முன் பனிபோல நீங்கும். கொல்லையிற் குற்றியை
யடைந்த புல்லுழவ ருழுபடைக்குக் கெடுமோ? துஷ்டர்க

---

"Thou hast come here and shamolessly sported in the water and killed many hares. I have patiently borne it for the first time. Now if thou has regard for thy life, then do not come here again. This is the moon's command which I have communicated to thee. If now thou givest thy answer to this, I will make it known to the royal feet." Then the elephant replied :—"Take me to him, I will make my obeisance to your sovereign and go to another tank." Thereupon the hare returned : "Go with me alone, I will show thee my sovereign." So both proceeded and on their way they came to a lake when the hare turned to the elephant and spoke thus :—

"The moon has come into this water. Worship him, and walk off straight. Otherwise, if any damage happen to his contemplative worship, then he will be sorely angry." The elephant took fright and bowing to the moon's reflection went away. Ever since that time the hares continued to live in peace. Thus if we depend upon great men, then even mountain-like evils will disappear as the dew before the sun. Will the grass that has taken to the stock of a tree in the field be destroyed by the

ளுடைய கூட்டுறவு கணப்போதிருந்தாலுங் கெடுதிவரும்.
முன்னொரு முயலு மாந்தையுஞ் சண்டையிட்டுக் கூர்ம்
பல்ல னருகே போனவுடனே யிரண்டையு மது கொன்ற
தறியீரோ ?" எனக் கேட்டுப் பறவைகள் காகத்தைப்
பார்த்து "எப்படி" எனக் காகஞ் சொல்லத் தொடங்
கிற்று :—

"முற்காலத்தில் நான் குடியிருந்த வொரு முதுமரப்
பொந்திலிருந்த கபிஞ்சல னென்னுங் குருவியு நானுமாலைக்
காலத்திற் பலபல பேச்சுகள் பேசிக்கொண்டு சுகித்திருக்
கையி லொருநா ளவன் வேறொரு பக்ஷியோடு கூடப்
போய் மீண்டு வாராமையால் நான், ஐயோ ! அவன் வலையிற்
பட்டானோ ! யாராவது கொன்றார்களோ ! தெரிய வில்லை,
எப்போதும் வேறோரிடத்திற் றங்குகிறவ னல்லவே !
என் றிப்படி விசனப்பட்டு வழிபார்த்துக்கொண் டிருக்
கும்போது, மூன்றுநா ளவன் பொந்தி லொருமுயல்
வந்து, நான் பலபல விதமாய்த் தடுத்துச் சொல்லியுங் கே
ளாமன் முரட்டுத் தனமாய்க் குடிபுகுந்தது. எங்கேயோ
சிலநாள் கபிஞ்சலன் மனதின்படியே நெற்களைத் தின்று
கொண்டிருந்து, பிறகு தன்னிடத்துக்குவந்துபார்க்கையில்
தன் வீட்டில் முயலிருக்கக்கண் டதைப்பார்த்து " அடா

---

plough-share? From the friendship of the wicked, even though for a moment, evil will spring. Do you not know how once before a hare and an owl disputed with each other, and going to Koormpallan [sharp teethed], were both destroyed by him?' This the birds heard and asked the crow "how was it." Then the crow began :—

"Some time ago there lived with me in a hole in an old tree, another bird named Kapinchala. In the evenings, we used to pass the time lightly and merrily by conversing with each other on various topics. One day Kapinchala went with another bird, and not returning, I sorrowfully thought to myself: "Alas! Is he caught in the net? Did any body kill him? Nothing whatever is known about him. He never stays away in any other place." Thus meditating, I was looking out for him on the road, till on the third day, a hare paying no regard to all my remonstrances, violently forced himself into his hollow and fixed it for his residence. Kapinchala had been somewhere eating grain and other things according to its own will and pleasure for a few days and then returned to this house, which he found was occupied by the hare. He then addressed the hare: "Thou hare! it

சசமே! உனக் கென்வீட்டி லிருக்கை நன்றன்று, பொட்டெனப் புறப்பட்டுப்போ” என, இதைக் கேட்டு முயல் “அடா பேதாய்! இது உன்வீடன் றென்வீடே, வீணைப் பொய்சொல்லிப் பயனில்லாமல் நட்பையே யிழக்கிறாய்? வாபி கிணறு குளம் கோயில் சத்திர மிவற்றின் சொத்துவ மவற்றை விட்டு நீங்கினபிற கந்நீங்கினவனிடத்திலிராது. மற்று மொருவன் வீட்டைப் பிறனொருவன் பத்தாண்டளவும் யாவருமறிய வநுபவித்தா லவ்வீடவனதே, இந்த விஷயத்திற் சாக்ஷியு மெழுத்தும் பிரமாணமாகா, இந்நியாய மனிதர்களிடத்தி லிருக்கிறது, பறவைகளிலெது வலிதோ வது கைக்கொள்ளுமவன் றிப்படித் தர்மநியாய மிருக்கிறதினால் வீடெனதே” என, ஆந்தை “நீ தர்ம சாஸ்திரத்தைக் குறித்துப் பேசுகின்றனையால் நீயு நானுஞ் சாஸ்திரிகளிடத்திற் போயிதைக்குறித்துக்கேட்டவர்கள் யாரை யிருக்கலா மென்கிறார்களோ வவர்களிருக்க வுடம்படுவோம்” என்று சொல்லி நிச்சயித் திருவரும் விவாதம் பண்ணிக்கொண்டு போகையில், இவ்வழக்கெப்படி யாகிறதோ பார்க்கலாமென்று நானுமவர்களைத் தொடர்ந்துபோனேன். அங்கே கூர்ம்பல்ல னென்னும் பூனை யிவர்கள் பேச்சைக்கேட் டிவர்கள் வழக்குத் தீர்ப்புக்குப் போகிறார்கள், இவர்களை மோசம்பண்ண வேண்டுமென்று நிச்சயித்தந்த வழியி லாற்றங்கரையிற் கண்ணை

---

is not proper for thee thus to usurp my house. Start off directly." The hare heard this and answered :—"O simpleton! this is not your house, it is my own. Why do you unnecessarily utter falsehood and lose my friendship? Tanks, wells, ponds, temples, and choultries,—these when once a person leaves, the property in them will no more rest with him. Moreover when a person publicly enjoys another's house for a period of ten years, then that house becomes his own: neither witnesses nor documents will be evidence in this case This law prevails among mankind. In the case of birds, it is law and equity that whichever is stronger taken possession. Therefore this house is my own" To which the owl said ;—" As you speak of the Dharmasastras, let us both go to proficients in that branch and agree that he shall remain whom they declare to be entitled so to remain." Thus agreed both went on disputing, when, to see how this dispute would terminate, I followed them Then the cat named Koormpallan heard their words and made up his mind thus: "These go to have their dispute settled. They must be deceived" Accordingly he sat upon a river's bank on their way, with his eyes shut

மூடிக்கொண்டு சூரியனைப் பார்க்கிறதுபோலபிநயித்துக் கொண்டு, "ஆ ஆ! இந்த நிசாரமான சமுசாரத்திலுண்டாகிற வின்பங் கணத்தி லழிந்து கனப்போற் பொய்யாகிறதினால் தருமத்தைவிட வேறே கதியில்லை; அறத்தைவிட்டவன் நாள்களைக் கழிக்கிறானே யவன் மரப்பாவையொத்தவன்; அவனை மூச்சுவிட்டுக்கொண் டிருக்கையிற்றானே பிணமென் றெண்ணவேண்டும்; எப்படித் தயிரிற் சாரம் நெய்யோ, எள்ளில் விசேஷமெண்ணெயோ வப்படிப் பிழைத்திருக்கிறதிற் சாரந் தருமமாம்; இதைத் துறந்து மிகவுஞ் சோற்றைத் தின்றுகொண்டு காலங்கழிக்கிறவர்க ளிலச்சுமையா யிருக்கிறார்களென்று துக்கப்படுகிறேன். ஓ சனங்களே! தருமம் பலபல விடையூறுகளோடு கூடிக்கொண் டிருக்கிறதானதினால் சுருக்கமாய்ச் சிறிது தருமஞ் சொல்லுகிறேன்; பிறர்க் குதவி செய்வதற்கொத்த புண்ணியமும், பிறரை வருத்துவதையொத்த பாவமுமில்லை; மேலுந் தனக்குத் துன்பந் தருவது பிறனுக்குந் தருமென் றிப்படித் தர்மரகசியங்களைக் கேட்டுள்ளத்தில் வைக்கவேண்டும்" என, இப்படி யதன் வாக்கியத்தைக் கேட்டு முயல், "கபிஞ்சலா! தருமஞ்சொல்லுகிறவ னாற்றங்கரையிலுட்கார்ந்திருக்கிறானவனைக்கேட் போம்" என, கபிஞ்சலன் இவன் நமக்கியல்பான பகையாளியாதலால் தூரத்திலிருந்தே சொல்லவேண்டும் என்று நிர்ணயித் தவனைப்

---

and pretending to look at the sun, preached: "Ah! Ah! the happiness that is derived from this insipid family vanishes in a moment and proves unreal like a dream. There is therefore nothing to lean upon but virtue. He who strays from virtue and passes his life resembles a wooden statue. He must even while he breathes, be counted with the dead. As ghee is the essence of curd, as oil is the essence of sesamum, so the essence of life is virtue. Those who give this up, and glut their stomachs and pass their lives, are, I am sorry, a burden upon the earth. Oh people! as virtue is beset with many obstacles, I will briefly preach to you certain set moral lessons. There is no virtue like that of helping others; there is no vice like that of tormenting them. We must learn and have stored in the mind these mysteries in morals; such as, that whatever gives pain to us gives pain equally to others." These sermons of the cat the hare heard and said "Kapinchala! on the river's bank sits the expounder of moral principles. Let us ask him." Kapinchala resolved: "As this is our natural enemy, we must keep at a distance and state our case." Thus determined, they addressed him.

பார்த்து, "ஓ தபோநிதியே! நீ யறமுணர்ந்தவ னாகையா லெங்க ளிருவருடைய வழக்கைக் கேட்டுத் தருமநூற்படி நியாயஞ் சொல்லிப் பொய்சொல்லுகிறவனைக் கொல்ல வேண்டும்" என, இவ்வார்த்தையைக் கேட்டுப் பூனை காதி ன்மேற் கையைவைத்து "இப்படிப்பட்ட பேச்சை மறுபடி சொல்லாதேயுங்கள்; நரகத்திற்குக் காரணமாகிய வினை விட்டு நா னறத்தை யனுசரித்துக்கொண் டிருக்கிறேன்; மேலுங் கொலைசெய்கிற புலிமுதலானவற்றைக் கொல்லு கிறவர்களும் நரகத்திற்குப் போகிறார்களென்று சாதுக்கள் சொல்லுகிறார்களானால் மற்றவர்கள் கொலையினால் நரகம் வரு மென்பதி லாச்சரியமென்ன? யாககருமத்திற் பசு வைக் கொல்லுகிறவர்கள் வேதத்திலுள்ள பொருளை யறி யாதவர்கள்; அந்த விஷயத்தி லேழுவருடத்தி நெல்லைக் கொண்டுவெந் தோமம் பண்ணவேண்டுமென்று சொல்லி யிருக்கிறது; பசுக்களைக் கொன்று, மரங்களை வெட்டி யோமம்பண்ணிச் சுவர்க்கங் கிடைக்கிறதானால் நரகத்திற் கேன் போகிறார்கள்? ஆதலா லிவையெல்லாம் வஞ்சகர்க ளுடைய காரியமென் றறிந்திருக்கின்றமையா லுங்களைச் சுத்தமாய்த் தின்னேன்; உங்களுக்கு வழக்குமாத்திரந் தீர்ப்பேன்; நான் கிழவனானபடியினா லெனக்குத் தூரத் துச்சொல் கேளாது; நீங்கள் கிட்ட வந் தொருவர்க்கொரு வர்க் கிருக்கின்ற வழக்கெல்லாவற்றையுஞ் சொன்னால்

as follows:—"Oh ornamant of virtu! as you are versed in the shastras, you must hear our case, and decide according to law and equity, punishing the liar with death." On hearing these words, the cat applied his hands to his ears and said: "Do not speak such words any more. I have given up killing which leads to hell, and now observe righteousness. It is asserted by sages that even those who kill the tiger and other beasts of prey go to hell. What wonder then that by the commission of murder people go to hell. Those who make animal sacrifices in sacrificial performance know not the spirit of the Vedas. In this case, it is laid down that offerings to the fire shold be made with grain of seven years, If heaven can be attained by killing animals and by cutting trees for sacrificial performences, why then do people go to hell? These things are practised by deceivers, I know. I will not therefore swallow you at all. I will only settle your dispute. I am an old person, I cannot hear words at a distance. If you draw near and state what is in dispute between you, then I will hear it, and, consonant with the

கேட் டிம்மைக்கு மறுமைக்கு நலந்தருவதாகிய நடுவுநிலை
மையாய்ச் சொல்லுவேன், ஆசையினாலேனுங் கோபத்தா
லேனு மநியாயத் தீர்ப்புச் சொல்லுகிறவன் நரகத்திற்
போவானாதலால் நீங்களென் காதினருகேவந்துங்கள் வழக்
கைத் தெரிவியுங்கள்" என, அவை யிப்பசப்புவார்த்தையி
னாலதினிடத்தில் நம்பிக்கைவைத்துக் கிட்டவர; அவற்
றைக் கைகளினா லொருமிக்கச் சேர்த்துப்பிடித்து வழக்கற
விரண்டையுந் தின்றது. ஆதலாற் றீயோரைச் சேர்ந்தா
லிப்படிக்கொத்த தீங்கு நேரிடுமென்றறிந்து செய்யத்தக்க
தெதுவோ வதைச் செய்யவேண்டும்" என, அப்படிக்
காகஞ் சொன்னதைப் பறவைகளெல்லாங் கேட்டு இவன்
சொன்னது நன்றென் றெண்ணி, இப்பொழுது சேகரித்த
பொருள்களையெல்லா மிப்படியே வைத்து மற்றொருவனை
யரசனாக்குவதைக்குறித்து மீண் டெல்லாருங் கூடுவோ
மென் றுறுதிசெய்துகொண் டெல்லாந் தத்தமிடத்திற்குப்
போயின, அப்போது சிங்காதனத்தினருகே மனையாளோ
டுகூட வுட்கார்ந்திருந்த கோட்டான் தன் பெட்டையைப்
பார்த்துப் "பெண்ணே! மங்களஸ்நானமாகியு மிப்போ
திராச்சியாபிஷேகம் ஏன் பண்ணாமலிருக்கிறார்கள்?" என,
பேடு "உன் னிராச்சியாபிஷேகத்துக்குக் காக மிடையூறு
செய்தபடியாற் பறவைகளெல்லாந் தங்கள் வீட்டுக்குப்
போயின, காகமாத்திர மிருக்கிறது" என, இதன் வார்த்

---

principle of impartiality which promotes the good of this life and that of the next, I will pass my decision. He who, out of partiality or anger gives an unjust decision, goes to hell. There fore draw near my ears and tell me your dispute." Moved by these deceitful words they put faith in him and went near when the cat put an end to all dispute by seizing them together with his hands and devouring them both."

"Consequently knowing that, if we keep company with the wicked, evil will result, we must do what is proper to be done."

These words of the crow, all the birds heard, and believing that what he spoke was good, parted, each going to its own abode to assemble again for the purpose of appointing another as king with the things that had been collected on the present occasion. Just then, the owl that was sitting with his mate near the throne turned to his wife and said: "Dear! though we have bathed, how is it they do not crown me?" To which the female bird replied:—"The crow stood a bar to your coronation and all the birds returned to their homes. The crow alone remains."

தையைக் கேட்டுக் கோட்டான் காகத்தைநோக்கி, "அடா துஷ்டா! நானுனக் கென்ன செய்தேனென் றென்காரியத் தைச் கெடுத்தாய்? இதனு லின்றுமுத லுன்குலத்துக்கு மென்குலத்துக்குந் தீராப்பகை யிருக்கட்டும்; வாளினால் வெட்டினாலும், பாணத்தினு லெய்தாலு மக்காய மாறிக் குணப்படும்; சொல்லின்காய மப்படி யாறாது" என்று சொல்லிவிட்டுத் தன் பெட்டையோடுகூடத் தன்னிடத் துக்குப் போயிற்று. பின்ன ரக்காக மனதில் திகிற்பட்டு "நுணலை தன்வாயாற் கெடுமென்பதுபோ லிந்தப் பேச் சைக் சொல்லி நான் வீண்பகை சம்பாதித்தேன்; சமர்த் தனாயிருக்கிறவன் சபையிற் பிறனை நிந்திக்கலாகாது; மே லும் யாதொன்று செய்வதை மனங்கலந்த நட்டோரை யுசாவிச் செய்யவேண்டும்; அப்படிச் செய்யாம லிப் போது சங்கடத்தி லகப்பட்டேனென் றிப்படிப் பச்சாத் தாபப்பட் டவனுந் தன் வீட்டிற்குப் போயினன். அது முதற்கொண்டு கோட்டானுக்கு நமக்கும் பகை தலைமுறை தலைமுறையாக விடாமற் றொடர்ந்து வருகிறது" என, இப் படிக் கிழமந்திரியின் மொழியைக் கேட்டு மேகவர்ணராஜன் மறுபடியு மதைப்பார்த்து, "ஐயா! இப்போ தென்ன செய் யலாம்?" என அவன், "பார்ப்பானிடத்திலிருந்தாட்டைச் சில வஞ்சகர்க ளெப்படி வஞ்சித்துக்கொண்டு போனார் களோ வப்படி நான் கோட்டான்க ளிடத்திற்குப்போ

---

Thereupon the owl turned to the crow and said: "Wicked wretch" what have I done to you that you have stopped my coronation? From this day forward, implacable enmity shall therefore exist between your race and mine. If cut by the sword, or shot by the arrow, the wound will heal; but the hurt caused by the tongue will not so heal, so saying the owl went home with its mate.

Afterwards the crow, feeling inward fear, said: "As the frog suffered by his own mouth, so by saying this I have unnecessarily contracted enmity. A wise man should not speak ill of others in an assembly. Moreover intimate friends must be consulted before anything is done Without doing this, I am now involved in difficulties. Thus feeling sorry he went home too. "From this time forward enmity has continued to exist, generation after generation, between us and the owls."

Hearing these words of the aged minister, Meghavarna again asked it: "Sir! what is to be done now?" And in reply he said "in the same manner as some rogues cunningly carried away a sheep from a brahmin, so will I go to the owls, and prac-

யவர்களை வஞ்சனைபண்ணிக் கொல்லுகிறேன்?" என, அதைக்கேட் டிராஜன் "அவர்க ளாட்டை யெப்படிக் கொண்டுபோனார்கள்? சொல்லும்" என, மந்திரி சொல்லுகிறான்:—

"ஒரு தேசத்திலே மித்திரசர்மாவென்னும் பிராமணன் மாசிமாதத்தில் யாகஞ்செய்யவேண்டிப் பசு சம்பாதிப்பதற்காக வேறே ரூர்க்குப் போ யொருவனைப் பசு கேட்க, அவன் இவன் நற்காரியத்தைக் குறித்துக்கேட்கிறானென் றதற்குடம்பட்டு நேர்த்தியான வொருபெரிய ஆடுகொடுக்க வாங்கிக்கொண்டு வருகையில், அவ்வா டிங்கு மங்கு மோடத்தொடங்கினதினா லதைத் தோளின்மேற் போட்டுக்கொண்டு நடக்கையி லதைச் சில வஞ்சனைக்காரர்கள் தூரத்திலிருந்து பார்த்துப் பார்ப்பானை வஞ்சித் தந்தப் பசுவை வாங்கிக்கொண்டோமானால் நாமெல்லாரும் பசிதீர்த்துக்கொள்ளலாமென் றாலோசித் தவர்களி லொரு தூர்த்தன் வந்து "ஓய் நித்தியாக்கினி வளர்க்கின்ற பிராமணா! நீ சீலனாயிருந் திப்படிப்பான காரியத்தை யேன் பண்ணுகிறாய்? மிகவும் ஈனமுள்ள நாயைத் தோண்மே லெப்படிக் கொண்டுவருகிறாய்? நாய், கோழி, சண்டாளன், கழுதை ஆகியவிவைகளைத் தொடலாகா தென்று சாத்திர மிருக்கிறதே" என்று சொல்லக்கேட்டுப் பிராமணன் கோபித்துக்கொண்டு, "நீ யாகப்பசுவை நாயென்

---

tis deceit on them." This heard, the king asked "How did they carry away the sheep? tell me," and the counsellor relates :—

"In a certain country there lived a brahmin named Mitrasarma, who wishing to make a holy sacrifice in the mouth of Masi, went to another country for the purpose of procuring a sacrificial animal, and applied for the same to a certain person. Seeing that the Brahmin's request was for a good purpose, he agreed to it and gave him a big sheep, which he received. But on his way as the sheep began to run about hither and thither, he took it on his shoulders and marched on. This, some subtle knaves saw at a distance, and thinking that if they got that sheep they might all satisfy their hunger, one of them approached and spoke thus :—

"O Brahmin that feed the fire every day! being as you are a holy man, why do you do this profane act? This is a very vile dog how do you take it on your shoulders? The Shastras say that it is wrong to touch these animals—the dog, the fowl, the pariah, and the ass." The Brahmin was enraged at this and asked : "How say you that this sacrificial animal is a dog?

றெப்படிச் சொல்லுகிறாய்? நீ கண் கெட்டையா என்றான்?" என்ன, தூர்த்தன் "பிராமணா! கோபித்துக்கொள்ளாதே, சுகமாய்ப் போ" எனப் பிறகு பிராமணன் சிலதூர நடந்து போனான். மறுபடி யிரண்டாந் தூர்த்தன் வந்து "ஓ அந்தணா! இக்கன்றின்மே லுனக்கென்ன பட்சமிருந்தாலுஞ் செத்தபிற கதைத் தோண்மே லெடுத்துக்கொண்டு போதல் சரியன்று, செத்த மிருகங்களைத் தொட்டால் சாந்திராயணத்தையும் பஞ்சகவ்வியத்தையு மல்லாம லந்தத் தீட்டுப் போகாது, இப்படிக்கொத்த நிஷித்தத்தைத் தோண்மேலேன் காந்துபோக வேண்டும்?" என, அப்போது மப்பிராமண னப்படியே சொல்லிவிட்டுப் போகத்தொடங்கினான். உடனே மூன்றாம்படி யெதிரிட்டு "ஓ ஐயனே! கழுதையைத் தீண்டுகிறவனுக்குச் சசேலஸ்நானஞ் சொல்லியிருக்க, நீ யதை யெப்படிக் கொண்டுபோகத் துணிந்தாய்?" என, அந்தணன் இந்தவாட்டைக் குறித்து மனிதர்கள் பலவிதமாகத் தர்க்கிக்கிறபடியால் இது வேதோ வொரு ராட்சசனா யிருக்குமென் றெண்ணி, அதைப் பூமியில் விட்டுத் தன் வீட்டுக்குப் போனான். பின்பவ் வஞ்சகர்களதைக் கொன்று தின்றார்கள். ஆகையால் நான் சத்துருவை வஞ்சித்து உன்கருமத்தை முடிப்பேன். நானெவ்வா றுபாயஞ் சொல்லுகிறேனோ வப்படியே செய். நீ சத்துரு பக்ஷத்தி லிருக்கிறாயென் றென்னை நிந்தித்து வெகுன்று

---

Have you lost your eyes or what?" The knave replied, "Brahmni do not be angry : go as you plea-e." The Brahmin proceeded a short distance, then the second knave appeared and said : "O Brahmin ! however great may be your affection for this calf, it is not proper for you to carry it on your shoulders, after it is dead. If dead animals be touched, then the pollution will not go without the berformance of the Chanthrayana rite and the Panchakavya. Why should such an unholy object be carried on the shoulders?" To this the Brahmin replied in the same manner as before and degan to go forward Immediately the third knave encountered him and said:—"O Sir ! while bathing in full costume is ordained to him who touches the ass, how dare you take it?" Thereupon the Brahmin thought that as men hold different views about this sheep, it must be some Raksasa, and throwing it down on the ground went home. Afterwards the knaves killed it and had their meal of it.

"Therefore I will deceive the enemy and execute your purpose. Follow whatever expedient I suggest. On the pretext that I am inclined in the enemy's favor rebuke me and stain

னிரத்தத்தை யென்மேலெல்லாம் பூசி யாலமரத்தின் கீழே யெறிந்துவிட்டு, நீ கூட்டங்களோடுகூட மலையின் மேற் போயிருந்தாற் கோட்டான்கள் தங்கள் பகைவர் களுக் கிவன் விரோதியா யிருக்கிறானென்று எண்ணிக் கொள்ளுவார்கள். பிறகு நானவர்கட்கு நம்பிக்கை வருவித்துத் துர்க்கமுதலானவற்றி னுளவறிந்து சத்துருநாசம் பண்ணுவேன். அதுவரைக்கும் நீ யங்கே யிரு. இவ்வாலோசனை நான் முன்னமே செய் திப்போதுனக்குச் சொன்னேன்" என, இப்படி யதனுள் ளுறையைக் கேட்டு மேகவர்ணன் "அத்தியந்தம் பிரியமான பிராணனை நீ துரும்பு போல் நினைத்தாய்" என, பிரதானி "ராசகாரியத்துக் காகச் சேவகர்க ளிப்படியே செய்யவேண்டும், இடர்வருங் காலத்திற் சேவகர்க ளுதவுவார்க ளென்று அரசர்கள் தாமபிமானத்தினா லவர்களைப் பரிபாலிக்கிறார்கள், அப்படி யுதவாவிட்டாற் பரிபாலனத்துக்குப் பயனென்னை?" என் றிப்படிச் சொல்லிப்போய்க் கலகத்துக் காரம்பித்தது. இந்த ரகசிய மிரண்டாம் பேருக்குந் தெரியாததனால் மற்றைப் பறவைக ளதைக் கொல்லத் தீர்மானிக்க, அப்போது மேகவர்ணன் "நீங்க ளவனைத் தண்டிக்கவேண்டாம், இவன் பகையாளிக்கு நன்மைபண்ணுகிற துஷ்டனாகையா லிவனை நானே சிக்ஷித்துக் கோபமாறுவேன்" என்று சொல்லி, எழும்பி யெழும்பி மூக்கு முனையா

---

my whole body with the blood of some other animal and go to live on the mountain with your company; then the owls may be under the impression that I am the enemy of your enemies. Afterwards I will infuse confidence into them, and thereby getting a knowledge of the secrets of the forts &c, will effect the enemy's ruin. Till then you had betetr stay there. This arrangement I already formed in my mind and have now opened it to you." Meghavarna who thus understood the thoughts of the minister said: "Life which is very, dear, you have looked upon as a straw." "Thus should" replied the counsellor, "servants engaged in the royal service do. In the hope that they will be of use in time of danger, kings cherish servants and bring them up. If them they do no good, what comes out of the royal favor?" Then he began to plot. This mystery no third person knew. The other birds therefore determined to destroy him, when Meghavarna interfered and said "you need not punish him. He is a wicked person who favors our enemy; I will therefore myself punish him and gratify my passion." So saying he sprang and with his bill pretended to pick him, and as previous

லதைப் பொய்யாகக் குத்திச் சங்கேதப்படி யாலமரத்தினின்றி ழெறிந்து, கூட்டத்தோடுகூட வேறிடத்திற்குச் சென்றது. பொழுதுபோனவுடனே ராசகோட்டா னவ்விடத்திற்கு வந்து மரத்தைச்சுற்றி முற்றுகைபோட்டுக் கொண்டு, காகங்களைப் பார்க்கும்போது யாதொன்று மங்கே யில்லாமையால் தன்கூட்டத்தைப் பார்த்து "காகங்களெவ்வழியாய்ப் போயின? அவ்வழி யுங்கட்குத் தெரிந்திருந்தா லிப்போதே யவர்களைக் கொல்லுவோம், பகைவர்கள் துர்க்கமுதலியவற்றைச் சேர்வதற்கு முன்னேயானு லவர்களை வெல்லலாம், பின்பு வெல்லக்கூடாது" என் றிப்படிச் சொல்லிக்கொண் டிருக்கையில், சிரஞ்சீவி மெல்லெனக் கத்தினான். அதைக் கேட்டமாத்திரத்தில் வெகு கோட்டான்கள் போய் அதைக் கொல்லத் தொடங்கும்போது, சிரஞ்சிவி "நான் மேகவர்ணன் மந்திரி, என்பெயர் சிரஞ்சீவி, அக்கொடியவ னெனக் கிப்படிப்பட்ட வவஸ்தை வரப்பண்ணினான், ஆகையால் நா னுங்களரசனைச் சரணமாக வடைகிறேன்" என, இதைக் கேட்டுச் சேவகர்களுருமர்த்தனனுக்குச் சொல்ல, அவ னதைக்கேட் டாச்சரியமா யதனருகே போய் "ஓ சிரஞ்சிவி! உனக் கிந்த ஸ்திதி யேன் நேரிட்டது?" என, சிரஞ்சீவி கைகூப்பிக் கொண்டு "முன்னாள் நீர் காகங்களை யடித்திகொன்று கோபமா யந்தக்கொடிய மேகவர்ண னும்முடனே போர்செய்ய வாயத்தப்பட, அப்போது நான், ராசனே! இது வுனக்குத்

ly arranged hurled him down the banian tree, and proceeded with his retinue to another place.

• Towards the evening, the king-owl went to that place and surrounding the tree looked for the crows and missing all of them asked his retinue, "What way have the crows taken? If you know the way, we shall this moment put them to death. The enemy may be overcome only before he gets into hill-forts and other defences, and not afterwards." While they were thus speaking, Chiranjeevi cawed gently As soon as they heard this, many owls prepared to kill him, when Chiranjeevi said "That cruel wretch has caused me this suffering, I therefore take refuge with your sovereign." The servants reported this to Urumarthans, who in surprise went near and asked: "O Chiranjeevi! how has this misfortune befallen you?" Chiranjeevi closed his hands by way of worship to him and said, "Moved to anger that you once killed the crows, that cruel Meghavarna prepared for war against you when I addressed him thus: "King! this does not become

தக்கதன்று, வலியவனுடனே யெளியவன் போர்செய்தால் விளக்கையவிக்க விட்டிற்போய் விழுகிறாற்போற் கெடுதி யுண்டாகும், ஆதலா லவருடனே சமாதானம்பேசி யவர்கள் கேட்பதைக் கொடுத்துப் புத்திமானவ னுயிரைக் காப்பாற்றவேண்டும், பணமெப்போது மீட்டிக்கொள்ள லாம், உயிரிழந்தாற் பெறக்கூடாதென் றிப்படிச் சொல்ல, என்னை நீ பகைவர் பக்கமாய்ப் பேசுகிறாயென்று வைது இந்த வுபத்திரவம் பண்ணினான், இப்போ தெனக் கும்முடைய திருவடிகளே துணை, எனக் கிந்தக் காயங் குணப்பட்டாற் காகங்கண் முழுதையும் கொன்று உமக் குக் கீழ்ப்பட்டிருப்பேன்" என் றிப்படி யது சொல்லக் கேட்டு உலூககாரசன், குருதிக்கண்ணன், கொடுங்கண்ணன், கொள்ளிக்கண்ணன், குரூரநாசன், பிரகாரநாச னென்னுந் தன்னுடைய வைந்து மந்திரிகளையும் பார்த்து "சத் துரு மந்திரியாகிய விவன் நமக்குக் கைவசமானான், இவனை யென்ன செய்யலாம்?" என, அப்போது குருதிக்கண்ணன் "இவ னவனுக்கு முதன் மந்திரி, காலவிசேஷத்தா லவ னுக் கிவன் பிரதிகூலமாய்த் தோற்றப் பட்டான் அவ னொருநாளு மிவன் வார்த்தைக்கு வேறு நடக்கிறவனல் லன், ஆதலா லிவனைத் தம்மிடத்தில் வைத்துக்கொண் டிவன் கையாலே சத்துருவோடு சந்திசெய்யவேண்டும், இதுவே தக்கது, சாமமுதலாக நான்குபாயத்திற் றண்டம்

---

you. If an inferior fights with a superior, then, as the grasshopper in the attempt to extinguish the fire, falls into it and dies, so evil will happen. Therefore a wise person should enter into negociations with his superior and granting him all that he demands, must save his life. Wealth may be acquired at any time Life lost cannot be got back " On this account Meghavárna reviled me that I spoke in favor of the enemy and put me to this torment Now there is no other help for me but your royal feet. If this wound be healed, then I will put to death the whole race of crows and be subject to you."

Hearing this the king of the owls turned to his five ministers Kuruthikannan, Khodoonkannan, Kollikannan, Kururanasan and Prakaranasan, and said: " This person, the enemy's counsellor, has fallen into our hands, what shall be done with him." Then Kuruthikannan replied :—

" This is his prime minister, change of circumstances has made him his enemy. He seldom acts contrary to his advice. You must therefore take him under your protection and with his help must entreat with the enemy. This alone is good. Of the

கடைப்பட்ட தாணையாலே யந்தப் பிரயோகங் கடைசி
யிற் பண்ணவேண்டும்; சாமத்தினாற் செய்கிற காரிய மெப்
போதுங் கெடுகிறதில்லை ; ஆகையா லவர்களிடத்தில் தண்
டத்தை யாலோசிக்கலாகாது ; சருக்கரையைத் தின்று
பித்தம் போமானாற் கைப்பான மருந்தை யேன் தின்ன
வேண்டும் ? ஆதலாற் சாமோபாயமே யென் சம்மதம் ;
இதுவே நல்லது" என, இதைக்கேட்ட வுருமர்த்தன
னிரண்டா மமைச்சனைப்பார்த்து, "உன் னுள்ளநுறையேது?
அதைச் சொல்" என, கொடுங்கண்ணன் " வேந்தனே !
இக்காகங்கள் நமக்கியல்பான வைரிகளாகையா லிவர்கள்
சமாதானந் தக்கதன்று, தண்டமே தகுந்தது ; வெல்லக்
கூடாத பகைவர்களிருந்தா லவர்கட்கு விரோதமாகிய
தாயாதிகளை வருத்தவேண்டும் ; இல்லாவிட்டாற் பணங்
கொடுத்தாவது, பொய்ப்பத்திரம் பிறப்பித்தாவது அவர்
களு ளொருவர்க்கொருவர் பகை யெழுப்பவேண்டும் ; நடு
விற் புரைசலுண்டானால் முத்தும் பந்தனைப்படுகிறது; ஆத
லா லிதைக்குறித் தென்சொல்லைக் கேட்டுச் சுவபக்ஷத்தை
ரக்ஷித்துக்கொண்டு பரபக்ஷத்தைப் பேதிக்கவேண்டும் ;
இக்காகம் வைரியாயினுங் கொல்வது நன்றன்று ; ஒரு

---

four means of dealing with the enemy of which, the conciliatory policy stands at the head, the war policy is the worst. This, therefore, must the last to be used Whatever is done on conciliatory policy never fails. The war policy must not be adopted in their case. If bile can be cured by the taking of sugar, why should bitter medicines be taken? Conciliatory policy therefore has my consent. This alone is good."

Thereupon Urumarthana turning to the second counsellor said "Let me know what your views are" whereupon Khodoonkannan spoke :—

"Sovereign! these crows are our natural enemies; in their case the conciliatory policy is of no avail; war policy is the best. In the case of enemies who cannot easily be subdued, their relatives who may be in bad terms with them must be brought over to our side; or, either by the offer of money or by fabrication of false documents, they must be stirred up one against another. If there be a hole in the centre, then even pearls can be stringed together. Therefore in this matter my counsel must be taken; whoever favors our cause must be cherished and whoever favors the opponent's cause must be separated by sowing discord. Though this crow is our foe, it will not do well to kill him. Sometimes even a foe pre-

வேளை பகைவனு நன்மை சொல்லுகிறான்; ஒரு திருட னொருவனைப் பிழைப்பித்ததும் ஒரு ராட்சத னிரண்டு பசுக்களைப் பிழைப்பித்தும் அறியீரோ? என, அரச னதைக்கேட்டு "அது எப்படி?" என, கொடுங்கண்ணன் சொல்லத்தொடங்கிற்று :—

"ஒரு நகரத்திலிருக்கிற வேழைப்பார்ப்பான் றனக் கொருவன் கொடுத்த பசுவின்கன் றிரண்டையும் புல் முத லானவைகள் போட்டு மிகவும் பெருத்துக் கொழுக்க வளர்த்தான், அக்கடாரிகளைப்பார்த் தவற்றைக் கொண்டு போக வொருதிருடன் தும்பெடுத்துக்கொண்டு புறப்பட்டு வரும் வழியிற் கோரப்பல்லு நீண்டமூக்கும் செம்பட்ட மயிருஞ் சிவந்த கண்ணும் கறுத்த வுடம்புமாக விருக்கிற வொரு ராக்ஷதனைக்கண்டு பயந் தவனைப்பார்த்து நீயார்?" என, அவன் "நான் சத்தியவசனனென்னும் ராக்ஷதன்; நீ யார் சொல்?" என, இவன் "நான் திருடன்; ஒரு வறிய பிராமணன் வைத்துக்கொண்டிருக்கிற விரண்டு பசுக்களைத் திருடப்போகிறேன்" என, ராக்ஷதன் "மித்திரா! அவ் வந்தணன் பரிசுத்தனாகையால் நானு மவனைத் தின்பேன்; பின் பிருவர் காரியமு மாகும்" என, இப்படிப் பேசிக்கொண் டிருவரு மங்கே போகும்போ தந்தணன் தூங்கிக்கொண்டிருந்தமையா லவனைத் தின்ன விராக்கதன் போக, அவனைப் பார்த்துச் சோரன் "மித்திரா! நான் பசு விரண்டையுங் களவுசெய்தபிறகு நீயவனைத்தின்னு" என,

---

poses good. Do you not know how a thief saved a person and how a Rakshasa saved two cows?" Thereupon the king asked how it was, when Khodoonkannan began to speak :—

"In a certain city, there lived a poor Brahmin who was presented by a certain man with two calves. These he fed with grass and other things and brought up with care so that they grew stout and fat. A thief who saw these calves and who wanted to carry them away, set out with a rope and on his way he met a Rakshasa with dreadful tusks, a long nose, red hairs, fiery eyes and black body. Being frightened, he asked him who he was. The Rakshasa replied: "I am a Rakshasa; named Sattiyavachanan; tell me who are you." The thief rejoined: "I am a thief. I am going to steal the cows which a poor Brahmin keeps." Then said the Rakshasa: "Friend! that Brahmin is a pure man; I will swallow him. Then the object of us both will be attained." Thus speaking, both went there, when the Brahmin being asleep, the giant proceeded to devour him. Then the thief turning to him, said "Friend! after I carry away the two cows you can

ராக்ஷதன் "சிநேகிதனே! பசுக்கூச்சலாற் பார்ப்பான் விழித்துக்கொண்டால் நம்முடைய காரியமெல்லாங் கெட்டுப்போமாதலால் நான் முன்னே யவனைப்புசிக்கிறேன், பின்னர் நீ யச்சமில்லாமற் கோக்களைக் கொண்டுபோ" என, கள்ளன் "நீயவனைத் தின்னத்தொடங்கு மாவத்தால் வேறொருவன் வந்தா லவ னென்னைக் கொண்டுபோக வொட்டா னாதலாற் பசுக்களிரண்டையுங் கொண்டுபோன பின்பு நீ யவனைத் தின்னு" என் றிப்படியிருவர்க்கும் வாத நடக்கையி லவ்வேதியன் விழித்துக்கொண்டான். அப்போது கள்ளன் "ஓ பிராமணா! இவ்வரக்க னுன்னைத் தின்பேனென்கிறான்" என, அதைக்கேட்டுராக்கதன் "இக்கள்வனுன் மாடுகளைக் களவாட வந்தான்" என, இப்படியிருவர்பேச்சையுங் கேட்டுப் பார்ப்பான் மெலுக்குடையைப் பட்டிஷ்ட தேவதை தியானத்தா லிராக்ஷதனினின்றுந் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு, கையில் தடியெடுத்துவந்து கள்வனை யடித்துத் துரத்தினான். ஆதலால் மாற்றானு மொருகா லிதஞ் சொல்லுகிறா னென்கிறேன்" என, இப்படி யவ னுள்ளத்தை யறிந் தரிமர்த்தனன் கொள்ளிக்கண்ணனைப்பார்த்து "உன்மனதைச் சொல்வாய்" என, அவன் "மகாராஜனே! சாமமும் பேதமு மெனக் குடம்பாடல்ல; சமாதானத்தாற் பகைவனுக்குச் செருக்குண்டாகும்; மற்று முமது பேதத்தை யவனறிந்தா லொருவேளை மோசமுந்

devour him" "Friend" replied the Rakshasa, "if the Brahmin gets up, being roused from sleep by the bellowing of the cows, our object will all fail. I will therefore eat him up first. You may then without fear carry away the cows." "When you begin to eat him up," said the thief, "the noise may rouse some body else, and he may not allow me to take them. Therefore after I carry away the two cows, you had better eat him." While they were thus disputing, the brahmin awoke. Then the thief, said "O Brahmin! this Gaint says he will eat you up." Whereupon the gaint said "this thief has come to carry away your cows." Hearing thus the words of both, the brahmin became cautious and praying to his tutelary god saved himself from the giant. He then took a stick and beat off the thief. "Therefore, I say, even a foe sometimes does good."

Arimardhana who thus understood the intention of Kodoonkannan turned to Kollikannan and asked him to open his mind.

"Great king!" replied he, "I am not for the conciliatory policy; nor for that of sowing discord. By the conciliatory policy the enemy will grow arrogant. Besides, if he come to know of

செய்வான் ; ஆதலால் விவேகி கொடையாற் பகைவனை வசம்பண்ணி யதை மேன்மேலும் பெருகச்செய்தாற் பின் பவன் தனக்குத்தானே கைவசமாவான்; மேலு மிவனவர்க ளோடு விருத்தமாய் நம்மிடத்தில் வந்தமையால் விரோ திகளிடத்திலிருக்கிற குறைச்சல்களை யறிவித்து நமக்குச் சந்தோஷம் வருவிப்பான், அதுபற்றி யிவனைப் பாதுகாக்க வேண்டும்; இங்ஙனஞ் செய்தா லொருவர்க்கொருவ ரின் சொற்களாற் காலப்போக்குஞ் சம்பவிக்கும் ; மேலு நம் முடைய மர்மங்களையும் வெளிவிடான் ; இங்ஙனமன்றி யொருவர்க்கொருவ ரிரகசியங்களை வெளிவிட்டா லவர் கள் வயிற்றிலிருந்த பாம்பும், புற்றிலிருந்த பாம்பு நாச மடைந்தாற்போற் கெடுவார்கள்" என, உலூகராஜன் அதெப்படி? எனக்கொள்ளிக்கண்ணன் சொல்லத்தொடங் கிற்று:—

"விஷ்ணுவர்மன் என்னுமொரு மன்னனுக்கு வயிற்றி லொரு நோயுண்டாகி நாளுக்குநா ளுடம்பு மெலிந்துபோ கிறதினா லவன் தேசாந்தரங்கட்குப்போ யொருகோயிலி லிருக்கையில், அவ்வூரிலிருந் தரசு செய்துகொண்டிருக்கிற பலி என்பவனுடைய குமாரிக ளிருவரும் பலியினிடத் திற்கு வந்தபோ தவர்களி லொருத்தி யரசனை நோக்கி, "ராசனே ! வெற்றியடைவாய்" என, மற்றொருத்தி "நல்ல

---

the discord you sow, then he may perhaps even practise deceit. A wise man would therefore rather make friends with the enemy by giving him bribes which he would increase till the foe of his own occord, puts himself into this power. Further as this person is disaffected with our enemy and has come over to our side, he will make known to us the enemy's draw-backs and add to our prosperity. On this accont we must give him protection. if we do this, then we may also lightly pass the time by speaking sweet words to one another. Besides he will not reveal our secrets. If the secrets of both parties be mutually revealed, then both parties will suffer in the same way as the serpent in the stomach and that in the ant-hill were destroyed." The king of the owls asked how it was, and Kollikanuan spoke as follows:—

" A prince named Vishnu Varma was every day growing thinner on account of some pain in the stomach. He therefore went on tour to foreign places and on his way took his lodging in a temple in a certain city. The two daughters of Bali, who reigned in that city, one day came to the king, and addressing him, one of them said "King! you will gain victory;" and the other said " you will have good food." When the king heard

போசனம் பண்ணுவாய்" என, இதைக் கேட்டவுடனே யரசனுக்குக் கண்கள் சிவந் தமைச்சர்களைப் பார்த்து "இந்தக் கெட்ட பேச்சுக்காரியை நோயாளிக்குக் கொடுத்தா லிவள் நல்ல போஜனங்களை யனுபவிப்பாள்" என, அமைச்சர்க ளிராசன் கட்டளையிட்டபடியே கோயிலிலிருந்த விராசகுமாரனாகிய பிணியாளிக் கவளைக் கொடுத்தார்கள். பின் பவள் கணவனை யீச்சுரனைப்போ லெண்ணிப் பணிவிடைகள் செய் தவனை யிட்டுக்கொண்டு மற்றொரு தேயத்துக்குப் போம்போது வழியி லோரிடத்திலிறங்கி வேலைக்காரனைக் கூட வழைத்துக்கொண்டு சமையலுக்காகக் கடைச் சரக்குகள் வாங்கப் போனபோது, வியாதிஸ்தனாகிய ராஜகுமாரன் நித்திரைபோனான். அவ்வேளையி லங்கொரு புற்றிலிருந்த பாம்பு ராஜன் கிட்ட வந்து பேச, அவ்வொலியைக்கேட் டவன் வயிற்றிலிருந்த பாம்புஞ் சத்தித்தது. அப்போழ் திரண்டுக்கும் வாக்குவாத முண்டாக, இதற்குள்ளே யவன் பெண்டாட்டி வந்து மரத்தின் மறைவில் நின் றவற்றின் பேச்சுகளைக் கேட்டுக்கொண் டிருந்தாள். புற்றுப்பாம்பு வயிற்றுப்பாம்பைப் பார்த்து "அடா துராத்மாவே! இந்த வழகுள்ள ராஜபுத்திரனை யேன் வருத்துகிறாய்?" என, வயிற்றரவு "ஆகார நிறைந்த குடத்திலிருக்கிற வென்னை நீயேன் நிந்திக்கிறாய்?" என, புற்றரவு "துஷ்டா! கடுகுதின்றானால் நீ யிறப்பாய்

---

this, his eyes grew red and turning to his minister he said "if this talkative girl be bestowed on a sick person she will have good food." Thereupon the ministers, in obedience to the king's command, gave her in marrage to the invalid in the temple. Thenceforward, regarding her husdand in the light of God, she faithfully served him, and led him to another country. On their way they halted at a place where she proceeded to purchase articles of consumption accompanied by her servent. In the interval, the sick prince fell asleep. Then a serpent that was in an ant-hill near approached the prince and began to speak. Hearing this sound the serpent in his stomach also spoke. Then a dispute arose between them. Meanwhile his wife who had returned, stood concealed behind a tree and was listening to their speech. The ant-hill serpent addressed the stomach serpent. "O thou wicked soul! why do you thus torment the handsome prince." "Why," replied the stomach serpent, do you reprove me who am in a vessel full of food." Then the hill-serpent said: "Scoundrel! if he takes mustard, you will die and he

அவன் சுகமடைவான்; இது வொருவர்க்குந் தெரியாது'' என பின் பவ்வயிற்றரவு "வெந்நீரா லுனக்குமலயம் வரும்'' என, இப்படி யவ்விரண் டிரகசியங்களையுங்கேட் டவ ளவ்வண்ணமேசெய் தப்பாம்பைக் கொன்றாள். அதனால் மன்னவன் நோய்தீர்ந்து தன் நகரத்திற்கு மனைவி யோடுகூட வரும்போ தந்நெறியி லவள் தந்தையுஞ் சுற்ற மும் பார்த் திருவர்க்குஞ் சத்காரம்பண்ணி, யவர்களை வழி யனுப்ப, பின் பிருவருந் தங்கள் தேசத்துக்குப்போ யரசு செலுத்திக்கொண் டிருந்தார்கள். ஆகையாற் பரஸ்பரம் ரகசியங்களைக் காப்பாற்றாவிடின் இப்படி நஷ்டநேரிடும்'' என, இதைக்கேட் டிறைவன் குரூரநாசனைப் பார்த்து "உன்னிஷ்... மேது'' என, அது "இம்மூவர் சொன்னது முத்தமமாக விருக்கவில்லை; சாம தான பேதமென்னு முபாயங்கள் வலியில்லாதவர்களைக் குறித் திருக்கின்றன; வலியுள்ளவர்கள் சத்துருக்களிடத்திற் றண்டமே செய்ய வேண்டும்; அதைத் துறந்து சாமமுதலாகிய தந்திரத்தை யோசிக்கிறவனைப் பகைவர் பயந்தவனென் றெண்ணி யவன்மேல் வருவார்க ளாகையால் வேந்தன் தண்டத்தி னாலேயே பாக்கியஞ் சேகரிக்கவேண்டும்; பராக்கிரம மில் லாவிடி லெது தெய்வத்தால் நேரிடுகிறதோ வதை நுகர வேண்டும்; மேலு முலகத்தி லெல்லோரும் லட்சுமியை

---

will prosper. No body knows this" Thereupon the stomach serpent said: "you will also die by hot water." These two secrets she heard and acting accordingly destroyed the serpents. The king was cured of his malady, and returned with his wife to his city. On their way they were met by her father and other relatives who gave them good reception and sent them on their way. So both reached their city and reigned there in peace. Therefore if secrets are not kept, then misfortune will thus be the consequence."

Now the king turned to Kururanasan and asked him—"what is your opinion." He replied:—

"What these three have said does not seem to be good the conciliatory policy, the policy of bribing and that of sowing discord concern the weak. The strong must declare open war against the enemy. Whoever abandons this and adopts the concilatory policy &c., is taken by the enemy for a timid person and is attacked by them. It is by the declaration of war therefore that the king must gain wealth and prosperity. If you lack courage, then whatever happens pursuant to the divine will must be endured. Besides every one in the world seeks fortune

விரும்புகிறார்கள்; அப்படி விரும்பினாலு மனவூக்கத்தோடு தண்டத்தா லெதிரிகளை யவமானம் பண்ணுகிறவர்களுக்கே லட்சுமி கைவசமாகிறாள்; சோம்பலானவர்க ளருமையான பொருளைக் குறித் திலக்குமியைப் பிரார்த்திக்கிறார்கள்; பராக்கிரமமுள்ளவனோ தன் சௌரியத்தினா லிலக்குமியைப் பலவிதமாக வநுபவிக்கிறா னாதலாற் பலவான் பகைவனைக் கொல்லவேண்டும்” என, இதைக்கேட் டரசன் பிரகாரநாசனை நோக்கி, “உன்மனதி லென்னவிருக்கிறது?” என, அவன் “மகாராசாவே! இவன் தங்களை யடைக்கலமாக வடைந்தபடியினா லிவனைத் தலைவனாக்கி முற்காலத்தி லிராமசந்திரன் விபீஷணனைத் தலைவனாக்கி யிராவணாதிகளை யெப்படி யழித்தானோ வப்படியே சத்துருக்களைத் தா மழிக்கவேண்டும்; மேலுஞ் சரணமடைந்தவனைக் கொல்லுகிறவன் ரௌரவநரகத்தை யடைவானென்று சிபிச்சக்கிரவர்த்தி தன்மாமிசத்தை வேடனுக்குக் கொடுத்துப் புறாவை விடுவித்தா னென்று பாரதத்திற் சொல்லியிருக்கிறது; அப்படியே யொருவனிடத்தி லவன் பகைவன் வந்து நடுக்குறும்போ தவனுக் காதித்தியஞ் செய்வதைக் குறித் தவன் நெருப்பிற் குதித்தான்” என, இதைக் கேட் டரிமர்த்தனன் “அதெப்படி சொல்” லெனச் சொல்லுகிறது:—

---

But fortune helps only those who with a firm mind, face the enemy in open war and disgrace them. The indolent pray to Lakshami for rare things, while the powerful valiant man enjoys fortune in various forms on account of his power and valour. Therefore the powerful man must vanquish the enemy."

Thereupon the king turned to Prakaranasan and asked him "what have you in your mind." And in reply thus he spoke:—

"Great king! as long as this person has taken refuge with you, you must make him a chieftain, and as in ancient days Ramachandra ruined Ravana and others by appointing Vibishna as the commander, so must you ruin the enemy. Further it is said in the Maha Bharata that the emperor Sibi, knowing that whoever puts to death any person that takes refuge with him goes to the Rourava hell, gave his flesh to the hunter and relieved the pigeon. In the same way, once when the enemy of a certain person shivered before him with cold, he jumped into the fire in the attempt to give him food. On hearing this Arimardhana asked "say how it was" when he began:—

"ஒருவனத்தி லொருவேடன் கையிற் குருவிக்கூடுங் கண்ணியும் தடிமுதலான வேட்டைக்கருவிகளு மெடுத் துக்கொண்டு திரியாநிற்கையி லசதியில் பெருமழைவந் திருட்டிக்கொண்டு பிரளயகாலம்போலக் காற்று மெழும் ப, அப்போ தவ்வனசரன் நடுக்கலெடுத்து மரத்தின் சார் பில் நின்று "பகவானே! இந்தவேளையி லுன்னைவிட வே றொருவருங் காப்பாற்றுவா ரில்லை" என, அவ்வேளையி லம்மரத்தின்மே லிருக்கும் புறாத் தன் பெட்டை வரவில் லையென்று விசனமாய் "இன்றைக்கென் நாயகி வரவில்லை; அவளை யாராயினும் பிடித்தார்களோ வென்னவோ? அவ ளில்லாம லிங்கெங்கும் பாழாகத் தோற்றுகிறது; மனையா ளில்லாதவீடு சுடுகாட்டைப்போ லிருக்கிறது; கற்புங் கணவ னின்புறும்வகைச் செயலுமுள்ள வில்லாளையுடை யா னெவனோ வவனே பாக்கியவான்" என் றிப்படி யவன் புலம்புகிறதைக் கேட் டவ்வேடன் கைக்கூட்டி லகப்பட் டிருக்கிற பெண்புறாத் துக்கித்து, "முன்பிறப்பில் தீவினை செய்தவர்களுக்குப் பலவகைப்பட்ட தளையுஞ் சிறையு நோயும் வறுமையுஞ் சம்பவிக்கிறது; அஃதிருக்கட்டும்; எச்சமயத்தி லெது நேரிடுமோ வஃதெப்போதும் பிசகு கிறதில்லை" என்று சொல்லிப் பிறகு, தன் பதியைக்குறித் து "ஓ ஓ என் பிராணநாதா! நமது வீட்டுக்கு வந்த வில் வேடனுக்குக் குளிர் முதலாகிய துன்பத்தை நீக்கி யுதவி

---

"As a fowler was wandering in a forest with a bird's cage, a trap, a stick and other tools in hand, all on a sudden the clouds closed, heavy rains came on and a storm rose as in the deluge. Then the fowler stood shivering with cold under the shelter of a tree, and exclaimed "O God! there is none but thee to protect me now." Just at this time the dove that perched on the tree seeing that his wife had not returned bewailed in there terms:—"My wife has not returned to-day; has any body caught her or what? Without her all here seems dreary and desolate. The house without the house-wife resembles the burning ground. He alone is fortunate who has a wife faithful and chaste and able to please her husband." On hearing this bewailing, the female dove in the fowler's cage sadly spoke as follows:—"Many are the fetters, confinements, distresses, and poverty that fall to the lot of those who in their previous life did wicked deeds. Be this as it may. Whatever is destined to happen at any moment shall never fail," and then turning to her Lord, she said: "O my life! Dear Lord! this fowler has come to our home, and we must help him by relieving him of cold and other dis-

செய்யவேண்டும்; வந்த விருந்தை யோம்பாவிட்டா லவன் தன் பாதகத்தை யில்வாழ்வானுக்குக் கொடுத் தில்வாழ்ப வன் புண்ணியத்தைக் கொண்டுபோகிறு னுதலா லிவன் நம்முடைய பெண்டைப் பிடித்தானென்னுந் துக்கத்தை மனதில் வையாம லிவனுக் கியன்றமாத்திரம் பூசைசெய்ய வேண்டும்” என, இப்படிப் பெண்புறுவின் வாக்கியத் தைக் கேட்டு, வேடா! உன் வரவு நல்ல வரவாகுக, நீ மனதிற் சிறிது மையமில்லாம லுன்வீடாக நினைத்து வேண்டுவதைக் கேள்” என, வில்லி “கபோதமே! என் குளிரைப் போக்கடி” என, கபோதங் காட்டிலிருந் தொரு கொள்ளி யெடுத்துக் கொண்டுவந்து சருகுகளின்மேல் வைத்து மூட்டி வேடனைப் பார்த்து, “நெருப்பு மூண்டெ ரிகிற திதில் நீ குளிர்காய்; முன் தீவினையால் நான் பற வையா யிருக்கின்றமையா லென்னண்டை யுன் பசிக்கேற் ற பதார்த்தமில்லை; இப்போ தநேக துன்பங்கட்கிடமாயும் பரோபகார மாகாமலு மிருக்கிற விச்சரீரத்தை வைத்துக் கொண்டிருந்து பல னென்னை? இதனுல் நீ யுன் னுத்மா வுக்குச் சந்துஷ்டி செய்வி” என் றிப்படிச் சொல்லிக் கொண்டே பிற ருதவியின்பொருட் டெரிகிற வழலி லா னந்தத்தோடு, விழ அப்போது வேடன், “ஆ ஆ! என் பொருட் டிந்துடலைத் துறந்தது; மேலு நான் தீயொழுக்க

---

tresses. If the guest is not hospitably welcomed then he imparts his sins to his host and takes to himself the host's goodness. Therefore without taking to your heart that the fowler has captured your wife, you must, as much as possible, entertain him hospitably."

Hearing these words of the female dove, the male dove said "Fowler! may your coming produce good. Have no suspicions in thy mind. Take this to be thine own home, and ask whatever thou wantest. "There" upon the fowler said "Dove! relieve me of my cold." The dove then fetched a fire-brand from the forest and putting it over a heap of dead leaves, addressed the fowler thus:—"The fire has begun to burn, warm thyself in it. By my former bad actions, I am now a bird; and being so, there is nothing with me suited to appease your hunger. What is the good of keeping this body which is now the seat of so many vices, and is of no use to others? With this please thy soul." "So saying, the bird, fell with delight in the fire that burns for the sake of another. Then the hunter thought: "Alas! Alas! for my sake this has given up its body. Besides I am a sinner. I live

முள்ளவன்; வேறொன்றின் றசையினாற் சீவனம் பண்ணு கிறேன்; பரோபகாரமுஞ் சிறிதாயினுந் தயையுங் கனவிலு மறியே னாதலால் ஊனைத்தின் றூனைப்பெருக்கின பாவி; கோரநரகத்திற்குப் போவேன்; இதை யெனக்குத் திருஷ் டாந்தமா யிந்தப் புறாக் காண்பித்ததனால் இதுமுதலாகப் பசி தாகங் குளிர் வெயில் பொறுத்த லிவற்றா லுடம்பை யுலர்த்தி நான் பாபமில்லாதவனாகக் கடவேன்” என்று சொல்லிப் பச்சாத்தாபத்துடனே தன் கூடு தடி கண்ணி முதலான வாயுதங்களை முறித்தெறிந்துவிட் டந்தப்பெண் புறாவை விட்டுவிட, அது வுயிரிலுஞ் சிறந்த தன் நாயகன் தருமத்தின்பொருட் டுடலைக் கொடுத்தானென் றெண்ணி யதுவு மந்த நெருப்பிற்குதித் திறந்தவுடனே யது வொரு திவ்விய ஸ்திரியாய்க் கணவனோடுகூடச் சொர்க்கத்துக் குப் போயிற்று. வேடனு மிரக்கத்தினாற் பரிசுத்தனாய் நெருப்பில் தேகத்தைப் போட்டுவிட்டு நற்கதியை யடைந் தானாதலா லபயமென்றடைந்தவர்களைக் காக்கவேண்டும்” என, இதைக்கேட் டரிமர்த்தனன் “எனக்கு மிப்படியே யபிப்பிராய மிருக்கின்றது; இவன் சத்தியவானும் புத்திமா னுமா யிருக்கின்றான்; கபடியல்லன்; இவற்றை யறியாமல் மேகவர்ண னிவனை மானபங்கஞ் செய்தான்; இவனைக் கொ ன்றால் நான் விசுவாசகாதகனாவேன்; பிரமகத்தி, கள்ளுண்

---

upon the flesh of another object. Even in my dream it has not once occurred to me to do good to others or to show the least mercy. I have fattened my flesh with the flesh of animals. So shall I in this manner go to dire hell. As this dove has now proved this to my face, I will from this day forward dry up my body by the necessities of hunger and thirst, heat and cold and self denial, and thereby be freed of my sins." Thus struck with remorse, he broke his cage, stick and trap and cast them away and set the female dove free But the bird, seeing that its mate, more dear to it than its own life, had cast off his body for virtue's sake, fell into the same fire and died. Instantly it assumed the shape of a lovely woman and in company with her mate reached heaven. The hunter too, rendered pure by his tender feelings cast his body in to the fire, and attained salvation." Therefore those who take refuge must be protected." On hearing this Arimardhana spoke thus:—

"My opinion is the same. This person is a wise and upright person; not crafty. Not knowing this, Meghavarna disgraced him. If I kill him, I shall be a treacherous person. The killing of a brahmin, drinking, and stealing may be expiated

டல், களவாடல் இவற்றிற்குப் பிராயச்சித்தமுண்டு விசு
வாசகாதகத்துக் கதுவில்லையன்றே, ஆகையா லிவனுக்குச்
சம்மானம் பண்ணி நமது துர்க்கத்திற் கூட்டிக்கொண்டு
போகவேண்டுமென் றுறுதிசெய் திராஜன் சிரஞ்சீவியைப்
பார்த்துச் சொல்லுகிறது. "நீ யென் கோட்டையில் வந்து
சுகமாயிரு; நானுன்னைப் பாதுகாப்பேன்" என, இதைக்
கேட்டுச் சிரஞ்சீவி களிப்புற்று, "மகாராசாவே! நான்
விஸ்தரித்துச் சொல்லுவதென்னா? என் குடிப்பிறப்புப்
பிரபுவுக்குச் சகவாசத்தால் வரவரத் தெரியும்" என, அப்
போது குரூரநாசன் "இப்போது கோட்டான் குலமெல்
லா மிராஜன் குற்றத்தாற் பாழாகும்; பிறர் குற்றங்களை
யரசனுக் கறிவிக்கவேண்டும்; அரச னிதத்தைக் கேளா
விடி னதற்கென்ன வுபாயமிருக்கிறது?" என வியம்பவுஞ்
சொல்ல, அரச னதைக் கேளாமற் சிரஞ்சீவியைத் தன்
னரணிற் கொண்டுபோய் வைக்க, பின்பாச் சிரஞ்சீவி,
நம்மைக் கொல்லவேண்டுமென்றவ னெல்லாரிலும் கெட்
டிக்காரன்; மேலு மெசமானனுக்கு நன்மையையே யெண்ணுபவன்;
மற்றவர்க ளெசமானனைப்போல மூடர்களாகையா லவ
னொருவ னில்லாவிடி லிவர்களை வெல்வதருமையன்று என்
றிப்படி மனதுக்குட் குதுகலிப்புடனே யாலோசித்துக்
கொண் டிருக்கையில், அரிமர்த்தனன் காரியகாரர்களைப்
பார்த் திச்சிரஞ்சீவிக்குத் "துர்க்கமெல்லாங் காட்டுங்கள்"

---

while there is no atonement for treachery. We must therefore respect him, and take him into our fort." With this resolution, the king turned to Chiranjeevi and said :—"Come to my fort and live happily. I will protect you." Chiranjeevi felt delighted at this and spoke thus :—

"Great king! why should I speak at length. The greatness of my birth will by and by appear to your majesty by associating with me." Thereupon, Kururanasan said as follows :—

"Now will the whole family of owls be destroyed by the king's fault. The faults of others must be made known to the king, what remains to be done if the king will not listen to what is acceptable."

The king without heeding this, took Chiranjeevi and gave him place in his fort. Chiranjeevi with rapturous heart thought to himself thus :—"He who proposed that I should be killed was the wisest of all; and further looked to the good of his sovereign The others are like their master, all fools. But for that one person, it will not be difficult to subdue them."

Meanwhile Arimardhanan summoned his officers and ordered them to show the whole fort to Chiranjeevi. Thus Chiranjeevi

என, ராசகட்டளையின்படி யெல்லாம் பார்த்து, "நா மிதற்குள்ளிருந்தால் நமதெண்ண முடியாது; பின்னு நம்முடைய வஞ்சனைகளையுந் தெரிந்துகொள்ளுவார்க ளாதலாற் கோட்டைத் தலைவாசலி லிருந்து மனோபீஷ்டத்தை முடிக்கவேண்டும் என்று தனக்குள்ளே தீர்மானித் தரசனை நோக்கிச் சொல்லுகிறது : "மகா ராசனே ! நான் வாயசமாதலா லுள்ளே யிருக்கத்தக்கவனல்லன்; உமது கடைவாசலிற் காத்திருந்து கபடமில்லாமற் சேவித்துக் காலந் தள்ளுவேன் ; அன்புள்ளவனு மனதழுக் கில்லாதவனுமாகிய சேவக னெங்கிருந்தாலுஞ் சிந்தையில்லை" என்றிவ்வண்ணஞ்சொல்லிக் காக மங்கையே யிருந்தது. அப்போது குரூரநாசன், "இராசா வமைச்சர் முதலிய நீவிரெல்லீரும் மூர்க்கர்களா யிருக்கிறீர்களென் றெண்ணுகிறேன் ; முற்காலத்தில் நடந்த வொரு கதையு மிருக்கிறது ; முதன் மூடன் நான், இரண்டாவது வேடன், மூன்றாவ தரசன், நான்காவ தமைச்சன்" என்று சொல்லிவிட்டொரு பறவை பறந்துபோயிற்று" என, அப்போ தவர்கள் "அதெப்படி" எனக் குரூரநாசன் சொல்லுகிறது:—

"பொன்னாக வெச்சமிடுகிற வொரு பறவை மலையின் மேல் நெடுநாளா யிருக்கையி லங்கே யொருநாட் போன வேட னது பொன்னாக மலவிசர்ச்சனம் பண்ணப்பார்த்து

---

by the king's command was able to examine the fort. And he felt sure at heart that if he remained within the fort, his object would not be gained, that his tricks would be discovered, and that therefore he must accomplish his object by remaining at the fort's entrance gate. He therefore turned to the king and spoke thus :—

"Great Sovereign ! as I am a crow, I am not a proper person to remain inside. I will keep your majesty's gate and pass my life honestly in your majesty's service. Little does it matter where the servant is, provided he possesses affection and spotless heart." So saying the crow kept there alone.

"Then Kururanasan said :—" you all—the king and his ministers—are fools, I think. There is a story of an event that took place in former days. A bird flew away saying "In the first place I am a fool, next the hunter, thirdly the king, fourthly the ministers." Thereupon they asked what it was about and Kururanasan continued :—

"For a long time there lived on a mountain a bird which used to discharge gold excrement. Once a hunter, who happened to go there, was surprised to see it yield gold dung, ....ated

மிகவு மாச்சரியமாய் நான் பாலியமுதலாகத் திரிந்துவரு
கிற வெகு காடுகளிற் பார்த்த பலசாதிப் பறவைகளிலு
மிப்படி யொன்றைப் பார்த்ததில்லை, யாதலா லிதை யுயி
ருடனே பிடித்துக்கொண்டு போவோம் என் றெண்ணி
மரத்தில் வலைகட்ட வப்போ தப்பறவை வழக்கப்படி வந்
து சடிதியி லவ்வலையிற் சிக்கிற்று. வேட னதைக் கூட்டி
லடைத்துத் தன் குடிசைக்குக் கொண்டுவந்து, இது நம்
மிடத்திருப்பதை யரச னறிந்தா லிப்பறவையைக் கொண்
டுபோவதுமன்றி நம்முயிரையும் வாங்குவா னாதலா லிக்
குணநிதியை யரசனுக்குக் கொடுப்போமென்று நிச்சயித்
துப் பறவையைத்தந் தரசனுடனே நடந்த செய்தியை
விண்ணப்பம் பண்ண, அப்போ தவ னிரத்தினமிழைத்த
வொருகூட்டில் வைக்க, வதைப்பார்த்து மந்திரி, அசம்பா
விதமான விவ்வேடன் பேச்சைக்கேட் டிதையேன் வாங்
கினீர்? விட்டுவிடும்" என விதைக்கேட் டப்பறவையை
மன்னவன் விட்டவுடனே யது ராசன் மனைச்சிகரத்தி லுட்
கார்ந்துகொண்டு, "முன்னே நான் மூடன், இரண்டாவது
வலைகாரன், மூன்றாவ திராசன், நான்காவது மந்திரி மூடர்
கள்" என் றிப்படிச் சொல்லிப் பறந்துபோய்விட்டது"
என் றிச்சங்கதியைச்சொல்லிப் பின் னிஷ்டமித்திரர்களைப்
பார்த்து "இன்றைவரைக்கு மிவ்விராஜாவின் சார்பிலிருந்
தே னினி வேறொரு மலையைச் சார்ந்திருக்க வேண்டும்

---

thought thus: "From my youth have I been wandering through many forests, and seen birds of many kinds, but never one of this kind. Let me therefore take this alive." With this object he spread his net on a tree, when the bird as usual came down and hastily entangled itself in the net. The hunter put it into his cage and took it home. But thought he, if the king happen to know of this bird living in my possession, then not only will he snatch it away from me but he will also take off my life. Let me therefore give this worthy bird to the king." Thus resolved he presented it to the king and humbly apprised him of what had happened. The king put it into a cage inlaid with precious stones. But the minister, seeing this said "How couldst thou believe the words of this strange hunter. Let it free." Thereupon the king set the bird at large. It perched on the top of the king's palace and said "First I was a fool, next the hunter, then the king, and fourthly the minister." Then it flew away. After relating this story Kururanasan turned to his friends and said:—

"I have till now been under the auspices of the king. I must hereafter be under the shelter of another mountain. He

நரியானது குகையைப் பார்த்துக் கூப்பிட்டுச் சுகமடைந்
தாற்போல வருவதற்கு முன் னாலோசிக்கிறவ னின்ப
மடைவான்” என, அப்போ தவைகள் “அதெப்படி?”
என, குரூரநாசன் “ஒருவனத்தில் வசித்திருந்த கிரகிர
னென்னுஞ் சிங்க மோர்நா ளிரைக்கு நெடுநேரம் திரிந்
தும் யாதொரு பக்ஷணமுங் கிடையாமையினாற் போது
போனவுடனே யொரு பெருங் குகையைப் பார்த் ததி
லடைகிறதற் கியாதேனு மொருபிராணி வரும், அதைத்
தின்று பசியாறலாமென்று தனக்குள் தீர்மானித் ததி
லொளித்துக்கொண்டிருக்கையில், அக்குகையில் வசிக்கிற
வவிபுச்சனென்னு நரிவந் தங்கே சிங்கத்தின் காற்சுவடுக
ளைக் கண்டு சந்தேகித்துச் சிங்க மிதி லிருக்கிறதையு மில்
லாததையுஞ் சோதித்துப் பின் புள்ளே புகவேண்டுமென்
றெண்ணித் தூரத்தில் நின்றுகொண்டு “ஓ குகையே!
குகையே!” என் றிரண்டுதரங் கூவியழைத்து, “குகாய்!
நீ யென்னோடு பேசாமலிருக்கிற தென்ன? உனக்கு மெ
னக்கும் பிரதிதினஞ் சம்பாஷணை நடந்துகொண் டிருந்த
தே, இன்றைக்கேன் நீ பேசவில்லை? விரைவாய்ச் சொல்;
இல்லாவிட்டால் நான் மற்றோ ரிடத்திற்குப் போய்விடு
வேன்” என்று சொல்லி, மீண்டுங் கூப்பிட்டது. அப்
போது சிங்க நினைக்கிறது: இக்குகை நாடோறும் பேசிக்
கொண்டிருக்கும்; இன்றைக்கு நமது பயத்தினா லதனோடு
பேசவில்லை; இதற்குப்பதிலாக நா முத்தரங் கொடுப்போ

---

who has fore-thought will prosper just like the fox who called to the den and saved himself." Being then asked by them how that was, Kururanasan began :—

"In a certain forest dwelt a lion named Kirakira, who one day roamed for prey for a good long while but not finding any, came towards the evening to a large den. He thought that some animal might come to get into this den when he might satisfy his hunger by preying upon it and so hid himself in it. Just then returned the fox Avipuchan whose abode it was, and seeing the foot-prints of the lion, became suspicious and made up his mind to make his entrance into the den only after satisfying himself as to whether the lion was or was not in it. He therefore stood at a distance, and calling twice "den! den!" said "why don't you speak to me? We used to converse with each other every day. Why don't you speak to me to-day? Tell me soon, or I will go away to another place." So saying he called out again. Then thinks the lion: "This would speak daily. But this day it is afraid of me and therefore does not

மென் றுலோசித்துப் பிரதித்தொனியினு லருகே யிருந்த பிராணிகளெல்லாந் திடுக்கிடும்படி யந்நரியைக் கூவ, நரி "அப்பா! நான் பிழைத்தேன்" என்று வேறேரிடத்திற் கோடிப்போய்விட்டது. ஆதலா லெதையு முன்னே யாலோசித்துச் செய்யவேண்டும்" என்று தன் மித்திரர்கட்குச் சொல்லி, அவர்களோடு குரூரநாசமந்திரி தேசாந்தரம் போயிற்று. பின்னர்க் காகமந்திரி இப்போது கோட்டான் கூட்டத்தைக் கொல்வதற்கு வருத்தமில்லை; விவேகமில்லாத மந்திரியையுடைய வரசன் சீக்கிரத்திற் கெடுவான்; விவேகமந்திரி வஞ்சனையான மித்திரர்களைப் பகைவரென் றறிந்துகொள்வான்; இப்படி யறிகிறவ னிவனிடத்தி லிப்போ தொருவனுமில்லை; ஆதலால் நங் குலத்தின் மங்களத்தைக்குறித் தியாதாயினும் பிரயத்தனஞ் செய்யவேண்டும் என்று மனதில் நிச்சயித் தன்று முதல் தினந்தின மொவ்வொருவிறகு கொண்டுவந்து வழியண்டை போட்டுக்கொண்டேவந்து போராகக் குவிந்த மாத்திரத்தி லதைப்பார்த்துச் சூரிய னுதித்தவுடனே கோட்டான்களெல்லாங் குருடுகொண் டிருக்கையி லவ்விறகுகளையுஞ் சுள்ளிகளையுங் குகையின் வழியிற் கும்பலாகச் சேர்த்துத் தான் மெள்ள மேகவர்ணனிடத்திற்கு வந்தது. அப்போழ்து மேகவர்ணராஜன் "என்னசெய்தி?" என, சிரஞ்சீவி "நான் பகைவர் குலவேரைப் பிடுங்கத்

---

speak. Let me speak instead of it." Thus making up his mind he called to the fox so loud that all the animals near startled with the echo. Then exclaimed the fox: "Bless me! Saved am I" and then it ran away to another place.

"Therefore," said the minister Kururanasan to his friends, "we must think before we do anything" and with them proceeded to another country."

Afterwards the minister crow made up his mind as follows:—

"There is now no more difficulty to destroy the flock of owls. The king who is without a wise minister will soon be destroyed. A wise minister takes crafty friends for enemies. There is now nobody with this king who can see this. Some attempt must therefore be made towards the good of our race." Thenceforward, every day the crow brought a stick and placed it near the entrance, so that no sooner was a heap formed than at sunrise, when the owls were all blind, he gathered together the sticks against the gate and slowly went to Makavarna who asked him "what is the matter." Siranjeevi replied: "I have formed

தக்க வுபாயஞ் செய்திருக்கிறேன்; நீங்க ளொவ்வொ ருத்த ரொவ்வோ ரெரிகொள்ளி விழுக்காடு கொண்டுவந் தென் சாகையின்மேற் போட்டாற் கோட்டான்க ளெல்லா மிறக்கும்" என, இதைக்கேட்டுக் காகராசன் "என்னவுபா யஞ் செய்தாய் சொல்" என, மந்திரி "மகாராசாவே! இது சொல்லத்தக்க சமயமன்று; நான் சொல்லுகிற செய்தி யைப் பகைவரறிந்து வேறோரிடத்திற் கோடிப்போனல் நம்முடைய வித்தனை முயற்சியும் வீணாய்ப்போம்; மேலுங் கடிதிற் செய்யத்தக்க காரியத்தில் தாமசஞ் செய்யலா காது" எனக்கேட்டுக் காகராசன் தன் பரிவாரத்தோடுகூட வெரிகொள்ளிகளைக் கொண்டுவந் துலூகங்க ளிருக்குங் குகைவழியிற் போட, அந்தப் புகையினுற் கோட்டான்கள் பயந்து கலக்கமுற் றிரைச்சலிட்டுக்கொண்டு வெளியே வருகையிற் போக வழியில்லாமையா லப்போது குரூர நாசன் சொன்னதை நினைத்துக்கொண்டு "அவன் வார்த் தையைக் கேளாமைக்குப் பல னிதுதான்" என் றழுகுர லோடு சொல்லிக்கொண்டிருக்கையில், நெருப்புச்சுவாலை யதிகரித்துக் கோட்டான்க ளிறந்தன. பின்பு மேகவர்ண ராசன் முன்விட்ட தன்மரத்திற் குடிபோய்ச் சுகமா விராச்சியத்தை யனுபவித்துக்கொண் டிருக்கையிற் சிரஞ் சீவியைப் பார்த்து "நீ பகையாளி வீட்டிலிருந் தெவ்வாறு காரியத்தை முடித்தாய்?" என, சிரஞ்சீவி "குரூரநாசன்

---

a scheme by which the whole family of the enemy may be rooted out. If every one of you get a fire-brand, and throw it on my place then the owls will all perish." On hearing this the king of crows asked "what is the scheme you have planned." Then the minister replied: "Great king! this is not the time to explain that, if the enemies learn the matter, they may run away to another place and all our efforts will prove useless. Further we must make no delay in things that must be done at once." Thereupon the king of the crows accompanied by his retinue brought fire-brands and threw them all at the entrance of the owls' den. Shocked at the smoke that rose, and searching in confusion, the owls tried to make their way out; but finding no egress were put in mind of what Kururanasan had said and wept "This is the result of not having taken his advice." Meanwhile the flames increased and the owls perished. Afterwards the king Makavarna went back to the tree he left before, and happily enjoyed his kingdom.

He then turned to Siranjeevi and asked "How did you remaining in the enemy's house, accomplish your object." And

தவிர மற்றவர்க ளெல்லாரு மூடராகையா லவர்க ளவன் புத்தியைக் கேளாம லவனை யவமானம் பண்ணி யென்னைத் தங்கள் துர்க்கத்திற் கிட்டுக்கொண்டு போனார்கள்; அதனா லவன் தன் சிநேகபந்துக்களோடுகூட மறுதேயத்திற்குப் போனான்; மற்றைக் கோட்டான்கள் மூடராகையா லெரிந்திறந்தார்கள். இவ்வாறே முன்னொருகாலத்திற் சத்துரு நாசத்தின்பொருட் டொரு கிருஷ்ணசர்ப்பந் தவளைகளைத் தோளிற் சுமந்து கெடுத்தது" என, அதைக் கேட்டுக் காகராசன் நகைத்து, "பாம்பு, தவளைகளைத் தோளிற் சுமந்து கொன்றவித மென்ன? சொல்லுமையா" எனச் சிரஞ்சீவி சொல்லலுற்றது:—

"ஒருதேயத்தில் மந்தவிஷனென்னும் பாம் பிரை கிடையாமல் மிகவும் பசித் தோரேரி கரையண்டை வரும் போ ததிலே தவளைகள் நிரம்பி யிருப்பதைக்கண்டு இங்கே யாதேனுமொரு கபடம்பண்ணினா லல்லாமல் நமக் கிரை யகப்படாதென நிச்சயித்துக் கண்ணை விழித்துக் கொண் டிருக்க, அப்போ தொரு தவளை "பாம்பே! நீ யிரைதேடு முயற்சியை விட்டுச் சும்மா வேனுட்கார்ந் திருக்கிறாய்?" என, அதைக்கேட்டுச் சர்ப்பம் 'அபாக்கியனாகிற வெனக் காகார மெங்கிருந்து கிடைக்கும்? இன்றைக்குப் பிரதோஷகாலத்தி லிரைக்காகத் திரிந்துகொண் டிருக்கையி லொருதவளையைப் பார்த் ததைப் பிடிக்கப்

---

Siranjeevi replied: "Since with the single exception of Kururanasan all the others were fools, they disregarded his advice, and led me into their fort. He then left with his friends and relatives for another country. The other owls, who were all fools, were burnt to death In the same manner, once before, for the sake of ruining an enemy, a black serpent carried the frogs on its back and destroyed them." On hearing this he laughed and asked: "Pray, sir, how did the serpent carry frogs on its back and kill them." Thereupon Siranjeevi said:—

"In a certain country a serpent named Manthavishan, feeling hungry for want of prey came to the bank of a lake. There were a good many frogs in that lake; but he felt sure that unless he practised some cunning he could not get prey. He therefore sat with his eyes open. Then a frog addressed him thus: "Serpent! why do you sit quiet without making any attempt to get your prey." Thereupon the serpent replied: "Where can I, an unfortunate person, get prey? As I was roving this day towards the evening in search of prey, I found a frog but when I went to catch it it ran to a very good holy brahmin who stood there.

போகையி லது வங்கிருந்த மிகவுஞ் சத்பாத்திரனாகிய வொரு பிராமணனண்டை யோடிப்போயிற்று; அது தெரியாமல் நானிங்கு மங்கும் பார்த்துக்கொண் டிருக்கையி லங்கே நீராடிக்கொண்டிருந்த வொரு பிராமணப்பிள்ளையின் காலை யிதுதான் தவளையென்று நினைத் தவன்காலைக் கடித்தேன்; அவ னக்கணமே யிறந்தான்; அப்பிள்ளையின் பிதா மிகவுந் துக்கத்தா லென்னைப் பார்த்துத் "துஷ்டப் பாம்பே! யாதொரு குற்றமுஞ் செய்யாத வென் பிள்ளையைக் கடித்தபடியினால் நீ மண்டூகங்களுக்கு வாகனமாகக் கடவாய்; மற்று மவைகளுடைய சேர்க்கையாற் சீவனமும் பண்ணக்கடவாய்" என் றிப்படிச் சபித்ததினால் நா னுங்கட் கூழியமுஞ்செய்ய வந்தேன்" என, இங்ஙன மப்பாம்பின் பேச்சைக்கேட் டது வெல்லாத் தவளைக்குஞ் சொல்ல, தவளைக ளெல்லாந் தங்க ளரசனுடனேகூட வெளியே வந்து மிகவுங் களிப்புடனே யந்தவிஷசர்ப்பத்தின்மே லுட்கார்ந்தன. அது வவற்றிற்குப் பலவித கதிகளைக் காண்பிக்கும்போது தவளைகள் "யானை குதிரை தேர்களிலு மிவ்வாகன நன்றாயிருக்கிறது" என்று மெச்சிச் சந்தோஷிக்க, பின் பந்தப்பாம் பிரண்டு மூன்றுநாள் வரைக்கு மப்படியே நகர்ந்து பிறகு மந்தகதியாய்ப் போகத்தொடங்கிற்று; அப்போ தவைகள் "இன்றைக்கு மெல்லென வேன் நடக்கிறாய்?" என, அப்போது புசங்கம் "நான் பசித்திருக்கிறதினால் நடக்கக்கூடவில்லை" என, மண்டூகராசன் "நீ சிறுதவளையாகப் பார்த்துத் தின்றுகொண்டிரு" என,

---

Not knowing this, I was looking out for it here and there, till I bit the leg of a brahmin boy who was bathing in the lake, mistaking his leg for the frog He instantly died. His father, much grieved, looked at me and cursed me thus:—"Wicked serpent, since you have bitten my son who has done you no harm, you shall be the carrier of frogs; and by their company shall you live." Under the influence of this curse I have come to serve you." The frog heard the serpent's words and informed all the other frogs of the same. Thereupon all the frogs came up with their king with great delight and sat upon the poisonous serpent. The serpent displayed to them various paces, and the frogs were pleasingly delighted that of the several conveyances such as the elephant, the horse, and the car, this was the best. The serpent crawled on in this manner for two or three days and then began to walk at a dull pace. Then the frogs asked: "Why do you go slow" to day "As I am hungry" replied the reptile "I cannot walk." Then the king of frogs said "you had better be living on little

இதைக்கேட்டுச் சர்ப்பம் "எனக் கிவ்வண்ணமே யந்
தணன் சாபமிருக்கிறது ; அப்படியே தாமுங் கட்டளை
யிட்டீர்" என்று சொல்லி நாடோறுந் தவளைகளைத் தின்று
கொண் டிருக்குபோ தங்கே வேறொ ராரவு மிதன்
நடத்தையைப் பார்த்து "நம்முடைய பக்ஷணங்களை நீ
யேன் சுமக்கிறாய் ? இது மிகவும் விருத்தம், உனக்கிது
யோக்கியமன்று" என, அதற்கு மந்தவிஷன் "நானிவை
யெல்லா மறிவேன்; சிலநாளி லென்கருத்து நிறைவேறும்;
அக்காலத்தை யெதிர்பார்த்துக்கொண் டிருக்கிறேன்"
என் றிவ்வாறு சொல்லிப் புன்சிரிப்புமே பழையபடி
நடந்துகொண் டிருந்தது. இப்படி யெல்லா மண்டூகங்
களையுந் தின்று கடைசியி லவற்றி னரசனையும் பக்ஷித்தது.
எந்தச் சமயத்தி லெது செய்யவேண்டுமோ அப்படிச்
செய்து சத்துருக்களை வேரோடுகூட நாசம்பண்ணவேண்
டும். நெருப்புத் தன் பராக்கிரமத்தினாற் காடு முழுதை
யுந் தகிக்கிறது. மரவேர்கள் பூமியிலிருக்கின்றன ; மிரு
துத்தன்மையினால் தண்ணீருங் காற்றுஞ் செடிமரங்களை
யும் வேரோடு பிடுங்குகின்றன" என, இங்ஙன மதன் வாக்
கியங்களைக் கேட்டு மேகவருணன், "கடையானவ ரிடை
யூறு * வருமென்று பயத்தினாற் காரியங்களைத் தொடங்கு
கிறதில்லை ; இடையானவர் காரியங்களைத் தொடங்கி விக்
கினம் வந்தால் விட்டுவிடுகிறார்கள் ; ஆயிர மிடையூறுகள்
வந்தாலு மெடுத்த காரியத்தை முடிக்கிறவர்கள் தலையாய

---

frogs." The serpent replied : "The curse pronounced on me by the brahmin is to the same effect ; and thou hast also ordered to do so." Thenceforward, the serpent kept feeding on the frogs. Meanwhile there came another serpent which observing its conduct, asked "why do you carry our prey. This is very improper. It is not worthy of you" "I know all this," replied Manthavishan ; "but in a few days my object will be gained. I am only waiting for that opportunity." So saying he smiled and walked on as usual. In this manner he devoured all the frogs, and last of all, their king. Thus we must do what ought to be done at the proper time, and pull off the enemy by the root. The fire, by its power, burns the whole forest. The roots of trees are struck into the ground ; but water and wind gently pull out plants and trees by the root." So said Siranjeevi.

Then Makavarna said :—Persons of the lowest order fearing that obstacles may arise do not begin any enterprise. Those of the middle order commence work, but should obstacles occur, they give it up for good. But thousands though the difficulties

ராவர் ; ஆதலால் நீ யனேகவிதமாகக் கஷ்டப்பட்டுப் புத்தி யினாலே வெகு பகைவர்களைக் கொன்றாய், இது யோக்கிய மாகவே யிருக்கிறது; சத்துரு, அக்கினி, இரண மிவற்றின் சேஷம் வைத்தால் மீண்டும் வளருமென் யறிந்து நீ வைரி யைக் களைந்தாய் ; ஆயுதத்தா லொருவன் சாகிறான் ; யுத் தியினா லனேகம் பெய ரொருமிக்கச் சாகிறார்கள்" என் றிராசன் சொன்ன மொழியைக் கேட்டுச் சிரஞ்சீவி "எல் லா முன் பிரதாபத்தா லாயிற்று ; உன்னைப்போ லிருக்கிற சத்துக்களுக் கீசுரனும் விதியு நல்ல புத்தியைக் கொடுக் கும்; அசத்துக்களுக்குத் துர்ப்புத்தியைக் கொடாநிற்கும்; இதுவல்லாமல் தடி யெடுத்துக்கொண் டடிக்கிறதில்லை; கர்மத்தை யநுசரித்துக்கொண் டிருக்கிற புத்தியினால் பயன்களை யடைகிறார்கள்" என் றிப்படிச்சொல்லி மேக வருண னம்மரத்தின்மேற் சுகமா யரசு செய்துகொண் டிருந்தது.

இங்ஙனஞ் சோமசன்மா விராசகுமாரர்கட்குக் காக கூகையின் கதையாகச் சந்திவிக்கிரகமென மூன்றாந் தந்திரஞ் சொல்லினன்.

முற்றிற்று.

---

were to be, men of the first order thoroughly execute the work undertaken by them. You have therefore exposed yourself to many dangers and by the force of your good sense destroyed many enemies. This, certainly, is very worthy of you. Knowing, as you do, that, of foes, fire, and wounds, if any portion be left, it will grow up again, you have rooted out our enemies. By the force of arms one dies: while many die at once by art and cunning.

" Hearing these words of the king, Siranjeevi replied :—"By your Majesty's glory was everything accomplished. " To worthy persons like your Majesty, god and fate give good sense; to unworthy persons they give evil advice; apart from this there is no beating with sticks. By wisdom applied to the conduct of business great ends are achieved." So said Siranjeevi; and Mekavarna continued to reign happily on that tree.

Thus did Somasanma relate to the princes the third means of dealing with enemies, Sandhi Vighram, in the form of the story of crows and owls.

கடவுள் துணை.

# பஞ்சதந்திரம்.

## அரும்பதவிளக்கம்.

### Page—1.

பஞ்சதந்திரம் - ஐந்து தந்திரங்களின் கூட்டம். அவையாவன:— மித்திர பேதம், சுகிருலாபம், சந்தி விக்கிரகம், லப்தஹானி, ஸம்பிரோக்ஷிய காரித்துவம் என்பவைகளாம். இவை தமிழில் மித்திரனை வேறுபடுத்தல், மித்திரனைப் பெறுதல், கூடிக்கெடுத்தல், பெற்றதை இழத்தல், ஆராய்ந்திசைதல், என்பனவாம். தந்திரம் - உபாயம், அவற்றை அறிவிக்கும் நூலுக்கு ஆகுபெயர்.

சந்தி விக்கிரகம்—சந்தி = சேருதல், விக்கிரகம் - சண்டைபோடுதல், கூடிக்கெடுத்தல் என்பது திரண்டபொருள்.

விசுவாசம் - பிரீதி.

குகை-மலைகளில் அறைபோலிருக்கும் இடங்கள்.

மேகவர்ணன் - மேகம்போன்ற நிறமுடையவன்.

### 2.

உருமர்த்தனன் - பெரியவைகளைக் கொல்ல வல்லவன்.

இராமாறு - இராத்திரி தோறும்.

அசட்டை-அசிரத்தை யென்னும் வட சொல்லின் திரிபு, லக்ஷியம் செய்யாமை யென்பது பொருள்.

பேதம் - (மித்திரனை) வேறுபடுத்தல்.

கலகம் - சண்டை.

சொல்லுவீர்கள் — முன்னிலையே வற்பன்மை, ஈர் - முன்னிலைப் பன்மைவிகுதியும் அதன்மேல் கள்-பன்மைவிகுதியும் வந்தன.

பிரதானிகள் - மந்திரிமார்.

இதம் - நன்மை.

விரைவு - சீக்கிரம்.

இச்சகம் - வெளிக்குப்பிரியம்போலிருக்கும்பேச்சு.

உத்தம சீவி - மேன்மையாகப் பிழைப்படவன்.

### 3.

நிலம் - இடம்.

நட்பு - சிநேகிதன்.

பொருள் - செல்வம்.

மாற்றான் - பகைவன்.

கூர்மவிர்த்தி - ஆமையினுடைய இருப்பு; அதாவது, தனக்கு அபாயம் வருவதா யிருந்தால் தன் கை கால் தலை இவற்றை உள்ளே இழுத்துக்கொண்டு பின்பு அபாயம் நீங்கினபோது ஆமை அவற்றை வெளிப்படுத்தும்; அதைப்போலென்றபடி.

கிருஷ்ண சர்ப்பம் - கரும்பாம்பு.

வியாபாரம் - செய்கை.

வலி - பலம்.

அசமயத்தில் - தகாதகாலத்தில்.

கொக்குப்போல் உறங்கி யிருந்து —"மடைத்தலையி லோடுமீனோட வொருமீன் வருமளவும் வாடி யிருக்குமாங் கொக்கு" இப்பாட்டினாலும், "கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்த விடத்து" என்னுங் குறளினாலும், இதன் கருத்தை யறிந்துகொள்க.

வாக்கியம் - பேச்சு.

சங்கடம் - கஷ்டம், ஆபத்து.

### 4.

விஷமச்சுரம் - சீதளத்தைப்பற்றிவந்த ஜ்வரம். [விஷமம் -

ஸமமாகாதது, அதாவது சிலேஷ்மாதி புரண்டு வருவது, இது வைத்திய நூலாருடைய வழக்கச்சொல்.]
அப்பியங்கனம் — அப்பியஞ்சனம் என்பது அப்பியங்கனம் எனத் தமிழில் மருவியது; பூசிக்கொள்வது என்பது பதப்பொருள், எண்ணெய் தேய்த்துக்கொள்வதற்கு வழங்குகிறது.
சம்பவிக்கும் - உண்டாகும்.
வலியவன் - பலவந்தன்.
எளியோம் - பலமில்லாதவர்கள்; தன்மைப் பன்மை குறிப்புவினைமுற்று.
கொல்லாநிற்கும் - கொல்லும்.
மனோபலம் - மனதின் உறுதிப்பாடு.
கொடும் தண்டம் - கொடுமையாக தண்டித்தல்.
வைரிகள் - சத்துருக்கள்.
பராக்கிரமம் - பகைவரை அடக்கியாளும் தன்மை.
பாக்கியவான் - பாக்கியமென்பது இங்கு மேன்மைக்கு வந்தது.
யௌவனம் - நல்லபருவம்.
தாயின்......பயனென்ன — தான் பிறந்தது பயனற்றதென்பது திரண்டகருத்து.
உயிர்த்திருக்கிறவன் - பிழைத்திருப்பவன்.
பொருத்தல் - சேர்தல்.
பொருதல் - சண்டைசெய்தல்.
செருக்கு - கெர்வம், அகங்காரம்.

## 5.

குலமுதலற - குலத்தின் வேர் அற, அதாவது வம்சம் அற்றுப்போக.
துர்க்கம் - கோட்டை, பிறர் நுழையக் கூடாமலிருக்குமிடமென்பது சொற்பொருள்.
வெற்றி - ஜயம்.
லக்ஷ்மி - செல்வம்.
சிக்கென - உறுதியாக.

## 6.

சார்பு - உதவியான விடம், இருப்பிடமென்பது கருத்து.
சமர்த்தர் - கெட்டிக்காரர்.
சேகரித்துக்கொள்ளல் - சேர்த்துக்கொள்ளல்.
உறைவு இடம் - இருக்குமிடம்.
அந்தரம் - மறைவில்லாமை.
சிரஞ்சீவி - நெடுநாள் பிழைத்திருப்பவன்.
சந்நிதி - எதிர், சமீபம்.

## 7.

நூல் சார்பு - சாஸ்திரங்களின் உதவி, சாஸ்திரங்களில் சொல்லியபடி என்பது கருத்து.
யோக்கியம் - தகுந்தது.
விசுவாசம் - பிரீதி, இங்கு நம்பிக்கைக்கு வந்தது.
பலாபலம் - [பலம்+அபலம்] பலமும் பலமில்லாமையும்.
விகிதம் - நியாயத்துக்கு ஒத்தது.
மாதர்கள் - பெண்கள்.
முகநட்புள்ளவர் - வெளிக்குமாத்திரம் சிநேகம் உள்ளவர்போலக் காட்டுகிறவர்கள்.
புரைசல்கள் - ஓட்டைகள், இங்கு குறைவுகள்.
மறைந்தபொருள்கள் - தெரியாத பொருள்கள்.
உடையவன்-கண்ணோடாப்பயிர் - பயிரிட்டவன் நேரே பாராத பயிர்.

## 8.

எச்சரிக்கை - ஜாக்கிரதை.
வேடர்களினின்று—நின்று - ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு
இதாகிதம்—இதம் - நன்மை, + அகிதம் - தீமை.
இறைவன் - அரசன்.
என்னை - என்ன, ஐ - சாரியை.
மீகாமன் - மாலுமி, கப்பலோட்டுகிறவன்.
நியமித்தல் - ஏற்படுத்தல்.

பட்டாபிஷேகம் - பட்டம்கட்டி மந்திரம் செபித்தநீரைத்தெளி த்தல்.
முழக்கி - முழங்கச்செய்து; பிற வினை வினையெச்சம், ககரம் கக ரமானது பிறவினைக்குறிப்பு.
நாவிதன் - அம்பட்டன்.
விலங்கு - மிருகம்.
வஞ்சகம் - சூது.
பணிப்பெண் - வேசி.
சதுரர்கள்-சாதுரியமுடையவர்கள்.

9.

கூகை - கோட்டான்.
உடன்பாடு - சம்மதிப்படுதல்.
சிரக்கம்பனம் - தலை அசைத்தல்
குரூபி - விகாரமான ரூபமுடைய வன்.
தோலோதோல் - சம்மதியில்லா மையின் உறுதியைக் குறிக்கும் ஓர் இடைச்சொல்.
பயங்காசுபாவம் - பயப்படுத்தும் படியான தன்மை.
கூழை - நீண்டவாலில்லாதது, அல்லது மந்தமானது.
சுவாமி - அதிபதி.
உபயோகி - உதவிசெய்யத் தக்க வன்.
கருடன் பெயரினாலே - கருடநா மோச்சாரணம் செய்வதினால் எல்லா இஷ்டங்களும் சித்திக் கும் யென்பது சாஸ்திரம்.

10.

அண்ணே - அண்ணன் என்னும் சொல்லுக்கு விளி.
சதுரதந்தன் - சாதுரியமான தந் தத்தை உடையவன்.
தாகித்து - தாகத்தை அடைந்து.
செத்தால்போல-செத்ததுபோல.
பாதாள கங்கை - பாதாளத்தில் ஓடும் கங்கை யென்னும் ஆறு.
அந்தி - சாயங்காலம்.
சலக்கிரீடை - நீர்விளையாட்டு.

11.

மீளாச்சங்கடம் - தீராதகஷ்டம்.
துர்ச்சனன் - கெட்டவன்.
அஞ்சத்தக்கதந்திரம் - பயப்படும் படியான உபாயம்.
நஞ்சு - விஷம்.
விசயதந்தன் - ஜயம்பெறத்தக்க தந்தத்தை உடையவன்.
சந்திரமண்டலத்தில்இருக்கிறபடி யால்—சந்திரமண்டலத்து நடு வே கறுப்பாய்த் தெரிவதை முயலென்று சொல்வாருண்டு.
நிமித்தம் - சாக்கு, காரணம்.
போர்த்தூதன் - சண்டைசெய் தியை அறிவிப்பவன்.

12.

நெட்டைக்காதன் - நீண்டகாதை யுடையவன்.
சாதுரியவான் - வியக்கத்தக்க சம ர்த்து உடையவன்.
நிபுணன் - கெட்டிக்காரன்.
மௌட்டியம் - மூடத்தனம்.
சோம்பாமை-சோம்பல் படாமை.
பொய்யாமை - பொய்சொல்லா மை.
ஊகித்துஅறிதல் - குறிகளைக்கண் டு அறிதல்.
வாசஸ்தானம் - இருப்பிடம்.
யூதபதி - யானைகூட்டத்தின் தலை வன்.

13.

நாணம் - வெட்கம்.
மீண்டு - திரும்பி.
பிரதியுத்தரவு - பதில் உத்தரவு.
கடுகென - சீக்கிரமாக.
சமாதி - தியானம்.
பங்கம் - தடை.
குற்றி - கொம்பு.

14.

கூர்ம்பல்லன் - கூர்மையானபல் லையுடையவன், பூனை.
முதுமரம் - முதுமையான மரம், பழையமரம்.
பொந்து - மரங்களிலுள்ள பெரி யதுவாரம்.
குருவி - இங்கே பறவைப்பொது.

பட்டான் - அகப்பட்டுக்கொண்டான்.

## 15.

சசம் - முயல்.
பொட்டென - சீக்கிரமாக.
வாவி - பெரியதுரவு, குளமுமாம்.
சொத்துவம் - ஒருபொருளின் உரிமை.
பத்தாண்டு - பத்துவருஷம்.
தர்மநியாயம் - தருமநூலிற்சொல்லிய நியாயம்.
விவாதம் - வழக்கு.

## 16.

அபிநயித்துக்கொண்டு - பாவனை பண்ணிக்கொண்டு.
அசாரமான - சாரமில்லாத, பயனில்லாத.
அறம் - தருமம்.
பாவை - பதுமை.
நிலச்சுமை - நிலத்திற்குச்சுமை.
இடையூறு - தடங்கல்.
தர்மரகசியம் - தருமத்தின் நுட்பங்கள்; ரகசியம் - ஏகாந்தத்தில் சொல்லத் தக்கது.
நிர்ணயித்து - நிச்சயித்து.

## 17.

தபோநிதி - தவங்களுக்கு இருப்பிடமானவன்.
உணர்ந்தவன் - அறிந்தவன்.
சாதுக்கள் - பெரியோர்கள்.
யாககருமம் - யாகமாகியசெய்கை
பசு - நாற்கால் ஜந்து.
ஓமம் - நெருப்பில் மந்திரம் சொல்லி நெய் முதலியவற்றைப் பெய்தல்.

## 18.

இம்மை - இவ்வுலகம்.
மறுமை - மறுவுலகம்.
நடுவுநிலைமை - பக்ஷபாதமில்லாமை.
பசப்பு - வெளிக்கு நன்மைபோலக்காணும் மோசப்பேச்சு.
தீயோர் - துஷ்டர்.
எல்லாரும் - இது எல்லாம்என்றிருக்கவேண்டியது.
மங்களஸ்நானம் - சுபத்திற்காகச் செய்யும் அப்பியங்கனஸ்நானம்.
இராச்சியாபிஷேகம்-இராஜாவாவதற்காகச் செய்யும் அபிஷேகம்.
பேடு - பெட்டை.

## 19.

சொல்லின் காயம் - சொல்லினால் உண்டான புண்போன்ற துன்பம்.
நுனைவே - ஒருவகைச் சிறுதவளை.
மனங்கலந்தநட்டோர் - மனமொத்த சிநேகிதர்.
நட்டோர் - நள் என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர்.
உசாவி - விசாரி.
பச்சாத்தாபம் - முன்னாலோசனையில்லாமல் ஒருகாரியஞ்செய்து அதற்காகப் பின்பு மனம் தவித்தல். [பச்சாத் - பின்.]

## 20.

மித்திரசாமா - மித்திரனென்னும் பெயரையுடையவன். அல்லது மித்திரனுக்கு சுகமுண்டாக்குகிறவன்.
நேர்த்தியான - நல்லதான.
தூர்த்தன் - வஞ்சகன்.
நித்தியாக்கினி வளர்க்கிற - தினந்தோறும் அக்கினியைப் பூஜை செய்கிற.
சீலன் - நல்லஆசாரமுடையவன்,
அந்தணன் - பிராமணன்.

## 21.

சாந்திராயணம் - ஓர் விரதம், அதாவது, சந்திரன் வளரும் தோறும் சோற்றுண்டைகளை ஒவ்வொன்றாய் அதிகப்படுத்தித் தின்று, குறையுந் தோறும் அப்படியே குறைத்துத் தின்பது.
பஞ்சகவ்வியம் - பசுவின் பால், தயிர், நெய், மூத்திரம், கோம

யமாகிய ஐந்து; (பஞ்ச-ஐந்து, கோ-பசுமாடு, அதன் சம்பந்தமானது - கவ்வியம்.)

நிஷித்தம் - கூடாதென்று தடுக்கப்பட்டது.

கபடி - கபடம் செய்பவன்.

சசேலஸ்நானம் - உடுத்த துணியோடு முழுகல்.

தர்க்கித்தல் - ஆக்ஷேபித்துப் பேசல்.

கருமம் - காரியம்.

## 22

விரோதி - சத்துரு.

உளவு - உட்காரியம், உள்ளேயிருக்கும் இரகசியகாரியம்

உள்ளுறை - உட்கருத்து.

அத்தியந்தம் - மிகவும்.

இடர் - துன்பம்.

அபிமானம் - விசுவாசம்.

பரிபாலிக்கிறார்கள் - காப்பாற்றுகிறார்கள்.

## 23.

சங்கேதம் - முன்நடந்த ஏற்பாடு.

முற்றுகை - வளைத்துக்கொள்ளுதல்.

அவஸ்தை - துன்பம்.

சரணம் - அடைக்கலம்.

ஸ்திதி - நிலை.

## 24

விட்டில் - விளக்கை அவிக்கும் ஒரு பூச்சி.

ஈட்டிக்கொள்ளலாம் - சம்பாதித்துக் கொள்ளலாம்.

உபத்திரவம் - துன்பம்.

உலூகம் - கோட்டான்.

குருதிக்கண்ணன் - ரத்தம்போன்ற கண்ணையுடையவன்.

கொடுங்கண்ணன் - கொடுமையான கண்ணையுடையவன்.

கொள்ளிக்கண்ணன் - கொள்ளியைப்போன்ற கண்ணையுடையவன்.

குரூர நாசகன் - குரூரர்களை நாசப்படுத்துகிறவன், அல்லது குரூரமாக நாசப்படுத்துகிறவன்.

பிரகார நாசகன் - அடித்துக்கொல்லுகிறவன், பிரஹாரம் - அடித்தல். தமிழில் ஹ க ஆகத்திரிந்தது.

பிரதிகூலம் - விரோதம்.

சாமம் - நல்லவார்த்தை சொல்லுதல்.

தண்டம் - அடி தண்டனை.

## 25

பிரயோகம் - உபயோகித்தல்.

சாமோபாயம் - நல்ல வார்த்தை சொல்வதாகிய உபாயம்.

சம்மதம் - இஷ்டம்.

தாயாதி - பங்காளி. தாயம்-பொதுமையான சொத்து, அதை யெடுத்துக் கொள்ளுகிறவன் தாயாதி.

பந்தனைப்படுகிறது - கட்டுப்படுகிறது.

சுவபக்ஷம் - தம்முடைய பக்ஷம்.

பரபக்ஷம் - எதிரியினுடைய பக்ஷம்.

பேதிக்க - கெடுக்க.

## 26

நகரம் - பட்டணம்.

கடாரி - பசுவின் பெண் கன்று.

செம்பட்டமயிர் - சிவப்பு நிறமான மயிர்.

சத்தியவசனன் - யதார்த்தமான பேச்சு உடையவன்.

வறிய - தரித்திரனான, வறுமை பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.

பரிசுத்தன் - மிகவும் சுத்தியுடையவன்.

சோரன் - திருடன்.

களவு - திருட்டு.

## 27

அச்சம் - பயம்.

அரவம் - சத்தம்.

கள்ளன் - திருடன்.
வேதியன் - வேதம் ஓதுகிறவன், பிராமணன்.
அரக்கன் - இராக்ஷதன்.
மெலுக்குவை - ஜாக்கிரதை.
இஷ்டதேவதை - தனக்கு இஷ்டமான ஒருதெய்வம்.
அரிமர்த்தனன் — சத்துருக்களைக் கொல்லுகிறவன்.

## 28.

விவேகி - விவேகம் உடையவன், விவேகம் - யுக்தா யுக்தங்களை அறியும் புத்தி.
கைவசம் - சுவாதீனம்.
காக்காத்தல் - காப்பாற்றல்.
இன்சொல் - இனியவார்த்தை.
மர்மங்கள் - இரகசியங்கள்.
விஷ்ணுவர்மன் -விஷ்ணுவென்னும் பெயரையுடையவன்.
தேசாந்தரம் - பிரதேசம்.
பலி - பலமுள்ளவன்.

## 29.

பிணியாளி - நோய்உள்ளவன்.
ஈச்சுரன் - தெய்வம்.
பணிவிடை - இட்டவேலை.
ஒலி - சத்தம்.
சத்தித்தது - இரைச்சலிட்டது.
வாக்குவாதம் - வாய்ச்சண்டை.
துராத்மா- கெட்டமனதை உடையவன், துஷ்டன்.
வயிற்றரவு - வயிற்றிலுள்ளபாம்பு.

## 30.

லயம் - நாசம்.
அந்நெறியில் - அந்தவழியில்.
சுற்றம் - சுற்றத்தார், உறவினர்.
சத்காரம் - பூஜை.
பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர்.
இறைவன் - அரசன்.
உத்தமம் - சிறந்தது.
தானம் - கொடுத்தல்.
துறந்து - விட்டு.

பாக்கியம் சேகரித்தல் - செல்வம் சம்பாதித்தல்.
நுகர்தல் - அனுபவித்தல்.

## 31.

மனவூக்கம்-மனதின்உறுதிப்பாடு.
அவமானம் - அவமதிப்பு.
சௌரியம் - சூரத்தனம், சூரனாயிருத்தல்.
இராமசந்திரன்...அழித்தானே--- இது இராமாயண கதையில் விளங்கும்.
ரௌரவநரகம் - ரௌரவமென்பது ஒரு நரகம்; அது குருவென்னும் கொடிய நாய்கள்கவ்விப் பிடுங்கும்படியான விடம்.
சக்கரவர்த்தி - பூமி முழுவதும் ஆளுகிறவன்.
நடுக்குறுதல் - நடுக்கத்தை அடைதல், வருந்துதல்.
ஆதித்தியம் - அதிதிக்குச்செய்யும் பூஜை; அதிதி விருந்தாய் வந்தவன்.

## 32.

கண்ணி - வலை.
அசதியில் - எதிர்பாராமலிருக்கையில், திடீரென்று.
பிரளயகாலம் - உலகமெல்லாம் முடிவுபெறுங்காலம்.
வனசரன் - காட்டிலே சஞ்சரிப்பவன், வேடன்.
சார்பு - பக்கம்.
பகவான் - பெருமையுடையவன், சுவாமி.
கற்பு - பதிவிரதையாயிருத்தல்.
கணவன் - புருஷன்.
இல்லாள் - அகமுடையாள், மனைவி.
புலம்புதல் - அழுதல்.
தளை - விலங்கு.
சிறை - காவல்.
பிசகுதல் - தவறுதல்.
பதி - கணவன்.

பிராணநாதா - உயிர்க்கு நாயகனா யிருக்கின்றவனே.

## 33.

விருந்தை - விருந்தினனை.
ஓம்புதல் - பாதுகாத்தல்.
பாதகம் - பாபம்.
இல்வாழ்வான் - வீட்டிலிருப்பவன்.
பெண்டீர் - ஸ்திரீ, பெண்சாதி.
இயன்றமாத்திரம் - கூடிய மட்டும்.
ஐயம் - சந்தேகம்.
வில்லி - வில்லால் அடிப்பவன், வேடன்.
கபோதம் - புறா.
பரோபகாரம் (பர + உபகாரம்)- அயலாருக்கு உதவி.
சந்துஷ்டி-சந்தோஷம், திருப்தி.
அழல் - நெருப்பு.
ஆநந்தம் - சந்தோஷம்.
தீயொழுக்கம் - கெட்ட நடக்கை.

## 34

தசை - மாமிசம்.
சீவனம்பண்ணுதல் - பிழைத்தல்.
ஊனைத்தின்று ஊனைப் பெருக்கினை - ஒன்றினுடைய மாமிசத்தைத்தின்று தன்னுடைய மாமிசதேகத்தை விருத்திபண்ணினை, [ஊன் - மாமிசம்.]
பாவி - பாவமுள்ளவன்.
கோரநரகம் - பயங்கரமான நரகம்.
திருஷ்டாந்தமாய் - உதாரணப் படுத்தி.
தாகம் - தகித்தல், கொளுத்துதல், இங்கு அதனால் உண்டாகிய நீர்வேட்கை.
திவ்யஸ்திரி - அழகானபெண்.
நாயகன் - கணவன்.
நற்கதி - நல்லகதி, சொர்க்கம்.
அபயமென்று - நமக்கு இங்குபய மில்லையென்று, [அபயம் - பய மில்லாமை.]
அபிப்பிராயம் - கருத்து.
சத்தியவான் - உண்மை யுடைய வன்.
மானபங்கம் - மானக்கேடு, அவ மானம்.
விசுவாசகாதகன் - விசுவாசத் தைக் கொன்றுவிட்டவன், நம்பிக் கைத் துரோகஞ்செய்பவன்.
பிரமஹத்தி - பிராமணனைக்கொல் லுதல்.

## 35

பிராயச்சித்தம் - செய்ததோஷம் நீங்கும்படி செய்யும் ஒரு சடங்கு.
சம்மானம் - வெகுமதி.
களிப்பு உற்று - சந்தோஷ மடைந்து.
விஸ்தரித்து - விஸ்தாரமாய், அதி கமாய்.
குடிப்பிறப்பு - நல்ல குடியிலே பிறத்தல், இங்கு அதனாலுண் டாகிய பெருமை.
சகவாசம் - கூட வாழ்தல். [சக- கூட, வாசம் - வசித்தல்.]
அரண் - கோட்டை.
குதுகலிப்பு - மிகுந்த சந்தோ ஷம்.

## 36.

மனோபீஷ்டம் - மனதிலுள்ள இஷ்டம்.
வாயசம் - காக்கை.
கடைவாசல் - கடைசியான வா சல்.
சேவித்து - ஊழியம்செய்து.
அன்பு - பிரீதி
அழுக்கில்லாதவன் - வஞ்சனையில் லாதவன்.
மூர்க்கர் - வீண் பிடிவாதமுள்ள வர், மூடர்.

எச்சம் - மலம்.
மலவிசர்ச்சனம் - எச்சமிடுதல்.

### 37.

பாலியம் - இளமைப்பருவம்.
குணநிதி - குணங்களுக்கெல்லாம் இருப்பிடமானது.
அசம்பாவிதம் - ஒரு போதும் நேரிடாதது.
அரமனைச்சிகரம் - அரமனை மாடியின் நுனி.
இஷ்டமித்திரர் - இஷ்டமான ஸ்நேகிதர்.

### 38

வனம் - காடு.
பக்ஷணம் - புசிக்கத்தக்க பொருள்.
அவிபுச்சன் - பெரியவால் உள்ளவன்; விபுச்சன் - வாலில்லாதவன், அ - அதற்கெதிர்மறை.
கால்சுவடு - கால்வைத்த அடையாளம்.
பிரதிதினம் - நாள்தோறும்.
சம்பாஷணை - பேச்சு.

### 39

பிரதித்தொனி - எதிரொலிச்சல்.
காகமந்திரி - காக்கையாகிய மந்திரி.
மங்களம் - சுபம்.
பிரயத்தனம் - முயற்சி

### 40

எரிகொள்ளி - நெருப்பு எரிகிற கட்டை.
சாகை - கிளை.
பரிவாரம் - சேனை.
சுவாலை - நெருப்புக்கொழுந்து.

### 41.

மந்தவிவேகன் - அற்பமான விவேகமுள்ளவன்.
அபாக்கியன் - பாக்கியமில்லாதவன்.
ஆகாரம் - உணவு.
பிரதோஷகாலம் - சாயங்காலம்.

### 42.

சற்பாத்திரன் - தானம் பெறுதற்கேற்ற நல்ல குணமுடையவன்.
மண்டூகம் - தவளை.
வாகனம் - சுமக்குங்கருவி.
சபித்தல் - திட்டுதல்.
கதி - நடைகள்.
மந்தகதி - மெதுவான நடை.
புசங்கம் - பாம்பு.

### 43.

சாபம் - சபித்தல்
அரா - அரவம், பாம்பு.
விருத்தம் - விரோதமான காரியம்.
புன்சிரிப்பு - அற்பமான சிரிப்பு.
கடையானவர் - இழிவானவர்.
இடையானவர் - நடுத்தரமானவர்
விக்கினம் - இடையூறு, தடை.

### 44.

தலையாயார் - முதன்மையானவர்
இரணம் - புண்.
பிரதாபம் - பராக்கிரமம்.
சத்துக்கள் - நல்லகுண முடையவர்கள்.
விதி - அதிர்ஷ்டம்.
அநுசரித்தல் - தொடர்தல்.

அரும்பதவிளக்கம் முற்றிற்று.

கடவுள் துணை.

# பஞ்சதந்திரம்.

# PANCHATANTRAM.

## நான்காவது—IV.

## லப்தஹானி அல்லது பேறழிவு.

## Losing what is in one's possession.

---

சோமசன்மா வரசகுமாரரை நோக்கி "இடருற்ற காலையி லறிவு குன்றாதவன், குரங்கு முதலையினின்று விடுபட்டாற்போற் பெருந்துன்பத்தினின்று மீளுவான்" என, சிறுவர்கள் "அஃதெவ்வணமோ சொல்வாய்" என, ஆசிரியன் சொல்லலுற்றனன்:—

"கங்கைக்கரையி லொருநாவன்மரத்தின்மேற் சுமுகனென்னு மொருவானரஞ் சிலகாலம் வாசம் பண்ணிக்கொண் டிருக்கையி லங்கே வந்த வோரிளைத்த முதலையைப்பார்த்து நீ யென் னிருக்கைக்கு விருந்தாக வந்தமையா லுனக்கு நாவற்பழந் தருவேனென்று சில பழங்கொடுக்கத் தின் றத்தியந்த சந்தோஷத்துடனே தன்னிடத்திற்குப் போயன்றுமுதல் தினந் தினம் வந்து நாலுவார்த்தைகள்

---

"As the monkey," said Somasanma to the princes, "got free of the crocodile, so will that man who, in time of difficulty, does not lose heart, get over great distresses." Thereupon the young men asked "Say how it was" and then the tutor began to relate:—

"On the banks of the Ganges, on a Jamboo tree, there dwelt for a time a monkey named Sumuka. Once a lean crocodile came to it, and the monkey seeing it said, "As you have come a guest to my house, I will give you jamboo fruits." He accordingly gave him some fruits, and the crocodile ate them and returned to his residence with great joy. Thenceforward the crocodile would daily go to the monkey and the two would converse with each other on various topics. While they were

பேசிக்கொண் டிரண்டு மந்நியோந்நியமா யிருக்கையி லொருநாள் முதலை சில கனிகள் கொண்டுவந்து தன் னில் லாட்குக் கொடுக்க, அதுதின் றக்கனி யமிர்தம்போ லிருக் கக்கண்டு தன்னுயகனைப் பார்த்து "பிராணநாதா! இந்த தித்திப்பான கனிக ளெங்கிருந்து கொண்டுவந்தாய்" என, ஆண்முதலை "சுமுகவானரமென்னு மென் னண்ப னென க்கு நாடோறுங் கொடுக்க நானங்கேதானே யவற்றைப் புசித்துக்கொண்டு வந்தேன்; இன்றைக்குத் தின்று மிகுந் ததை யுனக்குக் கொணர்ந்தேன்" என, இம்மொழிகளைக் கேட்டுப் பெண்முதலை "இத்தீங்கனி தின்பவ னீர லமிர் தத்திற் கொப்பாயிருக்கும்; அதைக்கொணர்ந் தெனக்குக் கொடு; அதனை நான் மூப்புச்சாக்கா டில்லாம லுன்னோடு நெடுங்காலஞ் சுகித்திருப்பேன்" என, இதைக்கேட்டு முசலி "எனக் குயிர்க்குயிரா யிருக்கிற நட்டோனாகிய வானரத்துக்கு நீயே னிந்தத் தீங்கு நினைக்கிறாய்?" என, அது "நானுனக் ககத்தியமா யிருந்தா லதனீரலைக் கொ ணர்ந்து கொடு, இல்லாவிட்டா லென்னுயிரைவைத்துக்கொண் டிரேன்" என, ஆண்முதலை "காதலியே சகோதரனினு மித்திர னதிகமாதலா லவனைக்குறித்து நீ யடம்பண்ண வேண்டாம்" என்று மோவாய்க் கட்டையைப் பிடித்து

---

thus living in close intimacy with each other, one day the crocodile brought home some fruits which he gave to his spouse. She took them and finding them to taste like nectar turned to her husband and spoke thus:—

"Lord of my life, whence have you brought these sweet fruits." "I have," returned the male crocodile, "a friend in the person of the monkey named Sumuka He daily gives me these fruits, and I take them with him at the spot This day, what remained after eating, I have brought you."

Hearing these words, the female crocodile, replied: "The liver of him who eats these delicious fruits must be like the nectar. Go and bring that to me; and I can happily live with you for a long time without dotage or death"

Hearing this the male crocodile asked "Why do you think evil to the monkey who is dear to me as my life."

"If" said the female, "you wish to have me, then bring me its liver, if not, I will not live."

Thereupon the male crocodile kissed her [touched her chin] and entreatingly begged her thus:—"My dear, a friend is greater than a brother. Do not therefore be so obstinate about

வேண்டிக்கொள்ள, பெண்முதலை "நீ யென்றைக்கு மென் பேச்சுக்குக் குறுக்குச் சொன்னதில்லை; இன்றைக்குமாத்திர மெனக்குக் குறைச்சல் பண்ணுகிறாய்; ஆதலா லிதோ நான் சீவனைவிடுகிறேன்" எனப் பிடிவாதஞ் செய்ய, கராபெண்ணி னிச்சயத்தையறிந்து "அச்சுமுக னெனக்குக் கொல்லக்கூடாதவனா யிருக்கிறான்; நீயா பிடித்ததை விடாமலிருக்கிறாய்; ஆதலா லிருதலைக்கொள்ளி யெறும்பு போலாயினேன்" என்றிரங்கிச் சொல்லிச் சுமுகனிடத்திற்குப் போயிற்று. அப்போது சுமுகன், "நண்பனே! இன்றைக்கேன் விசனமா யிருக்கிறாய்?" என, முதலை "மற்றொன்றுமில்லை யுன் மச்சினிச்சி யென்னைப்பார்த்து துஷ்டா! நன்றிகெட்டவனே! நீ யாரால் சீவனம் பண்ணுகிறாயோ வவனை யொருநாளைக்காயினும் நமது வீட்டிற் கழைத்துவந்து விருந்திடவேண்டாமா? அவன்வீட்டுக்கு மாத்திரம் வெட்கமில்லாமற் போய்ப்போய் நல்லபழங்களைத் தின்னுகிறாயே யென்றிப்படித் திட்டிக் கோபித்தாள்; ஆதலால் நீ யென்வீட்டுக்கு வா; உன்னைக்குறித்துப் பலபல பதார்த்தங்க ளேடிவைத்துக்கொண்டு வழிபார்த்துட்கார்ந்துகொண் டிருக்கிறாள்" என, வானரம் "நண்பனே! எனக்குத் தண்ணீரில் வரக்கூடாது; நீ யென்பிரியமுள்ள மச்சினிச்சியை யிங்கே கூட்டிக்கொண்டு வா" என,

---

him." Thereupon the female crocodile said obstinately :—"You have never hitherto spoken against me. But this day you do me wrong. Therefore will I now put an end to my life."

Finding the resoluteness of the female, the male crocodile bewailed thus :—"I cannot kill that Sumuka, and you will not give up that which you have set your heart upon. I am therefore become an ant on a fire-brand lighted at both ends." So saying he proceeded to Sumuka.

"Friend," asked Sumuka, "what makes you look sad to-day?" "Nothing else" replied the crocodile, "your sister-in-law angrily reviled me thus: "Wicked man, ungrateful wretch, should you not, one day at least, invite to your home him by whom you live, and give him food, while every now and then you shamelessly go to his house, and eat of his sweet fruits? Therefore please go to my house. She has gathered several things for you, and is looking out for you on the way."

"Friend," rejoined the monkey, "I cannot wade through the water. You had better go and bring my sister-in-law here."

மகரம், "சுமுகனே! நான் கங்கைக்கரையி லிருக்கிறேன், நீ யென்முதுகின்மே லுட்கார்ந்துகொண்டு வா; நோவாமற் கொண்டுபோவேன்" என, அதி னம்பிக்கைவைத்துக் குரங் கப்படியே யுட்கார்ந்துகொண்ட மாத்திரத்தின் முதலை தண்ணீரிற் குதித்துப் போகையில் வானரம் "எனக் கச்ச மாயிருக்கின்றது மெள்ளமெள்ள நட" என்றது, அதைக் கேட்டு முதலை யிப்போது சுமுக னம்முடைய வாதீனத்தி லிருக்கிறான்; இனி யிவனுக்கு நங்கருத்தை வெளியிடுவ தற்குக் குறையென்ன விருக்கிறது? உரலிலகப்பட்ட துலக் கைக்குத் தப்புமா? என்ன விங்ஙனந் தனக்குட் டைமானித் துக்கொண்டு, "மித்திரா! உன்னிஷ்ட தேவதையை நினை; பெண்சாதியின் பிடிவாதத்தா லுன்னைக் கொண்டுபோ கிறேன்" என, குரங்கு "நானென்னபிழை செய்தேன்" என முதலை "நீ நேற்றுக்கொடுத்த நறுங்கனிகளை யென்மனைவி தின் றதன்மே லித்தன்மையான தீங்கனியைத் தினந் தின் னுகின்ற பாக்கியவா னீரல் கேவல மமிழ்தத்தை யொத் திருக்கும்; ஆதலா னீ யவனீரலை யெனக்குக் கொணர்ந்து கொடாவிடி லென் பிராணனை வைத்தேனே னென்றாள்; அதைக்குறித்துத்தா னுன்னைக் கொண்டுபோகிறேன்" என, அதைக்கேட்டு வானரம், "ஓகோ! இப்படியென் றெனக்கு முன்னமே தெரிந்திருந்தா லந்த மரத்தின்மே

---

Then said the crocodile, "Sumuka, I will remain on the bank of the Ganges; sit on my back and I will take you comfortably" The monkey put faith in his professions and sat accordingly. Then the crocodile jumped in the water, and moved on when the monkey exclaimed "I am afraid; go slow"

Hearing this, the crocodile thought to itself thus: "Now is the monkey in my power. What harm is there in opening my mind to him. Can that which has got into the mortar escape the pestle?" With this self-assurance, the crocodile said, "Friend, think of your tutelary God. I take you to please my obstinate wife." "What wrong," asked the monkey, "have I done?"

"My wife," replied the crocodile, "partook of the fruit which you gave me yesterday and then said, "the liver of that fortunate person who daily eats this sweet fruit should be as sweet as the nectar. Therefore if you refuse to bring me his liver, then I will not keep my life."

On hearing this the monkey pretended to be much concerned and said "Oh! oh! If I had known this previously, I

லொளித்து வைத்திருக்கிற வந்த வீரலை யுனக் கங்கேயே கொடுத்திருப்பேன்; வெறு மிருதயத்தோ டிருக்கையி லென்னை வீணாகக் கொண்டுவந்தாய் எனக் கிலேசப்பட, அப்போது மகரம் "என் பிராணமித்திரா ! அதைக்கொடுத்தா லவள் சந்தோஷமாவாள்" என்றுசொல்லி வானரத்தை யதிசீக்கிரத்தில் முன்னிடத்திற் கொண்டுவந்து விட்டவுடனே, வானரங் குதித்து மரத்தின்மே லேறிக்கொண்டின்றைக்குக் காலன் கையிலிருந்து விடுபட்டேனென் றெண்ணிக்கொண் டிருக்கையில், முதலை, "மித்திரா ! ஈரலைச் சுருக்காய்க்கொடு; உன்னண்ணியாருக்குக் கொடுத்துவிட்டு வருகிறேன்" எனக் கேட்டு, வானரம் நகைத்து "மூடா ! துஷ்டா ! ஈரலுடம்பைவிட் டிருக்குமா ? அஃதிருக்கட்டும், நீ விசுவாச காதகனாதலா லிங்கிருக்கவேண்டாம்; சீக்கிரத்திற் புறப்பட்டுப்போ; உன்னைப் பார்க்க வென்க ணஞ்சுகின்றது" என் றிம்மானமுஞ், சுமுகன் சொன்னவுடனே முதலை பச்சாதாபப்பட்டு, நானிவனுக்கு வழியிலுண்மைசொல்லி யிழந்தேன்; இப்போது மறுபடி விசுவாசம் வரப்பேசி யிவனைக் கொண்டுபோக வேண்டுமென் றாலோசித்து, "மித்திரா ! நானுன்னைப் பரீக்ஷிக்கலாமென் றிவ்வாறு சொன்னேன்; மேலு முலகத்தி னொருவாத வுன் பேச்சை நிசமென் றெண்ணித் திருப்பிக்கொண்டு வா

---

would have given you the liver which I keep concealed among the leaves of that tree In vain are you now taking me when I have only my empty heart with me."

"My life-dear friend," returned the crocodile, "if that be given to her, she will be satisfied," and then he took him back quickly to the former place As soon as he got back to his place, the monkey climbed up to the tree and was consoling himself with the thought that he had escaped from the hands of death, when the crocodile said: "Friend, give me the liver quickly, I will take it to your sister-in-law and come back."

On hearing this, the monkey laughed and said "Fool, scoundrel, can the liver be without the body? Let that be as it is; you are a treacherous fellow. Do not stay here. Begone quickly. My eyes fear to look at you"

Then the crocodile sorrowfully thought thus: "I have deceived myself by speaking the truth on the way. I must now again speak to him so as to revive his confidence in me and take him back" With this determination, he said. "Friend, I told you this in order to test you I did not come back because

**வில்லை;** ஈரற் சரீரத்தைவிட்டு வேறிடத்தி லிராதென் பது சிறுபிள்ளைக்குந் தெரிந்திராதா? நானிது விளையாட் டுக்குச் செய்தேன்; ஆதலா னீ யென் வீட்டுக்குக் கிலேச மும் பயமுமில்லாமல் வா; உன்பொருட் டென்பெண் டாட்டி வழிநோக்கிக் கண்பூத்துப்போகக் காத்துக்கொண் டிருக்கிறாள்" என, சுமுகன் "பசித்தவனது விசுவாசத்தி னம்பிக்கை வைக்கலாகாதென்று பிரியதரிசனனைக் கங்காதத்த னஞ்சி மீண்டுங் காணவில்லை" என, அப்போது முதலை "பிரியதரிசனனுக் கவனே னஞ்சினான்?" என, வானரஞ் சொல்லலுற்றது:—

"ஒரு கிணற்றிலிருந்த கங்காதத்தனென்னு மொரு பெருந்தவளையை மற்றைத்தவளைகள் மிகவும் வருத்தப் படுத்திக்கொண் டிருக்கிறதினா லது ராட்டினத்தொண்டி நெறியே வெளியில் வந் திந்தத் தாயாதிகள் வலியவரும் பலருமா யிருக்கிறார்கள், இதற் கென்ன செய்வோமென் றெண்ணமிட்டுக்கொண் டிருக்கையி லொருபாம்பின் புற் றைப்பார்த்து வழிப்போக்கர் காலிற் றைத்தமுள்ளை முள் ளாலேயே வாங்குகிறதுபோ லிந்தப் பாம்பை நமது வீட் டுக்குக் கொண்டுபோய்ப் பங்காளிகளைக் கொல்ல வேண்டு மென நிச்சயித்து வளையின்கிட்ட விருந்து பாம்பைக்கூவ,

---

I believed what you have said; I know that such a thing can never take place in the world. Does not even a child know that the liver cannot be without the body? I did this for fun. Therefore come to my house without anxiety or fear; my wife has been looking out for you on the road so intently that her eyes would have turned dim."

"No faith," replied Sumuka, "can be put in the friendship of a hungry man. Gangadhattan was afraid of Priyadarisana and did not see him back."

"Why," asked the crocodile, "was Gangadhattan afraid of Priyadarisina?" Then the monkey began to speak as follows:—

"In a well, there lived a large frog named Gangadhattan which was so much infested by the other frogs that it came out through the hole in the wheel for drawing water and was thinking thus:—"These kinsmen are many and strong. What shall I do for this" At this moment it beheld a serpent's ant-hill, and as travellers use a thorn to take off the thorn that has stuck in their feet, so it made up its mind to take the serpent home, and to kill its kinsmen with the serpent's help. Accordingly it drew near the ant-hill, and called out to the serpent. Then the

பாம் பிவன் மாந்திரிகனோ நம்மைக் கொல்லவந்தவனோ கூப்பிடுகிறவ னின்னவனென்று தெரியவில்லை. ஆதலா லிவனை யிங்கிருந்தே கேட்கவேண்டுமென்று தீர்மானித்து "நீ யார்" என. மண்டூகம் "நான் கங்காதத்தனென்னும் மண்டூகராஜன்; உன்னைச் சரணமாக வடைந்தேன்" என, கேட்டுப் பிரியதரிசனன் "நெருப்புந் துரும்புகளின்சேர்க்கை நில்லாததுபோல நானும் பரமசத்துருவா யிருக்கையி னீயிங்கேவந் திந்த விபரீத பாஷணைபோல் பண்ணுகிறாய்?" என, கங்காதத்தன் "என்னை பகைஞர் வருத்துகிறார்களென் றுன்னிடத்திற்கு வந்தேன்; நீ யெங்கள் சன்மசத்துரு வென்பது மெய்யே; ஆனாலும் வலிய பகைவர்களை வைரிகளைக் கொண்டே யடிக்கவேண்டுமென நீதிநூ லிருக்கிறது" எனக்கேட்டு, இச்சர்ப்பம் "என்னா லங்கெப்படி கிடைக்கும்?" என, மண்டூகம் "உன்னை நானனுபாயமாகக் கொண்டுபோவேன்" என, அதைக் கேட்டுப் பிரியதரிசனனுந் தீனியைக்குறித் தென்றைக்கும் விசாரப் பட்டுக் கொண் டிருக்கின்றோம்; அவ்வாகாரந் தானேவந் தின்றைக்கு நம்மை யழைத்துக்கொண்டுபோக விருக்கையி லாலசிய மேன் பண்ணவேண்டும்? வலியவந்த சீதேவியை

---

serpent thought to itself thus:—" Who is the person that calls me? Is he an enchanter or is he come to kill me? It is not known who he is Therefore I must keep here and ask him" So resolved, it asked, " Who are you?" " I am," answered the frog, " the king of frogs My name is Gangadhattan. I have come here for protection."

" Fire and straw," said Priyadarisana, " cannot stand together. I am your bitterest enemy. Why then do you come here and practise such strange dissimulation?"

" My enemies," replied Gangadhattan, " persecute me and I am come to you. Though it is true you are our hereditary enemy, it is laid down in didactic books (Shastras) that powerful enemies must be subdued by the help of enemies"

On hearing this, the serpent asked " How can I get to that place?"

The frog answered " I will take you there without any trouble to you."

On hearing this, Priyadarisana thought within itself thus:—

I am always uneasy about my prey. Why then should there be delay made now when my prey has come here of itself

வேண்டாமென்று தள்ளலாமா? என்று தனக்கு ளாலோ
சித்துக்கொண்டு தவளையின்பின்னே வர, தவளை யதை
யிராட்டினத்தின்வழியாய்க் கொண்டுபோய்த் தன்வீட்டில்
வைத்துக்கொண்டது. அந்தப்பாம்பு தவளைகளையெல்லாந்
தின்றது. பிறகு கங்காதத்தனைப்பார்த்து "மித்திரா! உன்
சத்துருக்களையெல்லாங் கொன்றபடியினாலெனக் கேதாவ
தாகாரங் கொடு" என, தவளை "நீயுன் சிநேகிதன் காரியத்
தைச் செய்தாய்; இப்போது வந்தவழியே வீட்டுக்குப்
போகலாம்" என, அதைக்கேட்டுப் பாம்பு "கங்காதத்தா!
அந்தப் பிலத்தில் வேறே யேதாவது வந்து தங்கியிருக்கும்;
யானங்கேபோ யென்னசெய்வேன்? நீயே யுன்சமுதாயத்தி
லிருந்து நித்தியமெனக் கொவ்வொருதவளை கொடுத்துக்
கொண்டு வா; இல்லாவிட்டா லெல்லாரையு மொருங்கே
கொல்லுவேன்" என, இவ் வுத்தரவைக் கேட்டுக் கங்கா
தத்தன் பயப்பட்டு நித்தமொருதவளை விழுங்கக் கொடுத்
துக்கொண் டிருக்கத் தின்றுவருகையி லொருநாள் கங்கா
தத்தன் புத்திரனையுந் தின்றது அதைக் கங்காதத்தன்
மனைவி பார்த்து மிகவும் வருத்தமுற்று "கங்காதத்தரே!
நீ யிக்கொடியோனைக் கொண்டுவந்து குலத்தை நாசம்
பண்ணினீர்; இனி யிவ்விடம் விட்டு புறப்படும்; இல்லா
விடி லிவனைக் கொலைசெய்யச் சூழ்ச்சி செய்யும்" என,

---

to take me. Can the goddess of fortune be shoved back when she comes unsolicited? The serpent, accordingly followed the frog which took it through the wheel and gave it a lodging in its house. The serpent, then ate up all the frogs. Afterwards it addressed Gangadhattan thus: "Friend, I have now killed all your enemies; give me therefore something to eat."

The frog replied: "you have accomplished your friend's object. You may now take the way you came, back to your house."

Hearing this, the serpent said "Gangadhatta, some other animals may have taken my lodging in that ant-hill. If I go there, what shall I do? You must yourself from your subjects" daily give me a frog Otherwise I will kill all together" On hearing this, Gangathattan was frightened and he consented to give daily a frog. The Serpent continued to eat the frogs till one day it swallowed Gangathattan's son also. Gangathattan's wife was much grieved at this, and addressed Ganthattan thus: "Gangathatta, you have brought this cruel person to ruin our family. Now leave this place or devise some expedient to

இதைக்கேட் டாராய்ச்சி செய்துகொண் டிருக்கையிற் பாம்பு "எனக்கேதாயினுந் தின்னக்கொடு" எனக் கங்கா தத்தன் "மித்திரா! நா னிருக்கையி னீ யினிக்கேன் விசா ரப்படுகிறாய்? இப்போ தென்மனைவியை யனுப்பி வேறு கிணற்றிலிருந் தின்னு மண்டூகங்களை யழைப்பிக்கிறேன்; அதுவரையு நீ சும்மா விரு" எனக் கேட்டுப் பிரியதரிசனன் "நீ எனக் கன்னதாதா, ஆகலாற் பிதாவாக விருக்கிறாய்; உடனே தவளைகளை யழைப்பி" என, பின்னர் மனைவியை மற்றொரு கூபத்திற்போக்கிப் "போனவள் இன்னும் வர வில்லை; நானேபோ யநேகந் தவளைகளைக் கொண்டு வரு கிறேன்; நீ யிங்கே சுகமாக விரு" என்று சொல்லித் தானு மிராட்டினவழியே புறப்பட்டுப் போயிற்று. பின்பு பிரிய தரிசனன் றவளைகளைக் குறித்து எதிர்பார்த்துக்கொண் டிருக் கையிற் றப்படி யவகுநாட் கழிந்தபின், மற்றொரு வளையி லிருந்த பல்லியைப்பார்த்துப் பிரார்த்தித்து, "ஓ பல்லியே! உனக்குங் கங்காதத்தனுக்குஞ் சிநேகமானபடியா லவனிருக்கிற விடத்திற்குப்போ யுன்னைப் பிரியதரிசன னழைக்கிறா னென்று மினியுனக்குத் துரோகம் பண்ணே னென் லெனக் காணையிருக்கிறது, நீ மனத்திற் சிறிது மையப்படா தேயென்று மிவ்வாறு சொல்" என, அதனுத்தரவைப் பெற்றுக்கொண் டக்கவுளி கங்காதத்தன்பாற்போ யெல் லாச் செய்தியையுஞ் சொல்லக் கங்காதத்தன் "பசித்தவன்

kill him." The frog was accordingly planning a scheme in his mind, when the serpent asked 'Give me some thing to eat." "Friend," replied Gangathatta, "while I am here, why are you uneasy about your prey? I will now send my wife to fetch more frogs from another well. Till then wait"

Hearing this, Priyadarisana said as you are my food-supplier, you are also my father. Send for the frogs soon." Then the frog sent its wife to another well and after a little while said "my wife has not returned yet I will myself go and get many frogs. Be at ease here." So saying it went through the wheel Priyadarisana waited for the frogs, and many days passed in this manner, till one day, it saw a lizard in another hole and spoke to it thus:—

"Lizard, as you are a friend of Gangathatta, please go to him and say this: "Priyadarisana calls you back; he has given his word that he will not be treacherous to you You need not therefore entertain the least suspicion at heart" The lizard took leave of Priyadarisana and went to Gangathatta and told him all this. Gargathatta replied "No confidence can be placed

விசுவாசத்தை நம்பலாகாது; நீ போய்ப் பிரியதரிசனனுட னே, துஷ்டா! இனிக் கங்காதத்தன் வரானென்று சொல்" என, கவுளிபோய்ப் பாம்புக் கிவற்றையெல்லாஞ் சொல்லிற்று. அப்படிப்போல நான் மீண்டு முன்வீட்டுக்கு வரேன்" என, இதைக்கேட்டு முதலை நீவராவிடி லெனக்கு நன்றிமறந்தமை சம்பவிக்கும்; ஆதலா லுன் பட்டினியிருந் துன்னைக்குறித் திங்கேயே பிராணனைவிடுவேன்" என, அப்போது வானரமானது "நரி நீள் செவியனுக்கு நம்பிக்கை வருவித் ததெப்படிக் கொன்றதோ வப்படி நீயு மென்னைக் கொலைசெய்ய விரும்புகிறாய்" என, முதலை யதைக் கேட்டு "அஃதெப்படி" என, குரங்கு சொல்லுகிறது:—

"ஓரடவியிலிருக்கின்ற கராளகேசரி யென்னுஞ் சிங்கத்துக்குத் தேக மேதோ குணமில்லா திருந்தமையாற் றூசரனென்று நரியைப் பார்த்து "பிரதானியே! இன்றைக் கெனக் கெங்கும் போகக்கூடாது; நீயேபோய் யாதாயினு மிரை கொண்டுவா" என, நரி நாலண்டையு மோடித்திரிகையி லொரு கழுதையைப் பார்த்து, "மாமா! கும்பிடுகிறேன், நீ யிப்போது மிகவு மிளைத்துப் போனாய்" என, அப்போது கழுதை "மருமகனே! என்ன சொல்வேன், எனக்குத் தலைவன் வண்ணான்; அவ னத்தியந்த

---

in the friendship of a hungry man, go to Priyadarisana and say "wretch, no more will Gangathatta return" Accordingly the lizard went back to the serpent and told him all this.

"In the same way," continued the monkey, "I will not again go to your house."

Hearing this, the crocodile said" If you do not come, then I shall be guilty of ingratitude. Therefore I will here starve to death on your account."

" As the fox," returned the monkey," got Neelseviyan to confide in him, and then destroyed him, so you wish to me."

"How is that" asked the crocodile; and the monkey related the story thus :—

" There dwelt in a certain forest a lion named Karalakesari. Being a little indisposed, he turned to the fox Dhusara and said, "Minister, I cannot this day go out, go yourself and bring me some prey." Thereupon the fox wandered in all directions and meeting an ass addressed him thus :—" Uncle, I bow to you. You have now become very thin."

" Nephew," replied, the fox, " what shall I say ? My master is a washerman. He is a down-right merciless wretch. He

கண்டகன்; என்மேற் பெருஞ் சுமைகளைப் போட்டுக் கொல்லுகிறதேயன்றி வயிற்றுக்குப் புல்லுச் செத்தைபோடுகிறதில்லை; புழுதியிலிருக்கு மறுகங் கட்டையைத்தின்று கொண் டிருக்கிறேன்; அது வுடம்புக் கெங்ஙனம் புஷ்டி கொடுக்கும்? என் பிழைப் பொருபிழைப்பா?" என, நரி "இப்படி இருந்தா னீ என்னோடு கூட வா; ஆற்றங்கரையிற் பச்சைப்பு னிரம்ப யிருக்குமிட முனக்குக் காண்பிக்கிறேன்" என, அதைக்கேட்டுக் கழுதை அவ்விடம் நன்றாயிருக்கும்; அங்கே நானொன்றியா யெப்படி யிருப்பேன்?" என, தாசரன் "மாமா! அங்கே புருஷனில்லாமல் விஸ்தாரமா யிருக்கின்ற பெட்டைக் கழுதைக ளவைகளுக்குத் தக்க புருஷ னகப்பட்டாற் கொண்டுவர வேண்டுமென் றெனக்குச் சொல்லி யிருக்கின்றமையா லுனக் குரைத்தேன்" என, அதைக்கேட்டாசையுற்றுக் கர்த்தபம் முன்னே போக, அதைக்கண்டு சிங்கம் பாய்ந்தவுடனே நீள்செவியனோட்டம் பிடித்தது. பின்னர் நரி கோபித்துக் கண்டீரவத்தைப் பார்த்து "இன்றைக் குன்வீரத்தை நான் பார்த்தேன்; உன்முன் னெதிர்ப்பட்ட கழுதையு மோடிப்போயிற்று; இனி நீ யானையை யெவ்வா றடிப்பாய்?" என, அதைக்கேட்டு கராளகேசரி தலையிறக்கமா யிருக்க, மீட்டும் நரி "மற்று மொருதரம் நானவனை யுன்னண்டை கொண்டு வருகிறே னிப்போதாயினு மேமாறாம லவனை

---

only overloads me, but never gives me any grass I live upon the roots of the grass that grows upon the dried soil. How can that give nourishment to the body? Is my living a living?" "If this be the case," rejoined the fox, "go with me I will take you to a spot on the banks of a river overgrown with green grass."

"That place," said the ass, 'may be good enough. But how can I remain alone there? ' Uncle," returned the fox, "a good many female asses live there. They are all without male companions. They have therefore asked me to fetch them male asses if suitable ones can be had. And I have informed you of the same"

The ass heard this, and hopefully followed the fox. And on going near, the lion sprang upon him. But directly Neelseviyan ran away. Then the fox grew angry with the lion and said "I have this day witnessed your heroism. Even the ass that you met effected its escape. How then can you strike the elephant." " On hearing this, Karalakesari hung down his head for shame, and the fox said again "I will bring him back to you. You must now take good care not to fail to strike him this time

அடிக்கவேண்டும்" என்று சொல்லி, நீள்செவிய னருகே போய் "நீயே னோடிப்போகிறாய்?" என, கழுதை மருமகனே! என்னை யிங்கோர மெமன்வாயிற் கொடுத்திருப்பாய்; அதிஷ்டத்தினாற் பிழைத்தேன்; வச்சிரம்போ னகத்தை யுடைய வப்பிராணி யார்?" என, அப்போது நரி நகைத்து "அம்மா னந்தப் பெண் கழுதை உன்னைப் பார்த்து மித மற்ற களிப்போடே யுன்னண்டை வருகை னீ வீணாய்ப் பயந்தோடினாய்; அவ ளிப்போது நீள் செவிய னென்னைக் கலியாணம் பண்ணிக்கொள்ளாவிட்டா லுயிர் வைத்தி ரேனென்று நிச்சயித் திருக்கிறபடியா னீ விரைவாய் வர வேண்டும்; வாராவிடிற் பெண்கொலை நேரிடுவதன்றிக் காம தேவனாலுஞ் சபிக்கப்படுவாய்; அவன் முத்திரை சர்வார்த்த சாதனமான ஸ்திரீ வடிவா யிருக்கின்றதை யவமானம் பண்ணுகிறவர்களைச் சடைச் சாம்பலாண்டி யாக்கிக் காம தேவன் காட்டி லனுப்புவான்" என்றிப்படி நரி யுரைக் கக்கேட்டுக்குண்டுக்கழுதை யதன் பின்னேபோகச் சிங்கந் தட்சணமே யடித்து "நண்டைச்சுட்டு நரியைக் காவல் வைத்தாற்போல" அதற்கு நரியைக் காவல்வைத்து நீரா டப்போக, இதற்குள்ளே நரி யதனீரலையுங் காதையுந் தின்றது. பின் சிங்கம்வந்து பார்க்கையி லீரலுங் காது மில்லாமையாற் சம்புகத்தைப் பார்த்து "இதையார் தின்

at least." So the fox got near Neelseviyan and asked him "why do you run away."

"Nephew," answered the ass, "you will have by this time put me into the jaws of death. I fortunately escaped. Who is that animal with claws like diamond" Then the fox laughed and said "Uncle, that female ass, on looking at you, felt immoderate joy and came near you when you needlessly took fright and ran away She is now resolved to give up her life if Neelseviyan does not marry her You must therefore go soon. Otherwise not only will the killing of a female be the consequence, but you will also be cursed by Cupid. His seal is impressed with the likeness of a woman that wins all; and whoever dispises it shall be turned by him into a beggar with matted hair and holy ashes and shall be driven to the jungle." Moved by this speech of the fox, the he-ass followed it, then the lion sprang upon him and killed him; and leaving the fox to take care of it, proceeded to bathe But it was as if "the fox is left to watch a roasted crab" For in the meanwhile the fox ate up the liver and the ears of the ass. The lion returned, and missing the liver and the ears, turned to the fox and asked "Who swallowed them." "The ass," said the fox, "had neither the

றது?'' "இக்கழுதைக் கீரலும் காதுமில்லை; இருந்தா லது மறுபடியு முன்னண்டை வருமா?" என, அது விதை யுண்மையென்று நம்பி நரிக்குள்ள மாம்சபாகங் கொடுத்து மற்றதைத் தின்றது. அப்படி நீ யென்னைக் கொல்ல விரும்புகிறாய்" என, முதலை "எவன் றன் பிரயோசனத் தைவிட் டுள்ளதைச் சொல்லுகிறானோ அவன் யுதிஷ்டிர னென்னுங் குசவனைப்போற் றுன்ப மடைவான்" என, வானரம் "அஃதெப்படி" என்று கேட்க, மகரஞ் சொல்லு கின்றது:—

"ஒரு குப்பத்தில் யுதிஷ்டிர னென்னுங் குயவன் பானைகளை யெடுக்கையி லோட்டாங்குச்சி யொன்று கபாலத்திற் றாக்கிக் கத்தி வெட்டுப்போற் காயப்பட்டது. பிறகு சிலநாட்கழித்துத் தேசத்திற் கருப்பு வந்தமையா லவன் மறுதேசத்திற்குப்போ யிராஜனிடத்திற் சேவகத்தி லமர, அவ்வரச னவ்வடுவைக்கண் டிவன் போர்க்களத்தின் முன்காயம் வாங்கின சூரனென் றெண்ணி யவனை மிகவு முபசரித் தவனிடத்திற் றயையா யிருந்தான். அது முதற்கொண்டு மற்றைச் சேவகர்க ளவன்மேற் பொறாமையா யிருக்கத் தலைப்பட் டிராஜன் றயை யிருந்தமையா லொன்றும் பேசாம லிருந்தார்கள். அப்படி யிருக்கையி லொருநா ளிராச னேகாந்தமாய் யுதிஷ்டிரனைப் பார்த்து "உனக்குக் கத்திவெட் டியாருடைய சண்டையிற் பட்-

---

liver nor ears. If it had, would it come to you again?" The lion took this for truth and was satisfied; and giving the fox his share of the flesh ate the rest himself." "In the same manner you wish to kill me"

Then the crocodile said "Whoever disregards his own good and speaks the truth comes to grief like the potter, Uthishtiran" On hearing this, the monkey asked what that was, and the crocodile spoke:

"In a certain hamlet, while a potter named Uthishtira was taking the pots, a potsherd fell upon his head and made an incision like the sword-cut. Sometime after, famine overtook the country and he went into another country where he took service under the king. Seeing the scar on his head the king took him for a hero who bore the brunt in the battle-field and treated him with great kindness and consideration. Thenceforward the servants began to be jealous of him, but as he was in the good graces of the king, they kept quiet. Meantime the king met Uthishtira one day in private and asked him "In what battle was this sword-cut inflicted on you?" "King," replied the

டது?" என, குசச்சேவகன் "ராசனே! நான் சூளைபோட்டுக்கொண் டிருக்கையில் விழுந் தோடுபட் டுக்காயம் பட்டது" என, இதைக் கேட்டமாத்திரத்தி லிராசனாணிக் குலாலனைப்பார்த்து "நான் மோசம் போனேன்; இது விரண்டாம்பெயர்க்குத் தெரிவதற்குள்ளே நீயோடிப்போ; சூரர்கள் கண்டா னீயுன்னுயிர் காணமாட்டாய்" என, குயவன் "சுவாமி! என் கைகால்களைக்கட்டி ரணரங்கத் திற்போட் டென் னஸ்த லாகவத்தைப் பார்த்தருளும், வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ வென்று சொல் லலாமோ?" என, ராசன் "நீ பிறந்தகுலம் போர்க்களத் தில் வருவதன்று; அங்ஙனமாக நீ நரிக்குட்டிபோ லேன் சும்மா துள்ளுகிறாய்? குலைக்கிற நாய் வேட்டை பிடிக் குமோ?" என, குலாலன் "இந்த நரிக்குட்டி யாரிடத்திற் றன்னைப் புகழ்ந்து கொண்டது; சொல்லுமையா" என, அரசன் சொல்லுகிறான்:—

"ஒரு வனத்திற் பெட்டைச் சிங்கத்தோடு கூடியி ருந்த சிங்கத்துக் கிரண்டு குட்டிக ளுண்டானவுடனே பல விலங்குகளைக் கொன்று தன்பெண்சிங்கத்தின் கையிற் கொடுத் ததைப் பார்த்து 'இப்பிள்ளைக்கு வினுத் தெரி கிறவரைக்கு மிவர்களை நம்பித் தனியே விட்டிராதே" என்று பத்திரஞ்சொல்லி, நித்தியந் தான்மாத்திரம் போய்

---

potter-servant, "while I was burning pots in the kiln, a potsherd fell on my head and caused this wound." The king was ashamed at this, and said to the potter "I have been deceived. Run away before it is known to a second person. If my heroes should come to know this, you would not live."

"Master," said the potter, "bind my hands and feet, and throw me into the field : and then observe the dexterity of my hands; can we say which is sour, the mouth or the mango?" Then said the king : "The family in which you have sprung does not make its appearance in the battle-field. Why then do you bluster in vain like the young of the fox? Can the barking dog hunt?" "Sovereign," asked the potter "please condescend to say before whom this young fox praised itself." And the king in reply spoke thus :—

"In a certain forest lived a lion in company with a lioness who bore him two whelps. Thereupon the lion killed many beasts and handing them over to the lioness warned her thus :— "Do not trust them so as to let these young ones go alone till they can speak." The lion, accordingly used to go alone himself,

மிருகங்களைக்கொன்று கொண்டுவந்து கொடுத்துக்கொண்டிருக்கையில், ஒருநா ளதற்கொன்றுங் கிடையாமற் றிரும்பிவீட்டுக்கு வரும்போது, வழியிற் கையி லகப்பட்டவொரு நரிக்குட்டியை யடியாமற் பிடித்துபெட்டையண்டைகொண்டுவந்து "இன்றைக்கு இதைவிட வேறொன்றுங் கிடைக்கவில்லை" என, இப்பெட்டை யக்குட்டி மிகவுஞ் சிறியதா யிருக்கிறதைப் பார்த்துத் தன் குழந்தைகளி லொன்றாய்க் காப்பாற்றிக்கொண்டு வருகையில், அம்மூன்றும் பெரியனவா யொருநாள் காட்டுக்குப் போனபோ தங்கொரு யானையைக்கண் டிதன்கிட்டப் போகலாகா தென்று சொல்லிவிட்டு நரிக்குட்டி வீட்டுக்கோடிப்போயிற்று. மற்றிரண்டு மதைப் பார்த் ததன் பின்னே வீட்டுக்கு வந்து தன் தாயுடனே யந்த நரியின் காரியத்தைச் சொல்ல, நரிகுட்டியதைக்கேட்டு மிகவுங் கோபித்து, "நானிவர்களிலுஞ் சௌரியத்திற் குறைந்தவனோ? இவர்க ளென்னைப் பழித்து நகைப்பானேன்? 'கூழுக்குமாங்காய் தோற்குமா?' நானிவர்களைத் தண்டித் தென் பராக்கிரமத்தைக் காட்டுவேன்; கொட்டினாற்றேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சியா?" என, அதைக் கேட்டுப் பெண்சிங்கம் நரியை யேகாந்தமாக யோரிடத்திற்கொண்டு போய் "நீ நரிகுட்டி, உன் குலத்தில் யானையைக் கொல்லுகிற சக்தியில்லை; உன்னை நானென் பால்கொடுத்து வளர்த்தமையா லிந்தப் பராக்கிரமஞ் சொல்லிக் கொள்ளுகிறாய்; இவர்க ளினி யுன்னை யின்னானென் றறிகிறதற்கு

kill animals, and bring them to the lioness. One day he could find no animal, and returned home; on his way, he met the young of a fox, which he took home alive to the lioness and said "This day, I cannot get anything but this." The lioness, seeing that it was too young, brought it up as one of her own whelps. The three grew up, and one day going into the forest, they met an elephant, and the little fox not daring to go near the elephant ran away home. Thereupon the other two followed the fox home, and related the fox's conduct to their mother. The little fox was much enraged at this and said "Am I inferior to these in valour? Why do they speak ill of me and laugh at me thus? Is the mango inferior to the pap? I will punish them and so display my prowess." The scorpion is a scorpion only when it stings, and a mere worm when it does not." Hearing this, the lioness took the young of the fox alone to some place and said "You are the young of a fox The power of killing the elephant does not exist in your race. As I have suckled you and brought you up you boast of your power. Run away now before they

முன்னே நீ புறப்பட் டோடிப்போ; இல்லாவிட்டா லவர்கள் கையி லடியுண் டிறந்துபோவாய்" என, அதைக் கேள்விப்பட்டவுடனே சம்புக மோடிப்போயிற்று. ஆதலானீ குசவனென்று வெளிப்படுவதன் முன்னே விரைவா யிதை விட்டுப்போ" என, அவனந்த ராசாவி னுத்தாரப்படி யோடிப்போனான்" என, இப்படி முதலையின் பேச்சைக் கேட்டுச் சுமுகன் "ஸ்திரீகளின் கிருத்திரம மொருவருக்குந் தெரியா தாகையா லவர்கள் விசுவாசத்தை நம்பலாகாது" என, முதலை "இது வெதினாற் சொல்லுகிறாய்?" என, வானரஞ் சொல்லத்தொடங்கிற்று:—

"தாராநகரத்திற் குடும்பத்தோடுகூட விருந்த சத்தியவிரதனென்னும் வேதியன் றன்மனையாட்டி யெல்லாரோடுங் கலகம் பண்ணிக்கொண் டிருக்கையா லவ னவள்மே லிருக்கிற மோகத்தினாற் றன் றேயத்தைத் துறந் தவளை யழைத்துக்கொண்டு தேசாந்தரம் போகையி லவ்வழியிற் பார்ப்பினி, "நாயகா! எனக்கு மிகவுந் தாகமெடுக்கின்றது; எங்கிருந்தாயினுந் தண்ணீர் கொண்டுவா" என, அவனவளை யங்கேயே வைத்து விட்டுத் தண்ணீர்க்குப் போய்வந் தவளிறந்து பிணமாய்க்கிடக்கிறதைப் பார்த்து மிகவும் புலம்பி வருத்தப்படுகையில் "உன் வயதிற்பாதி யிவட்குக் கொடுத்தாயானா லிவள் மீண்டெழுந்திருப்பாள்" என்று ஆகாசவாணி யுண்டாக, அதைக்கேட்டுப் பார்ப்பான் பவித்

---

know who you are, otherwise you will be struck dead by their hands." As soon as it heard this, the fox took the flight. Similarly before it is out that you are a potter leave this place quickly." "So said the king; and the potter, in obedience to the royal command ran away." Thus spoke the crocodile. Hearing these words of the crocodile, Sumuka said "The evil designs of women cannot be discovered by any one and therefore their friendship ought not to be trusted in." "How say you so" asked the crocodile. The monkey then began to narrate:—

"In the city of Tara, there lived with his family a brahmin named Sathiyavirathan. Seeing that his wife always quarrelled with the neighbours, he left his country, and induced by the love he had for her, travelled with her to foreign countries. On their way, the brahmin lady asked "Lord, I feel very thirsty, fetch me water from some place." Thereupon he left her there and went to get water. On his return, he found her a corpse, and was sorely sobbing, when a voice broke out in the sky "wouldst thou give half thy life to her, she should rise anew." Hearing

திரத்தோடே பாதிவயதை மூன்றுதர முச்சரித்துக் கொடுக்க, அதனாலவள் சீவித்தெழுந்துசலபானம் பண்ணினாள். பின்பொரு பட்டணத்திற்போ யிறங்கி யந்தணன் செலவுவாங்கக் கடைக்குப் போனபோ தங்கே யொரு முடவ னேற்றியாய்ச் சங்கீதம்பாட வதைக்கேட் டவள் மோகித் தவனருகிற் போய்ச் "சிநேகா! என்னை யங்கீகாரஞ் செய்; இல்லாவிட்டா லுனக்குப் பெண்கொலை வரும்" என, அதைக்கேட் டவன் 'இதோ முட வனுக்குக் கொம்புத்தேன் கிடைத்ததே' என்று பொங்கி யவள் கையைப் பிடித்துக்கொள்ள, அப்போ தவள் "இவ்வுடம்பையுனக் கர்ப்பணம் பண்ணினேன்; இனி நீ பயமில்லாம லென்னுடனே கூடவா" என, அப்படியே யம்மு வனவளண்டை யுட்கார்ந்திருந்தான். இதற்குள்ளே கடைச் சரக்குகள் வாங்கிக்கொண்டுவந்த அப்பிராமணனுக்குச் சமையல் பண்ணி யிலைபோட்டும் முடவனுக்குங் கொஞ்சமன்னங் கொடுக்கவேண்டு மெனச்சொல்லி, அவனுடன் பாட்டினு லிம்முடத்துக்கு அன்னங்கொடுத் திருவருஞ் சாப்பிட்ட பிறகு பார்ப்பனத்தி, "நாயகனே! நீ யென்னைத் தனியாகவிட்டுப் போம்போ தெனக்குத் துணையில்லாமையாலிம் முடவ னெனக்குத் துணையிருக்கட்டும்" என, அதைக்கேட் டந்தணன் "இம்முடவனை யெப்படிக் கொண்டு போகலாம்" என, அவள் நான் முதுகிற் கட்டிக்

---

this, the brahmin, with the grass-ring (on his finger) pronounced three times that he gave her half his life; and straight she got up alive again, and drank the water. Afterwards, they came to a town and the brahmin proceeded to the bazaar to make sundry purchases. Here a lame person was singing so well that she fell in love with him and going near him, said "Friend; accept my offer else you will be guilty of the killing of a woman."

On hearing this, he thought to himself thus: "Here now a lame man has attained the honey on the branch of a lofty tree." And thus puffed up, he laid hold of her hand, when she said: "I have resigned my body to you. Without fear accompany me." Accordingly the lame person sat by herside. In the meantime the brahmin returned with sundries, and the woman, who had by this time, prepared food and set the leaf for him for food asked him permission to give the lame man some food; and with his permission gave him food. After both of them had finished their meal, the brahmin woman said: "Lord, whenever you leave me alone, as I have no companion, let me have this lame person for one." "How can he be taken," asked the brahmin,

கொண்டு வருவேன்" என, நல்லதென் றவள் கபடத்தை
நிசமென் றெண்ணி யதற் குட்பட்டான்; பின்பவனைப்
புடைவையிற்சுற்றி முதுகிற் கட்டிக்கொண்டு நடக்கையி
லவ்வழியிற் பிராமண னிளைப்பாய்க் கிணற்றங்கரையிற்
படுத்துக் கண்ணசந்ததைப் பார்த்து, அம்முடவனிடத்
தாசக்தியினாற் புருஷனைத் துரவிலுருட்டிச் சனி தொலைந்
ததென் றம்முடவனை யொரு பெட்டியில்வைத்து நோ
வாம லெடுத்துக்கொண்டு தேசாந்திரம் போகையி லங்கே
சேவகர்க ளவடலைமேற் பெட்டி யிருக்கிறதைக்கண் டவ
ளைப் பெட்டித் தலையுடனே யரசன் சமுகத்திற் பிடித்துக்
கொண்டுபோய் விட்டார்கள். அப்போ தரசன் பெட்டி
யைத் திறப்பித்துப்பார்த் ததில் முடவனைக்கண்டு, "இவன்
யார்? என்ன செய்தி?" எனப் பார்ப்பினியைக்கேட்க, அவள்
"இவரென்பர்த்தா; இவர் நோயாளியா யிருக்கிறதினா லிப்
படித்தலையிற் சுமந்துகொண்டு போகிறேன்" என, அரச
னதைக்கேட் டவள் கற்புடைமைக்கு மகிழ்ந்து, இவ
ணமக் குடன்பிறப்பென் றெண்ணி யவளைத் தன்னிடத்தி
னிறுத்திக்கொண்டான். இங்கே யிப்படி யிருக்கையி லங்
கே யவ்வழியிற்போன வழிப்போக்கனொருவன் றாகத்துக்
குக் கிணற்றினுள்ளே யிறங்கினபோது விழுந்து கிடக்
கின்றவனைப் பார்த் திறங்கியெடுத்து வெளியே விட்டுப்
போக, அவனங்கே பங்குவையும் மனைவியையும் காணாம

---

"I will take him on my back" replied the woman.

Thereupon, mistaking her cunning for honesty, he gave this consent to it. Afterwards she wrapped him in her cloth, and carried him on her back. On their way, being fatigued, the brahmin lay down on the brink of a well, and closed his eyes in sleep. Now, inflamed by her love to the cripple she rolled her husband down into the well and being thus happily relieved of this heavy burden, put the cripple into a box, and without trouble carried him to the neighbouring town. There the watchmen seeing the box on her head led her into the king's presence with the box on the head. The king had the box opened, and finding the lame man in it, asked the brahmin woman who he was and what was the matter, and she replied: "He is my husband. As he is unwell, I carry him in this manner on my head." When he heard this, the king admired her chastity and considering her as one born with him kept her with him. While mattters stood thus, a traveller who went on his way, stepped into the well for quenching his thirst when he saw the person who had been drowned. He took him up, and went his way. Missing

லங்கே திரிந்து தேடிக்கொண்டு நகரத்திற்குள்ளே போ
னான். இவன் வருவதை யவ்விபசாரி பார்த்து வேந்தனு
டனே யிதோவருகிற விச்சண்டாள னென்பதிக்கு விரோ
தி" என்று முறையிட, அவ்வேந்தன் "இவனைப் பிடித்
துக் காவலில் வையுங்கள்" எனச் சேவர்கட் குத்தரவு
செய்ய, அவர்க ளப்படியே செய்யத் தொடங்குகையி
லவ னிறைவனைப்பார்த்து "ஓ அரசசிகாமணியே! நீர்
தருமகுண முள்ளவரா யிருக்கின்றீர்; ஆகலால் தேறவிசா
ரியும்" என்று தன் குறைகளை யெல்லாஞ் சொன்னான்.
அரசனதைக்கேட்டு ஒரு பஞ்சாயத்து நியமித் தவர்களா
லிப்பார்ப்பான் குற்றவாளியல்ல னவளே துஷ்டை யென்
றறிந்து, அவட்குத் தக்க தண்டனை செய்து வேதியனைச்
சமாதானம் பண்ணினான். ஆகலால் மாதர்க ளனர்த்தங்
கட்கு மூலமா யிருக்கின்றனர். விவேகிக ளவர்கள் பேச்
சுக்குக் காதுகொடுக்க லாகாது. அப்பேச்சுக்குக் காது
கொடுத்து முற்காலத்திலே நந்தனராஜ னென்பவனும்
வரருசியென்னும் பிரதானியும் சபாமத்தியிலே யவமா
னமடைந்தார்கள்" என, முதலை "அதெப்படி" என, வா
னரஞ் சொல்லலுற்றது:—

"பராக்கிரமசாலியான நந்தனராஜ னென்பவன் ராஜ்ய
த்தனம் பண்ணிக்கொண் டிருக்கையி லவன் மனையாட்டி

---

the lame man, and his own wife, Sathyavirathan sought them on all sides, and at last entered the town. The unchaste lady saw this man coming in, and complained to the king thus: "This foul wretch that is coming here is in ill terms with my husband." "The king then ordered his servants thus. "Lay hold of this man, and put him in confinement." The servants accordingly prepared to do so when he addressed the king thus: "O thou ornament of kings, thou art possessed of generous feelings. Kindly therefore make full enquiries." He then laid his whole complaint before him On hearing this the king appointed a panchayet, and satisfied himself that the bramin was innocent, but that she was a bad woman, and accordingly inflicted a suitable punishment on her and consoled the brahmin"

Thus women are at the bottom of dire mischiefs Wise men should not lend their ears to their words For, in days of yore by listening to their words, king Nanthana and his minister Vararuchi suffered disgrace in the open assembly. "So spoke the monkey; and the crocodile asked how it was. Then the monkey began to relate:—

"In the reign of the powerful king Nanthana, his wife for

யேதோ வொருகாரணத்தாற் பிணங்கிக் கொண்டதைக் குறித் தரச னெவ்வித சமாதானஞ் செய்துங் கேளாமல் "நீ வாயிற் கடிவாளம் போட்டுக்கொண் டென்முதுகின்மே லென்னை யெடுத்துக்கொண்டு குதிரைபோலக் கனைத்தா லுன் பேச்சிற்குச் செவிகொடுப்பேன்" என, அப் போது நிருப னவன் பிரீதிக்காகச் சொன்னவண்ணஞ் செய்ய, அதைப் பிரதானியின் மனைக்கிழத்தி கேள்விப் பட்டவளுங் கோபமாய்த் தன்பதியுடனே பேசாமன் முறுக்காயிருக்க, அவ்வேளையின் முழுது மறிந்தவனாகிய வரருசியென்னும் மந்திரி, தன் மனைவிக் கெவ்வித வாறு தல் சொல்லியு மவ ளுடன்படாமல் "நீ தலைமொட்டை யிட்டுக்கொண் டென்னை வலசாரி யிடசாரியாகச் சூழ வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணுவாயானா லுனக்கு நானுட்படுவேன்" என, மந்திரி யவள் பிடிவாதத்துக்காக வங்ஙனஞ்செய்து மறுநாளுதயத்திற் சபையில் வந்திருந்த வரசனிடத்திற்குப் போக, அரசன் பிரதானியைப்பார்த்து "நீ யெதற்காக முண்டனம் பண்ணிக்கொண்டாய்?" என, மந்திரி "மகாராஜாவவர்கள் குதிரையைப்போலக் கனைத்தபடியா லடியேன் மழுங்க மொட்டையிட்டுக் கொண்டேன்" என, இப்படி யிருவர்பேச்சையுங் கேட்டுச் சனங்கள் நடந்த செய்தியெல்லா மறிந்துகொண்டார்கள். ஆதலான் மாதர்களுடைய வநுசித வார்த்தைகளைக்கேட்டு மௌனமா யிருக்கவேண்டும்; அங்ஙனஞ் செய்யா தவ

---

some reason quarrelled with her husband, and would listen to no form of pacification tendered by the king. At length she said "If, with the bit in your mouth, you take me on your back and neigh like the horse, then will I listen to you." The king to please her did as she wanted. When the minister's wife heard this, she got angry also, and held tight without speaking to her lord. Then the minister Vararuchi, who knew all, used all means of reconciliation but she would listen to none till at last she said "If having your head smoothly shaven you go round me right and left and prostrate yourself before me, then will I listen to you". He did accordingly and pacified her stubbornness, and the next morning went to meet the king who had assembled in court. The king asked the minister "Why have you got yourself shaven smooth." The minister answered "As His Majesty the king neighed like the horse, I got myself nicely shaved." Thus the people heard the words of both and understood all that had transpired. "Therefore must you keep silence to the improper words of a women He who, on the

ரோடு மறுமொழி சொல்லுகிறவன் புலித்தோலைப் போர்த்
துக்கொண்டிருந்த கழுதையைப்போல் கிலேச மடை-
வான்" என, "அதெப்படி" என்று முதலை வினவ, குர
ங்கு விடை விடுக்கின்றது:—

"நருமதை யாற்றங்கரையிற் பவானியென்னு மோர்
ஏழைவண்ணான் றன்கழுதை தீனியில்லாமையால் நாளுக்குநா
ளிளைத்துப் போகிறதைக் குறித்து விசனப்பட்டுக்கொண்
டிருக்கையி லொருநா ளெதேச்சையாய்க் கிடைத்த புலித்தோ
லைக் கொண்டுவந்து களிப்புடனே யிராவி லக்கழுதைமேல்
போர்த்து ஊரார்பயிர்களின் மேய்விடுத்துக்கொண் டிருக்
கும்போது, குடிக ளிது புலியென்றெண்ணித் தோடிப்போ
வார்கள். இப்படி யிருக்கையி லிப்பெருவயிற்று மிருகம்
பெருத் தொருநாட் பயிரிற் றனியாக மேய்ந்து கொண்
டிருக்கும்போ தொருபெண்கழுதையின் கூச்சலைக் கேட்டு
மிகவும் பெருங்கூச்ச லிட்டுக்கொண்டிருந்தது, அப்போ துக்
கொல்லைக்கார னிது புலியன்றென்று நிச்சயித்துத் தப்
பிடித் திடுப்பொடிய வடித்தான்; ஆதலால் மாதர்களுட
னே வீணாகப் பேசலாகாது. இப்படி யிருக்கையி லிவ்வ
ளைக்குறித் தென்னைக் கொல்லவிருந்தாய். இது வுன்குற்ற
மன்று. விசுவாசகாதகம் பண்ணுதலுன்சாதிக்கே யியல்
பாயிருக்கின்றது. அது சாதுக்களின் சேர்க்கையாலும்
குணமாகாது. மேலும் துஷ்டர்களைச் சகவாசித்துப் பய

---

contrary, replies to her comes to grief just like the ass in the tiger's skin. Thereupon the crocodile asked what that was about, and thus the monkey answered.—

"On the banks of the Narbada a poor washerman named Bavani felt concerned to see his ass growing thinner and thinner day by day. One day he brought a tiger's skin, which he accidentally came by and joyfully covering the ass with it left it during the night to graze upon the crop of the villagers. They took it for a tiger and would flee in terror. Meanwhile this greedy animal grew very stout, and was one day devouring the grain in the field when a female ass brayed. Hearing this, he began to bray very loud too. Thereupon the owner of the field felt sure that it was not a tiger, and seizing it, beat it so that its back broke. "Therefore women ought not to be unnecessarily conversed with. In spite of this, you prepared to lay violent hands on me to satisfy your wife. This is no fault of yours. Treachery is the characteristic of your race. It will not be cured then by the company of the virtuous. Besides, no good results

னில்லை" என்றிப்படிப் பேசிக்கொண் டிருக்கை யிற்சலத் திலிருந் தொரு சலசரம் வந்து "உன் மனையா ளெதிர் பார்த்துக்கொண் டிருந்து பட்டினியா யிறந்தாள்" என, அந்த நாராசஞ் செவியி லேறினவுடனே முதலை "நான் கொடியோனாகலி னித்தன்மைய விடரி லகப்பட்டேன்; முத னண்பனுக்குப் பொல்லாதவ னானேன்; இரண்டா வது மனைக்கிழத்தியு மிறந்தாள்; வீடுங் காடாயிற்று; இல்லக்கிழத்தி யில்லாத வில்லஞ் சுடலையன்றோ? ஆத லான் மித்திரா! என்பிழையை மன்னி; நானுனக்குத் துரோகம் நினைத்ததனாற் றீக்குளிக்கிறேன்" என, இதைக் கேட்டு வானர மிவள்பேச்சினா னீ கொலைத்தொழிற் கேற்பட்டனையோ வவள் சாவைக்குறித் திப்போது நிலை சித் துயிர்விட நினைக்கிறாய்; அப்படிப்பட்ட துர்க்குணி யின் சாவுக்குக் களிக்கவேண்டும்; பதியைவிட்டுப் பிற னுக் குடம்பட்டிருந்ததனான் முன் னொருத்தியை நரியுஞ் சிரித்தது" என, அப்போது மகரம் "நரி யாரைப்பார்த்து நகைத்தது?" என, சுமுகன் சொல்லுகிறது:—

"சம்பகாவதி நகரத்திற் கிழவனாயிருந்த தேவதத்த னென்னு மொரு சாவுகாரியின் பெண்சாதி யந்நிய புரு ஷர்களிடத்தி லாசைகொண் டிருக்கையி லவ்வாவைக் கண்ட வொருவிட னவளைக்கண்டு "பெண்ணே! என்

---

from preaching to the wicked" While they were thus speaking, a fish came out of the water, and said "your wife waited for you and has now died for want of food" This sound got into the crocodile's ears like an iron nail, and he exclaimed, "As I am a cruel person, I have been subjected to this misery. In the first place I have become a traitor to my friend: next my wife has died. My house too has turned into a wilderness, for a house without the house-wife, is nothing but a burning ground. Therefore, friend, pardon my fault. As I designed perfidy to you I now fall into the fire." Hearing this the monkey said "Grieved at the death of her by whose words you engaged to commit murder you now think of destroying yourself. On the contrary, you must be happy on account of the death of that wretched woman. Once a woman who deserted her lord and embraced another lover was for that reason ridiculed even by the fox." Thereupon the crocodile asked "whom did the fox laugh at." Sumuka replied :—

"In the city of Sambakavathi an old money-lender named Dhevathathan had a wife who was in love with strangers. A gallant who had learnt this stealthy love addressed her thus :—

பெண்சாதி யிறந்தபடியினா னான் மிகவுந் துக்கித்துக்
கொண் டிருக்கிறேன்; நீ யென் றுக்கத்தைப் பரிகரித்தா
லுனக்குப் புண்ணியமுண்டு; உன்னைப் பார்த்து மிகவு
மானந்த மாயினேன்” என, அதைக்கேட்டவளு மனதி
லிங்ஙனமிருந்தா லென் கிழக்கணவன் பணத்தை யெடுத்
துக்கொண்டு நீயும் நானும் பரதேசத்திற்போய் வாழ்ந்
திருப்போம்” என, அவன் “இது மிகவும் நல்லகாரியஞ்
சொன்னாய்; நீ கணப்போதாகிலும் மட்டியில்லாம லிக்கா
ரியத்தின் முயற்சி செய்யலாம்” என? அப்படியே மறு
நாள் வெளிச்சேறும் வேளையில் வெகுதிரவியத்தை யெ
டுத்துக்கொண்டு சங்கேதப்படியே யிருவரும் தேசாந்தரம்
போகையைக்குறித் திருகாதவழி போனபின் அங்கே
யொரு பேராற்றைப் பார்த்தவளவி லவன், பின்னே யிவளை
யாராயினுந் தேடிக்கொண் டோடிவந்தாற் பணத்தையு
மவளையுங் கொண்டுபோகிறது மன்றி நம்முடைய ஜீவ
னையும் வாங்குவார்கள், ஆதலா லிவளைவிட்டுப் பொரு
ளைமாத்திர மேமாற்றிக் கொண்டுபோக வேண்டுமென்று
மனதிலேயே யாராய்ந்து நிச்சயித்துப் பின்பவளை நோக்
கி, “இந்நதி மிகவுங் கடினமானது; தண்ணீரும் நிரம்ப
வருகின்றது; ஆதலால் முன்னே பொருள்களையு மக்க
ரையில் வைத்துவிட்டுப் பின்புன்னை நோவாமற்கொண்டு
போய்க் கரைசேர்க்கிறேன்” என, அவள் “உன் மனதின்

---

“Woman, I am weeping over the death of my wife, If you console my grief you will be blessed. Your sight has enraptured me.” Hearing this, she said “If this be your wish then let us take my old husband's wealth, and go to live in a strange country.”

“Well have you said” replied the lover, “without a moment's delay you may exert yourself in this affair” Thus the next day at peep of light both took a large sum of money, and as agreed proceeded two kathams (twenty miles) to go to the neighbouring country. Here they met a large river. And now this thought struck him :—“If any body comes in pursuit of her, then not only will they carry her back with her wealth but will also take off my life. I must therefore leave her alone here, and cunningly make away with the money.” Thus determind at heart, he turned to her and spoke thus :—“This river is a very difficult one. Besides it is now full of water. I will therefore first take the goods to the opposite bank, and then take you without any trouble.” She replied “Do as you please.”

படிசெய்" என, பின் பவளிடத்திருந்த பணமுழுவதும் வாங்கிக்கொண்டு "என் பிரியநாயகி! உன் புடவையையு மவிழ்த்துக் கொடுத்தாயானா லுன்னை மறுபடியுங் கொண்டுபோதல் வருத்தமா யிராது" எனச் சொல்லி, அவளப்படியே அவிழ்த்துக்கொடுக்க வதையுங் கைக்கொண்டு, இவள் வெட்கத்தினா லங்கிங்கோடி யாரோடுஞ் சொல்லமாட்டா ளென் றெண்ணிக்கொண் டபகரித்த பொருள்களோடுகூடப் போய்விட்டான், பிறகவ ளதைப் பார்த்துத் தன்மனதில் வியாகுலித்து நான்செய்த வேலைக்குப் பல னுடனே தானே கிடைத்தது. இதை யக்கிழப்பிணை மறிந்தா லென்ன செய்யுமோ வென் றெண்ணிக்கொண்டு நாணத்தினாலே தண்ணீரிலிறங்கி யுட்கார்ந்துகொண் டிருக்கையி லோர் இறைச்சித்துணிக்கையை வாயிற் கௌவிக்கொண் டோடிவந்த நரி தண்ணீரினின்றுந் துள்ளிக் கரையில்விழுந்த மீனைப் பிடிக்க நினைத்து வாயிறைச்சியைப் பூமியிற் போட்டுக் கௌவப் போகையிலம்மீன் றண்ணீரிற் குதித்தது. நரி திரும்பி யத்தசையண்டை வருவதற்குள்ளே யதை யொரு பருந் தறைந்துபோக இதைப் பார்த்திருந்த வம்மாது சிரித்து "மாம்சமும் மச்சமும் போனபிறகு வானத்தைப் பார்த்தாலென்ன!" என அதைக்கேட்டுச் சம்புகங் குரோதத்தோடே "எனக்கு நேரிட்டதுபோலவே நீயு முன் பதியையுஞ் சாரனையு மிழந்

---

He then took all the money she had said "My dear sweet heart, if you take off your cloth and give it to me then it will not be difficult to take you to the bank afterwards She accordingly took of her cloth and put it into his hands. He received it and thinking that she would not now for shame go any where to report this matter to any body, ran away with the wealth misappropriated. Then she felt sorry at heart for what had happened and descended into the water for shame thinking thus: "I have soon reaped the fruits of what I have done. If the old goose know this, what will he do?" While thus she sat in the water a fox that came running with a bit of meat in the mouth threw the flesh on the ground in order to catch a fish that had jumped on the shore, and proceeded to mouth it when it jumped again into the stream. Before the fox could get back its meat, a kite swept it away. The woman who had been watching all this laughed and said "what can be derived by looking at the sky after the fish and the flesh had both disappeared." Hearing this, the fox resented and said. "As it has happened to me so, have you lost your husband and your lover. What do you think

இப்போது நிர்வாணத்தோ டென்னவெண்ண மிடுகிறாய்?" என, இப்படி யிருவர்க்கும் வாக்குவாதம் நடந்துகொண் டிருக்கையி லிஃதவள் கணவனுக்குத் தெரிந்தவ னவளை மிகவுந் தண்டித் தோட்டிவிட்டா னாதலா லந்தத் துஷ்டி யைக்குறித்துச் சோகமுறாமல் "முதலாய்! நீ யுன் சாலைக் குப் போ" என, மகரந் தன்வீட்டுக்குப் போனவிடத்தி லங்கே வேறொரு முதலை யிருக்கக்கண்டு, நம்மிடத்தையு மொருவன் கைக்கொண்டா னிதற்குச் சாம பேத தான தண்டங்களி லொருபாயஞ் செய்வதைக்குறித்து நம்மு டைய சிநேகிதனைவிடச் சொல்லுகிறவர்க ளில்லை, அவ னையே வினவ வேண்டுமென் றுறுதிசெய்து, மீண்டு நாவல்மரத்தண்டை வந்து சுமுகனைப்பார்த்து, "மித்திரா! 'பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடும்' என்றாற் போல வென் னபாக்கியத்தினா லென் வீட்டையு மொரு வன் பிடுங்கிக்கொண்டான்; இனிநா னென்னசெய்வேன்?" என்று முறையிட, வானரம் "நன்றிகெட்டவனே! எனக் குப் பொல்லாங்கு தேடின நீ மறுத்து மூட்டாட்டனமா யென்னிடத்துக் கேன் வந்தாய்? மூடனுக் குபதேசித்தா லவன் வீடுடையவனை வீடிழக்கப் பண்ணுவான்" என, முதலை "இதெங்ஙனம்" என, குரங்கு சொல்லத்தொடங் கிற்று:—

---

about in this naked form?" While both were thus disputing, the husband who had received this news came, and severely punished her and drove her away. "Therefore, crocodile! do not feel sorry for the wicked woman's death. Go back to your house." The crocodile returned home but finding another crocodile in his house began to reflect as follows:— another person has taken possession of my house, there is none but my friend to advise me as to which of the four political arts, *viz*, the conciliatory policy, the policy of spreading disaffection, the policy of bribing, and the policy of waging open war, can now be used with advantage. He alone must be consulted. Thus determinded he proceeded to the jumboo tree again and plaintively addressed Sumuka thus:— "Friend, the wounded foot is wounded again; the afflicted family is still more afflicted" so says the proverb. And in accordance therewith, to my misfortune another person has possessed himself of my house too. What shall I do now?" "Ungrateful wretch," replied the monkey, "you who worked my ruin, why do you foolishly come to me againg. If the fool be counselled then he will cause him who has a house to lose it." The crocodile wished to be informed how that was; and the monkey began to speak:—

"ஒரு மரத்தின்மேற் கூடுகட்டி யதில் வாழ்ந்துகொண்
டிருக்கின்ற விரண்டு தூக்கணங்குருவி யாலங்கட்டியுட
னே கூடப் பெருமழை பெய்கையிற் குளிரினாலே நளிர்
பிடித்துப் பல்லுக்கிட்ட நடுங்கிக்கொண் டொருமரத்த
டியிலொதுங்கி யிருந்து வருந்துகிற வானரத்தைக்கண்டு,
"உனக்குக் கால் கைகளிருந்துங், குளிர் காற்று முதலிய
துக்கத்தை ஐயையோ! நீ யேனனுபவிக்கிறாய்? நீ
யேன் வீடுகட்டிக் கொள்ளவில்லை?" என்றிரக்கத்தாற்
சொல்ல, இதைக்கேட் டத்துஷ்டக் குரங்கு "ஊசி
மூஞ்சி மூடா! நீ வல்லவனுக்குப் புத்தி சொல்லுகிறை
யா? எனக்கு வீடுகட்டுகிற சக்தியில்லை; அதைப் பிரித்
தெறிகிற சாமர்த்திய முண்டு; இதோபார்" என்றதன்
கூட்டைப் பிரித்தெறிந்தது. ஆதலாற் கீழானோர்கட் குப
தேசிக்க லாகாது" என, முதலை, "அன்பனே! நான் குற்ற
வாளி யென்பது மெய்யே; ஆயினும் பழைய சிநேகித
னாதலா லுன்னைக் கேட்கின்றேன்" என, வானரம் "நீ
யங்கேபோய்ப் பகையாளியோடு போர்செய்; மடிந்தாற்
சொர்க்கமடைவாய்; வென்றால் வீடடைந்து சுகமுறு
வாய்; முன்னொரு புத்திசாலி யுத்தமனுக்குக் கும்பிடும்,
சூரனுக்குப் பேதமும், காரியகாரனுக்குத் தானமும், ஈடா
னவனுக்குத் தண்டமுஞ் செய்தாற்போலச் செய்யவேண்

---

"Two brids lived in a nest on a tree; once a heavy shower of rain fell accompanied with hail-stones; and these birds saw a monkey that, being chilled with cold, and shivering so much that their teeth struck against one another, took shelter at the foot of a tree. Being much concerned they spoke to him thus: "You have hands and feet; why then do you suffer from the pangs of cold and blast, why have you not raised a house?" Hearing this the naughty monkey replied "Fool with needle like face, do you dictate counsel to a skilful persen? I cannot raised a house; but I can raze one. Look here" So saying he tore the nest and threw it away, Therefore low people ought not to be counselled." Then the crocodile said, "Fellow, true though it be that I am at fault, as you are my old friend, I consult you." And now in reply the monkey said: "Go there and fight with your enemy. If death ensues, heaven is attained; if victory is gained then you will recover your house and be happy. Formerly a wise man adopted, in the case of a virtuous person, submission; in the case of a hero, the policy of sowing disaffection; in the case of a business man, bribery; and in the case of an equal, war. You must now follow the same example." "How," inquired the

டும்" என, முதலை "அஃதெங்ஙனம்" என, சுமுகன் சொல்லலுற்றது:—

"இம்மலையின்மேற் சதுரனென்னு மொரு நரி பசியுடனே யங்கங்கே திரியுங்கா லொரு செத்த யானையைக் கண்டு, அதன் றோலைக் கிழித் திறைச்சியைத் தின்னும் வல்லமை யதற் கின்மையா லஃதங் குட்கார்ந் திருக்கையி லங்கேவந்த சிங்கத்தைக் கண்டு தண்டனிட, "அது நீயார்?" என, நரி நான்றங்க ளடியேன்; தாங்களடித்த யானையைக் காத் துட்கார்ந்திருக்கிறேன்" என, சிங்கம் "இது நான் கொன்றதன்று; வேறொருவன் கொன் றெறிந்தானோ அன்றித் தானாய் மடிந்ததோ வெப்படி யிருந்தாலு மதை நான் புசியேன்; இது வுனக்கு வேண்டுமானா லெடுத்துக் கொள்" என, நரி "சுவாமி! இது யோக்கியந்தான்; பெரியோர்க டம் மாண்மையாலே சம்பாதிக்கிறார்கள்" என, சிங்க மதைக்கேட்டு வேறொரு வனத்திற்குப்போகப் பின்னு மங்கே வந்த வொரு புலியைப்பார்த்து "அம்மான்! நீ இக்காலன் முகத்தி லேனெதிர்ப்பட்டாய்? இவ்வானையைக் கொன்ற மிருகேந்திர னிங்கே யாதொரு புலி வந்தா லதற்குத் தெரியாம லெனக்குவந்து சொல்லுவாயானா லதனைக் கொன் றெறிவேன்; நான் முன்னே யொரு யானையை யடித்து மூழ்கப் போனவிடத்தி லொரு

crocodile, " was this," and Sumuka proceeded as follows:—

" A hungry fox named Satura wandered about from place to place on yonder mountain and met an elephant's corpse. Not being able to tear its skin and take its flesh, he sat quiet there; when, a lion coming on, he bowed to it. The lion asked " who are you." The fox replied " I am thy majesty's slave. I guard the elephant thy majesty has slain." " I did not slay this," said the lion, " some one else must have cast it dead here, or it has died a natural death. However it be, I will not eat it. If you want it, take it "

"Master," replied the fox "this is very worthy of you Great men win by their prowess." Hearing this the line went way to another forest. Afterwards the fox met a tiger which happened to go there, and thus he spoke: "Uncle, why do you thus face death: The lordly beast that has killed this elephant has to'd me this: "if any tiger, come here, inform me without his knowledge, and I will kill him. Some time ago when I struck an elephant down and proceeded to bathe, a tiger touched

புலி யதை யெச்சிற் பண்ணிற்று; அது முதலாகப் புலி
யைத் தேடிப்பார்த்து மகப்பட வில்லையென் றென்னுடன்
சொல்லியிருக்கிறான்" என, புலி யச்சிங்கத்தி னுத்தர
வைக்கேட்டு மிகவும். பயந்து "மருமகனே! எனக்குப்
பிராணதானங் கொடு" எனச்சொல்லிக்கொண்டே யோ
டிப்போயிற்று. மறுபடி யொரு வானரத்தைக் கண்டு
முன்னேவந்த துஷ்டனைக் கும்பிட்டுப் போக்கினேம்;
இரண்டாமவனைப் பேதித்தோம்; இப்போ திதன்கையா
லிதைக் கிழிப்பிக்க வேண்டுமென் றிப்படித் தன்னுள்ளே
நிச்சயித்துப் பின்பு "வானரா! நீ நெடுநாளைக்குப்பின்பு
வந்தாய், மற்றும் பசித்திருக்கிறாய்; எனக்குச் சிங்கங்
கொடுத்த விவ் வானையிறைச்சியை நீ கொஞ்சந் தின்று
சிங்கம் வருவதற்கு முன்னே சீக்கிரமாயோடிப்போ" என,
குரங் கதைக்கேட்டு யானையைக் கிழிக்க, அதைப்பார்த்து
நரி "வானரா! சிங்கஞ் சமீபத்தில் வந்தது; இனி நீ
விரைவி லோடிப்போ" என, அதைக்கேட்டுக் குரங்கு
பறந்தது. பின்பது பிளந்துவைத்தி ருந்த மாம்சத்தை
நரி தின்னுகையி லங்கேவந்த வேறொரு நரியைச் சண்
டையிட்டுத் துரத்தித் தான் வேண்டுமட்டு மிறைச்சிக
ளைத் தின்றது. ஆதலா னீ யம் மகரத்தைக்கொன் றுன்
வீட்டிற் சுகமா யிரு வேறொரு தேயத்திற் சௌக்கிய
மெல்லாங் கிடைக்குமாயினுந் தனக்குச் சிநேக மங்

---

it with his mouth. From that time I have been seeking the tiger, but it cannot be found.. " The tiger heard the lion's mandate and flew away in terror saying, "Let me be granted my life." And now the fox met a monkey when these thoughts passed in his mind. " The first I bowed to and sent away; the second I confused; and now this third person must be got to tear the elephant" Having thus made up his mind the fox, addressed the monkey in the following way: " Monkey, it is now many days since you came here, besides you seem hungry- Take a little of this elephant's flesh which the lion has presented to me, and before the line returns run away quick." Thereupon the monkey tore the elephant, when the fox exclaimed "Monkey the line is come near, make haste, and run away." Then the monkey flew away. afterwords as the fox was feasting on the flesh in the portion torn by the monkey there came in another fox wich he fell out with, and drove away, and then took as much flesh as he wanted." Therefore kill that crocodile and be happy in your home. Though in a foreign country, you may command every comfort you want, yet if you have n

கொருவனு மில்லாவிட்டாற் சித்திராங்கன்போற் றீங்குக ளனுபவிக்க வரும்" என, முதலை "சித்திராங்கனுக் கெப்படி யவஸ்தை நேரிட்டது" என, வானரஞ்சொல்லத் தொடங்கிற்று:—

"அயோத்தியா நகரத்திலிருந்த சித்திராங்கனென்னு மொரு நாய் பஞ்சத்திறைற் சோறு கிடாமல் மறுதேயத்திற் சென்றொரு கிருகஸ்தன் வீட்டுக்குப்போ யவ் வீட்டுக்காரி சோறுபோட் டாதரித்ததனு லன்றுமுதல் வெகு நாள்வரைக்கு மங்கே யிருந் தொருநாட் சகசமாய் வீட்டுக்கு வெளியே வந்தது. வந்தவுடனே யவ்வூர் மற்றை நாய்களிதன்மேலே விழுந் தநேகவிடத்திற் கடித் ததனுதிர மாம்சங்களை வெளிப்படுத்தினதினும் சித்திராங்கன் மிகவும் துக்கமடைந் தென்ன பஞ்சம் வந்தாலுஞ் சுவயதேசத்தை விட்டுவரலாகாதெனத் தனக்குட்டேறி மீண்டு மயோத்திக் கோடிவந்தமாத்திரத்தி லதற் குறவாகிய நாய்கள் "சித்திராங்கா! அத்தேய மெப்படி யிருக்கிறது?" என, சித்திராங்கன் "அத்தேயஞ் செழிப்பா யிருக்கின்றது; மாதர்களுந் தயாசாலிகளா யிருக்கிறார்கள்; சகாதி

---

friend there, then you will suffer just like chitranga." Thus ended the monkey when the crocodile desired to be informed how Chitranga had to suffer, and the monkey resumed:—

"In the city of Oude there lived a dog of the name of Chitranga. A famine came on, and the dog was forced for want of food to go to the neighbouring country. There he stayed in the house of a married man whose wife gave him food, and took good care of him. He continued to live there for a long time till one day he got out of the house as usual. Immediately the other dogs in that place attacked him and bit him, in several places so that blood and flesh came out. Thereupon Chitranga was much aggrieved and concluded thus: "Be the famine ever so severe, one should not leave his home." He therefore returned to Oude.

"Chitranga," asked his friends in Oude, "how is that land?" "That land," replied he, "is fruitful. The women too are

மித்திரத்துவமில்லை; ஆதலா லிவ்வவஸ்தை நேரிட்டது" என்றது. ஆனதுகொண்டு தன்னிடத்தி லிருப்பதுபோலச் சுகம் வேறில்லை யென்கின்றேன்" என, முதலை யவ்வார்த்தைகளைக் கேட்டுப்போ யவ்வண்ணமே யெதிரியுடனே பொரு ததன்வீட்டை மீட்டுக்கொண் டங்கேயே வாழ்ந்திருந்தது. ஆதலாற் பராக்கிரமத்தினாற் பாக்கியம் வழிதேடி வந்தடைகின்றது.

---

kind and merciful. But there is no hospitality amongst our kinsmen. Hence this misery." Therefore, there is no happiness equal to that of living in one's own native land.' Thus concluded the monkey.

Upon hearing these words, the crocodile accordingly waged war with the foe and regained his house where he lived happily. Fortune therefore of its own accord finds its way to and favours the powerful and the brave.

---

கடவுள் துணை.

# பஞ்சதந்திரம்.

## அரும்பதவிளக்கம்.

**Page 1.**

பேறழிவு - பெற்றது அழிந்துபோதல்.

சோமசன்மா - சோமனென்னும் பேருள்ளவன்.

இடருற்றகாலை - துன்பம் நேரிட்டபொழுது, இடர்—துன்பம்.

அறிவுகுன்றாதவன் - புத்திகுறையாதவன்.

எவ்வண்ணம் - எப்படி.

சொல்லலுற்றனன் - சொல்லத்தொடங்கினன்.

சுமுகன் - நல்லமுகமுள்ளவன்.

வானரம் - குரங்கு.

கிருகம் - வீடு.

அத்தியந்தசந்தோஷம் - மிகுந்த சந்தோஷம்.

நானாவார்த்தைகள்-பலபேச்சுகள்.

**2.**

அந்நியோந்நியமாய் - ஒன்றுக்கொன்றாய், மிகவும் பிரீதியாய்.

அமிர்தம் - தேவர்களின் உணவான ஒருபொருள்.

மூப்பு - கிழத்தனம்.

சாக்காடு - மரணம். (காடு—தொழிற்பெயர்விகுதி.)

முசலி - முதலை.

நட்டோன் - சிநேகிதன்.

அகத்தியம் - அவசியம் வேண்டியது.

காதலியே - ஆசையையுடைய பெண்ணே. காதல்—ஆசை.

சகோதரன் - கூடப்பிறந்தவன், (சக - ஒன்று, உதரம் - வயிறு.) ஒருவயிற்றிற் பிறந்தவன் என்பது பொருள்.

அடம் - பிடிவாதம்.

**3.**

ஜீவன் - உயிர்.

கரா - முதலை.

இருதலைக்கொள்ளி எறும்பு - இருபுறத்திலும் நெருப்புக்கு மத்தியில் அகப்பட்டுக்கொண்ட எறும்பு.

**4.**

மகரம் - முதலை.

ஆதீனம் - வசம்.

நறுங்கனி - உருசியுள்ளபழம்.

தீங்கனி - தித்திப்பான பழம்.

தினம் - ஒருநாள், இங்கு நாள்தோறும் என்னும் பொருளில் வந்தது.

கேவலம் - கலப்பில்லாத

**5.**

வெறு இருதயம் - ஈரமில்லாத இருதயம்.

கிலேசப்பட - துக்கப்பட

காலன் - யமன்.

நாணுதல் - வெட்கப்படுதல்.

**6.**

பிரியதரிசனன் - இஷ்டமானபார்வையுள்ளவன்.

கங்காதத்தன் - கங்கையால் கொடுக்கப்பட்டவன்.

வலியர் - பலமுள்ளவர்.

## 7.

மாந்திரிகன் - மந்திரம் கற்றவன்.
பரமசத்துரு - மிகுந்த துவேஷி.
விபரீதபாஷணம் - விரோதமான பேச்சு.
சன்மசத்துரு - பிறப்பிலேயே பகைவன்.
அநாயாசமாக - வருத்தமில்லாமல் (ஆயாசம் —வருத்தம்.)
ஆலசியம் - தாமதம்.
வலிய வந்த - தானாக வந்த

## 8.

ஸ்ரீதேவி - செல்வம்.
பிலம் - பாழி.
சமுதாயம் - கூட்டம்,
இடும்பை - துன்பம்.
சூழ்ச்சி - உபாயம்.

## 9.

அன்னதாதா - உணவு கொடுப்பவன்.
பிதா - தகப்பன்
கூபம் - கிணறு.
துரோகம் - வஞ்சனை.

## 10

கவுளி - பல்லி.
நன்றி - செய்த உபகாரம்.
நீள்செவியன்-நீண்டகாதை யுடையவன்.
அடவி - காடு.
கராளகேசரி-பயங்கரமான பிடரி மயிரை உடையது.
தூசரன் - கொஞ்சம் வெண்மை நிறமுடையவன்.
மருமகன்—மாமன், மருமகன் என்பவை ஒப்பாரியில் கொள்ளப் பட்டன.

## 11.

கண்டகன் - துஷ்டன்.
கர்த்தபம் - கழுதை.
கண்டீரவம் - சிங்கம்.

## 12.

வச்சிரம் - வச்சிராயுதம், தேவேந்திரன் கையி லிருக்கும் அதிக கூர்மையான ஒரு ஆயுதம்.
காமதேவன் - மன்மதன்
சர்வார்த்தசாதனம்-எல்லாப்பொருளையும் கொடுக்கத்தக்கது.
சம்புகம் - நரி.

## 13.

மாமிசபாகம்-மாமிசத்தின் பங்கு.
யுதிஷ்டிரன் - சண்டையில் சலியாமலிருப்பவன்.
கபாலம் - தலை ஓடு.

## 14.

குலாலன் - குயவன்.
ரணரங்கம் - யுத்தபூமி.
அஸ்தலாகவம் - கைசமத்காரம்.
வினை - வினைவும்வகை.

## 16.

இருத்திரமம் - சூது.
சத்தியவிரதன் - உண்மையான விரதமுடையவன்.
மனையாட்டி - மனையாள்
மோகம் - அதிக ஆசை.
பார்ப்பினி - பிராமணஸ்திரீ.
ஆகாசவாணி - ஆகாயத்தில் கண்ணுக்குத் தெரியாத உருவத்தினின்றும் உண்டாகிற வார்த்தை.
பவித்திரம் - மந்திரம் ஓதும்போது கையில் அணிந்துகொள்ளும் தர்ப்பைப் புல்லினால் முடிந்த தொரு முடி.

## 17.

சலபானம் - தண்ணீர் குடித்தல்.
நேற்றி - நேர்த்தியென் றிருக்க வேண்டியது.
அர்ப்பணம் - தானம்.
ஐயம் - சந்தேகம்.

உடன்பாட்டினால் - ஒப்புக்கொள்ள

பார்ப்பனத்தி - பார்ப்பாத்தி.

18.

கணைசந்தது -
ஆசக்தி - ஆசை.
பங்கு - முடவன்.

19.

விபசாரி - அன்னிய புருஷனைச் சேருபவள்.
சண்டாளன் - பறையன், இங்கே கொடியனுக்கு வந்தது.
அரசசிகாமணியே - ராஜாக்களுக்கெல்லாம் சிகாமணிபோலிருப்பவனே; சிகாமணி - தலையில் அணியும் ரத்தினாபரணம்.
பஞ்சாயத்து - நியாய விசாரணை செய்வதற் காகக் கூட்டும் கூட்டத்தார்.
அநர்த்தம் - பெருங்கேடு
வாருசி - நல்லவற்றின்மேல் உருசியுள்ளவன்.
ஏளனம் - பரிகாசம், நிந்தை.

20.

பிணங்குதல் - கோபித்தல்.
நிருபன் - அரசன், மனிதரைக்காப்பவனென்பது பொருள்.
மனைக்கிழத்தி - மனையாள், கிழமை—உரிமை.
ஆறுதல் - சமாதானம்.
வலசாரி - வலது பக்கமாய்ப் போதல்.
இடசாரி - இடதுபக்கமாய்ப் போதல்.
சாஷ்டாங்க நமஸ்காரம் - எட்டு அங்கங்களும் தரையில் படும்படி தண்டனிடல், எட்டு அங்கங்களாவன: இரண்டு கால், இரண்டுகை, இரண்டுதோள், மார்பு, நெற்றி இவைகளாம்.

முண்டனம் - மொட்டை யடித்தல்.
அநுசிதவார்த்தை - தகாதபேச்சு.
மௌனம் - பேசாமை.

21

கிலேசம் - துன்பம்.
விடைவிடுத்தல் - உத்தரவு கொடுத்தல்.
பெருவாயன் - பெரியவாயை உடையது, கழுதை - (இங்கு வா யென்பது கூச்சலுக்கு.)

22.

சலசரம் - நீரில் சஞ்சரிப்பவை, மீன் முதலியன.
நாராசம் - சலாக்கு, இங்கு அது போன்ற பேச்சு.
இல்லக்கிழத்தி - இல்லாள்.
சுடலை - சுடுகாடு.
திக்குதிக்கிறேன் - தீயில் குதிக்கிறேன்.
சம்பகாவதி - சம்பகங்களை யுடையது.
சாவகாசி - பெரியவர்த்தகன்.
அவா - ஆசை.
விடன் - வேசிமார்க்கத்தில் திரிபவன்.

23.

பரிகரித்தல் - போக்கடித்தல்.
வெளிச்சேறும் வேளையில் - வெளிச்சம் ஏறுகிற காலத்தில், உதய காலத்தில்.

24.

அபகரித்த - பிடுங்கிக் கொண்ட.
வியாகுலித்து - விசனப்பட்டு.
மாது - பெண்.
குரோதம் - கோபம்.
சாரன் - விபசாரபுருஷன்.

25.

நிர்வாணம்-அம்மணமாயிருத்தல்.

முதலாய் — முதலே யென்பதின் விளி.

சாகை - இடம்.

**26.**

களிர் - நடுக்கம்.

பல்லுக்கிட்ட - பல்லுகள் ஒன்றோ டொன்று கிட்டிக்கொண்டுபோம்படி.

கும்பிடு - கும்பிடுதல்.

**27.**

இன்மை - இல்லாமை.

அம்மான்-பெரியவனே, மாமனே.

மிருகேந்திரன் - சிங்கம்.

**28.**

பிராணதானம் - பிராணனைக்கொடுத்தல்.

**29.**

பஞ்சம் - கருப்பு.

கிருகஸ்தன் - இல்லறத்தான்.

சகசமாய் - இயற்கையாய்.

**30.**

தயாசாலிகள்-தயையுள்ளவர்கள்.

சுசாதிமித்திரத்துவம் - தங்கள் ஜாதியாரிடத்தில் சிநேகமாயிருத்தல்.

பொருது - சண்டையிட்டு.

---



கடவுள்துணை.

# பஞ்சதந்திரம்.

# PANCHATANTRAM.

## ஐந்தாவது—V.

## அசம்பிரேக்ஷிய காரித்துவம்

அல்லது

## ஆராயாதுசெயல்.

## DOING THINGS INCONSIDERATELY.

சோமசரும னரையன் மக்களை நோக்கி "யாவ னொருவனுடைய தீச்செயல்களைக் கண்ணுற்றாயினுஞ் செவியுற்றாயினு மறிவுடையா னதைப்புரியலாகாது. அங்ஙனமாகையில் வெள்ளறிவ னென்னும் பெயரிய வொருமயிர்வினைஞன் மணிபத்திர னென்போனது கருமங் கண்டுழித்தேரும லங்ஙனம் புரிந் திடருற்றனன்" என, அதைக் கேள்வியுற்ற விளங்குமரர் "அஃதெவ்வா றியம்புதி" என வினவ, ஆசிரிய னுரைக்கலாயினன்:—

"அவாசிக் கண்ணதாய பைடணபுரி வாசியாகிய மணிபத்திரனென்போ னென்னெறிபற்றி யொழுகலா னுளதாய நல்குரவாற் பரிபவமுற் றிவ்வறுமை கெட்டது, சீச்சீ! தயை சாந்தி முதலாகிய குணங்கள் பொருளில்லாதாரிடத்தில் விபரீதமாகத் தோன்றுகின்றன வென்று

---

Said Somasarma to the princes: "By merely looking at or hearing of the evil deeds of another, a wise man ought not to do the same or the like himself. This being so, a barber named Vellarivan observed the action of one Manipatran and inconsiderately did the like himself, and brought himself into trouble." Thereupon the young princes asked "say, how that was", and thus the tutor spoke:—

"Manipatra, who lived in Paidanapuri in the south, led a virtuous life and was thereby reduced to poverty. Thus degraded in position, he thought in the following manner:—" Pshaw! Pshaw! poverty is detestable. Generosity and gentleness in those who are destitute of wealth, are misinterpreted and their

கணந்தோறு மாகுலித்துக் குடும்பப் பாதுகாப்பி னேக்
கத்தினா லறிவு மழுக்கமடைகின்றது; தானிய முதலிய
பொருளிலாவீ டிடுகா டொக்கும்; அவன் கல்வி முதலிய
குணச்சிறப் புற்றோனாயினு மனித ரெண்ணிக்கையிலுறான்;
இங்ஙனம் பலவகைத்தாய கவற்சி மிடிமையினா லெய்து
கின்றது; ஆகலான், பட்டினியிருந் துயிர்துறப்பலெனத்
துணிந்து மணிபத்திரன் கண்வளர்கையில், பதுமநிதி நீத்
தோன் படிவமா யவன் கனவி லடைந்து, யானுன்
னொழுக்கத்தாற் கட்புலனாக நாளை யிவ்வுருவத்தோடு
வருவேன். அப்போழ் தென்சென்னிமேற் றண்டத்தாற்
புடைப்பையாயின் யான் குன்றாப்பொற்குவை யாவேன்"
எனக்கேட் டவன் றுயிலொழிந் திக்கனவு வுண்மையோ
வன்றே லிஃதெப்போழ்து மெனக்குளதாய பொருட்சிந்
தையின் றோற்றமோ வென் றிங்ஙன மறுநாட் கருதிக்
கொண் டிருக்குங்கா லிரவிற்கண்டாங்கு வந்த வந்நீத்தோ
னைக் கண்டு நிகழ்ந்தகனவு மெய்யெனத் துணிவுற் றவன்
சிரமே லோர்தண்டங்கொடு தாக்க, அவன் பொன்மயமா
யொளிவிட்டு நின்றமையா லொன்றிற் பொதிந்து வீட்
டில் வையாநிற்புழி, அவனில்லாட்கு நகங்களைந்துகொண்
டிருந்த மயிர்வினைஞனை நோக்கி, "உனக்குச் சிறிதருத்தந்
தருவேன், இவ்வற்புதத்தை யெங்கணுஞ் சிறிதும் புலப்

---

mind is in consequence ever ill at ease; and their intellect grows blunt with an anxiety for the support of the family. The house that is destitute of grain and other sources of wealth resembles the burial ground. He is not counted with human beings though he may excel in learning and other virtues. Many concerns of this nature spring from poverty. I will therefore starve myself to death". Thus determining in himself Manipatra went to sleep. Then the God of wealth appeared to him in his dream in the guise of an ascetic and said "By the merit of thy virtue, to-morrow will I appear before thee in this garb. Strike me then on the head with a cudgel, and I wil become an inexhaustible heap of gold." Awaking from sleep the next morning, he was brooding over the dream thus: "Is this to be realised; or is it merely the apparition of my anxious desire for wealth?" When suddenly came before him the ascetic he had seen the previous night. He accordingly felt assured that his dream would be realised, and struck him on the head with a cudgel; and straight the ascetic stood a heap of brilliant gold. He secured it in his house, and turning to the barber, who was then paring his wife's nails, said in strong terms. "I will give you some money. Do not reveal this wonder to any one." He

படுத்தற்க" என வற்புறுத்தி விடுக்க, அவன் "அந்நெறி நிற்பல்" என மேற்கொண்டு, வீட்டிற்சென் றறிவின் சிறுமையாற் றன்னு ளாராய்வா னாயினன். வைகறையி லொரு துறவியை யழைத்துவந் தன்னோன் மண்டையிற் கோல் கொண் டறைவன், அவன் சுடர்விரி பசும்பொனுருவெனத்தேறி, மற்றைநாட் டுறவிகள் குழுவிற்சென்று மிக வணங்கி "நீவி ரெத்திறத்தோர்க்கு மறிவுணர்த்திக் கரையேற்று நிற்கின்றனிர்; மற்று மெவ்வெவ ரில்லத்தும் பிச்சைக் கேகாநிற்கின்றீர்; ஆதலா லித்தின நாயினேன் சிறுகுடிலுக்குத் தேவரீர் திருக்கூட்டத்தோ டெழுந்தருள்வீராக" என, அவர்களிற் றலைவ னிம்மாசுதீர்ப்போனை நோக்கி, நாடோறு மந்தண ருன்மனைக்கு வராநிற்க, நீ யிற்றைக் கெமக்கே னியம்புகின்றனை? அவ்வேதியரை யழையாய்" என, அக்காலை நாவிதன் "நும்மாட்டுப் பேரறச்செயல்க ளிருக்கின்றமை யானறிகின்றேன், ஆதலா னீவி ரென்வேண்டுகையை யெட்டுணையு மறுமற் றிருவுளம் வைத்தருள்வீர்" எனப் பணிவாக மொழிந்து, அவர் கரத்தைப் பற்றி யில்லிற் கொடுவந் தம்முனியின் கபாலத்தி லுலக்கையாற் சாத்தினவளவி லவன் களைத்து நிலத்தி லடியற்ற பனைபோல் வீழ்ந்தனன். இதற்குட் டபசிக்குழாம் வந்து மெய்ம்மறந்து கிடக்கின்றவனைப் பார்த்

---

undertook to do so, and went home. Afterwards being light of prudence he began to consider in the following manner. "At dawn of day, I will bring home an ascetic, and beat him on his head with a cudgel. He will turn bright yellow gold." With this resolution he repaired next day to the company of ascetics and addressed them humbly thus :—"You teach wisdom to persons of all ranks, and redeem them from their sins. Further you visit the houses of all persons indiscriminately and take alms. Therefore I entreat you will condescend this day to visit with your company of holy sages my humble and lowly cottage." Then the chief of the ascetics spoke to the barber, "While Brahmans daily visit thy house, why dost thou invite us to-day? Go thou, and invite those Brahmans alone."

"Then" replied the barber humbly, "I see in you the presence of great virtuous deeds. Would you graciously favor me with granting my request without refusing it in the least degree." He then led the sage by the hand to his house, and struck him on the head with a pestle. Immediately the sage fainted and fell on the ground like a palmyra cut up at the root. Meanwhile, the crowd of sages came, and burst out in wild cries

தளவிற் பேரிரைச்சலிட, இக்கலிபலியை யவ்வூராள்வோன் காலாட்கள்கண் டாண்டெய்தி யந்நாவிதனைப் பிணித்துத் தன் றலைவன்பாற் கொடுபோய்விட, அவ்வூராளி மஞ்சிகனை நோக்கி "இஃ தென்செய்தனை?" என உறுக்கி வினவ, அம்மங்கலன் "மணிபத்திர னகத்துக் கண்டாங்கு யான்செய்தனன்" என, அத்தலைவ னவ்வணிகனை விளித்து "உன்பா னிகழ்ந்த தென்னையோ?" என, அவ னொன்று முரையாதிருந்தனன். அதன்மே லதிகாரத்தலைவ னம்பட் டனைப் பார்த்து, "இவ னாராயாம லிக்கருமம் புரிந்தன னாதலா லிவனைக் கழுவேற்றுக. இங்ஙன முன்னொரு பார்ப் பினி பராமரிசியாம லியற்றின கருமத்தான் மூங்காவைக் குறித் தாகுலித்தாள்" என, மணிபத்திரன் "இஃ தெங் ஙன மருள்வாய்" என, அவ்வூராளி சொல்வானாயினன்.—

"உச்சயினிபுரத்தில் வதிந்த தேவனாம வேதியனென் போன் மனையோ டில்லற நடாத்துநாளிற் குழவியில்லாக் குறையா லிருவரு மோர்கீரிப்பிள்ளையை மைந்தனைப் போற் கருதி வளர்ப்புழி யொருமக வுண்டாயிற்று. அம் மதலையை யோர்நாட் டூங்குவித்துக் கணவனைப் பார்த்து "யா னுதகத்தின் பொருட்டுச் செல்லாநின்றேன், நீர் நம்

---

at seeing the sage lying senseless. This uproar reached the ears of the servants of the ruler of that city, and they instantly repaired to the spot, fettered the barber, and took him to their master. The ruler asked the barber angrily in a threatening tone " What is this thou hast done ?" " I did as I saw in Manipatra's house" said the barber.

Thereupon the ruler sent for the merchant Manipatra and asked him " what was it that happened in thy house? " He made no answer. Then the ruler referring to the barber ordered thus : "This barber here has done this act without due consideration. Therefore impale him. Formerly a brahman woman by acting inconsiderately, as in this instance, fell into grief on account of a mungoose."

" Would you kindly say how this was" asked Manipatra. And the ruler of the city spoke thus :—

" In the city of Oojien there lived with his wife a brahman by name Devanamavethiyan, attending to the duties of the domestic state. They were childless and brought up a mungoose as fondly as an offspring. By and by a child was born. One day the wife lulled the child to sleep and addressed her husband thus : " I am going out to fetch water. Take care of our darling.

கான்முளையைப் பார்த்திரும், ஓர்வேளை கீரி கடிக்கும்” என் றிங்ஙனம் வகுத்துத் தண்ணீர்க்குச் செல்ல, பின்னரக்குழந்தை தொட்டிலிற் கண்வளர்ந்தது. அவ்வந்தணனு மோர்தடாககரும வயத்தனாய்ப் புறஞ்செல்ல, அத்தருணத்தி லொருகிருஷ்ணசருப்பம் பிலத்தினின்று புறம்போந்து தொட்டிலின்மேற் செல்லாநிற்கக் கண்ணுற்ற நகுல மதை யக்கணமே விரைந்து பற்றி யுதறிக் கொன்று பலகண்டங்கண்டு குருதியாற் பூசுற்ற முகத்துடனே தனதாற்றலைக் காட்டவிரும்பி விரைந்து துவாரமுகமாக வருகையில், வந்தபார்ப்பினி செந்நீரா னிறைந்த வதன் வதனத்தைப் பார்த்தளவி லது தன்பிள்ளையைக் கடித்து மடித்ததென்று துள்ளித் துள்ளித் துணுக்குற்று நீர்க்குடஞ் சிதைவுறும்படி யதன் றலைமேற்போட்டுக் கொன்றுடனே யுட்புகாநிற்கையில், மக னுறங்குதலையு மருகே கரும்பாம்பின் றுணிக்கைக் குவையையுங்கண்டு “அந்தோ! கெட்டேன், யானென் னருங்குழவியை நன்காராய்வின்றிக் கொலைசெய்தேன்” எனச் சோகமுற்றுப் புலம்பாநிற்புழி, அவடலைவ னண்டெய்தி “குழந்தை யிதோ விருக்கையி னீ வெறுமை யென்மக விழந்தேனென் றேன் கதறிக் கலுழ்கின்றனை? என்னடி பேதாய்?” என, மனைவி “நீர் யாதோ பேராவா லென்மொழி தள்ளிப் போன

---

Perhaps the mungoose may bite him." She then proceeded to get water, and the child slept in the cradle. A little while after the brahman also left the house to perform his ablutions. Meanwhile a black cobra came out of its hole, and moved towards the cradle. The mungoose, which saw this, hastened at once, caught hold of the cobra, shook him to death and tore him to pieces; and wishing to make a display of its prowess exultingly hastened to the door with its face stained with blood. Presently the brahman woman returned, but no sooner did she see the blood-stained face of the mungoose than she shreiked and raved, suspecting that the mungoose had bitten and killed her child; and in her wild fury she threw the water-pot on its head, and crushed it to death. Immediately going in, she found her child fast asleep, and a heap of the torn pieces of the black cobra lying by its side. Then she raved with grief—"Alas! I am undone. I have killed my pet child without due deliberation." Just at this time her husband returned and said "Dear, here is the child. Why do you rave in vain that you have lost your child. ? What folly is this ?" "Induced by avarice," replied the wife "you disregarded my word and left home. Here is the fruit

மையா லதன்பய னிதோ வாய்த்தது ; இது மிக்க வவாவி னன் முடிமேற் சக்கரஞ் சுழன்றதை யொத்தது" என, அவன் "அஃ தெவ்வண்ண முரைத்தி" என, உரைப்பா ளாயினள்.—

"அமராவதி நகரத் தின்புற்றிருந்த வேதியர் நால்வர் மிடியாற் றுன்புற் றிப்போழ் தியாமடைந்த பொருளின் மையை யின்மையாக்கு மிடநாடிச் செல்வேமாக; பொரு ளில்லார்க்கு வனநடு வதிதலினு மின்பிலையென் றிங்ஙனங் கடைப்பிடித்து நால்வரு மறுதேயம் போகாநிற்கையில், க்ஷிப்பிரா நதிக்கரையணித்தாகப் பைரவாநந்தியென்னும் யோகியொருவ னெல்லாம் வல்லோனாய் வீற்றிருக்கின் றன னெனவறிந் தம்மடத்தி லவனுழைச்சென் றியன்ற மட்டும் பூசிக்க, அத்துறவி யவர்கள் வழிபாட்டிற் கிரங்கி, "உம் வரவின் காரண மேது?" என, அவர்கள் "அடி களே! எம்மை நலிகின்ற நல்குரவைத் தொலைப்பான் மிக்க பொருள் விழைவா லெந்நாடு துறந்து புறம்போந்தனம்; பொருட்குவை துணிவின் செய்கையா லன்றி யெய்துவ தன்று ; ஆதலி னிதனிமித்தஞ் சாந்துணையு முயலவேண்டு மென்று துணிந் தீண்டு நுஞ்சர ணடைந்தேம் ; இனித் தேவரீ ரெம்விழைவை முடிப்பீர் ; மறுப்பீரே லெம்முயிரை

---

of it. This resembles the turning of the wheel on the head of the avaricious man." " Say how that was" asked the husband and she began thus :—" Four brahmans who once led a happy life in the city of Amaravati, having become much distressed by indigence, they thought as follows :—

" Let us now go out and seek a country which shall rid us of the poverty that has befallen us. To those who are destitute of wealth, nothing gives more pleasure than to live in the woods." Having thus made up their minds, they set out on their journey to a foreign country On their way they learnt that, in the vicinity of the banks of the river Shipra, there lived a sage, Bairavananthi who was versed in all things. They therefore sought him in his hermitage and served him with all possible reverance. The sage was moved by their reverence and inquired of them what was the reason of their coming here. " Holy sage", answered they " urged by a strong desire to amass much money to shake off the poverty that distressed us, we deserted our home and ventured out. Wealth cannot be acquired but by dint of enterprise. We have therefore made up our minds that we should exert ourselves in this cause till we die ; and have consequently taken refuge here with thee. Wouldst thou crown our desire with success. If thou refuse, we will sacrifice our lives

நும்பால் விடுக்குதும்" என, யோகி யிவர்கள் பர
பரப்பையுங் கடைப்பிடியையு முணர்ந்து, நான்கு சித்தி
யைச் சிந்தித் தன்னேரை நோக்கி, "நீவி ரிமயகிரி நெறி
பற்றிப் பிசகாது போமின், போவுழி யெவன் வர்த்தி
யாண்டு விழுமோ வவற்காண்டு சித்தியாம்" என்றுரைத்
தவர்க டலைமீது நான்கு திரிச்சீலைகளை வைத்தபி னப்
பொன்விருப்போ ரன்னவ னாணையைச் சிரமேற்றாங்கி
யிமயமலை யிடத்திற்போகச் சிறிதாறு கடக்கையி லொரு
வன்வர்த்தி வீழ்ந்தது. அக்காலை யன்னவ னங்குத்தொட
டுப் பார்ப்புழித் தாமிரக்கனியா யிருக்க வவன்றனைவிட்டு
நடந்த வேனையோரை "மித்திரரே! நும்மனக்கிடத்
தாமிரங் கொண்மின்" எனக் கேட்டு, மூவரும் "பேதாய்!
இஃதா லென்னபயன்? இஃ தெத்துணைப் பெறினு நம்
மிடிமை யெட்டுணையு மகலாது, ஆதலான் யா முன்செல்
லுதும்" என வுரையாடி யவர் முற்செல்லாநிற்ப, அவன்
றன்னாற்றலளவு செம்பு வாரிக்கொண்டு வந்தநெறி சென்ற
னன். பின்னர் முன்னர்க்கூறிய அம்மூவரு மோர்கூப்
பாடு சேய்மை போவுழி யங்கொருத்தன் றலைத்திரி வீழ,
அவ னங்ஙனந் தொட்டு மற்றேரை நோக்கி, "இவ் வெள்
ளிகளைக் கைக்கொண்டு மீள்வேம்" என, அவ்விருவரும்
"முற்பாடப் பொற்குவை யிருக்கும், ஆதலால் யாம் போ
குதும்" என வவர் போயபின், அவனும் வெண்பொன்

---

before thee." Seeing their impatience and determination, the sage prepared four magic wicks which he set upon their heads and said, "Take your way right to the Himayalas without turning astray. On your way, wherever one's wick drops, there shall he gain his end." Thereupon these hunters after wealth, receiving his instructions with the profoundest reverence, proceeded a short distance on their way to the Himayalas, when the wick of one dropped. On digging the ground, he found a copper mine He then said to the others who left him there and began to move on: "Friends take as much copper as will meet your desire." "Ignorant man" replied the other three "of what use is this? However much of it we may get, our poverty will not be removed in the least; therefore will we go forward." So saying they moved on, and the man whose wick had dropped took as much copper as he could carry, and returned the way he came. The other three proceeded a call's distance when the wick of another dropped from the head. Digging the ground there, he observed to the other two "Let us take this silver and turn back." But they said "we will march on, for there may be heap of gold further on." The second person likewise took

ளிராசியிற் றன்வலிக் கியன்றன சுமந்து சென்றனன். பின் பல்வெஞ்சிய விருவரு நடக்கையி லொருவன் சிரத்திரி நிலத்தில் வீழ்வுற, அவன் றோண்டிக் காண்புழிப் பொற் றிர ளிருந்தமையா லவன் களிப்பின் பெருக்கி லமிழ்ந் தினவனாய், "நண்பனே! நம் மிச்சைமட்டுஞ் சொன்னத் திரள்கொடு செல்லுதும் வருதி" என, அப்பேராசைப் பேதை, "அறிவிலாய்! முன்னே மணித்திர ளிருப்பன வாம், ஆதலா னான் செல்வல்" என, பின் பவன் "யா னிச்செம்பொன் னேற்றுக்கொண் டுன்வர னோக்கிக் கொண் டிருப்பல், நீ விரைவில் வருதி" என, அவன் "அங்ஙனமாக" என் றவண் விட்டகல்வுழி, வெயிலின் வருந்திப் பசி நீர் வேட்கையாற் சித்திநெறிதப்பி யிவ னவ ணுழல்கையில், அங்கொரு மனித்தன்றலையி லொரு சக்கரஞ் சுழலவு மவனுடலெங்குஞ் செந்நீரான் மூழ்கி யிருக்கவுங்கண் டவனை நோக்குற்று, "நீ யாவன்? உன் றலைமே லிந்நேமி சுழல்வ தென்னை?" என் றிம்மாற்றம் வினாயவளவி லவ்வாழி யிவ னுச்சிமீது வந்திருக்க, அவ் வேதியன் றுணுக்குற்று "இதென்னை? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டாற்போ லாயிற்று" எனக் கவலையுற்று "இந்நேமி யென் மத்தகத்தின்மீ துறுவதென்னை?" என, முன்சக்கிரி மொழியலுற்றனன். "இதுகாறு மெனக் கது

---

as much silver as he could bear and returned. While the two that were left were moving on, the wick on the head of one of them fell, and turning the ground over, he found gold heaps. He was now so deeply buried in a flood of joy that he exclaimed "Friend, come, let us take as much gold as we wish and go back" But "ignorant man", replied the avaricious fool, "there may be heaps of gems before; I will go". "I will", rejoined the other, "take this yellow gold and wait for your return. Come quick." The former agreed, and leaving that spot went forth. But suffering from hunger and the sun's heat, and thirsting for water, he lost his way and was beating about. While he was thus distressed, he found a person with a wheel whirling on his head and his whole body steeped in blood. He asked him "who are you? Why does this wheel whirl on your head?" As soon as he put this question, the wheel transplanted itself on his own head. And in his great confusion and dismay he exclaimed "What is this! In sinking a well a goblin has turned up." Thus agitated and confused, he asked the man on whose head the wheel had turned before, "why does this wheel come upon my head?" "I have," replied the other "hitherto been fated to endure this misfortune. Kubera

பவ மிருந்தது, இக்காலையின் மற்றொருவன் சித்தித்திரி
யோ டெய்தி யுசாவுவன், அப்போழ் திவ்வாழி யவன்றலை
யைப் பற்றிக்கொளுமென் றெனக்குக் குபேரன் வர மிருக்
கின்றது" என, அச்சக்கரத்தலைப் புதியோன், "பிள்ளை
யார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததுபோல" எனக் காயிற்
றென்று தன்னிற்கவன்று நெட்டுயிர்ப்பெறிந்து பண்டைய
நேமித்தலைவனை நோக்கி, "நீ யிங்கெய்தி யெத்துணைநா ளா
யினை? விளம்புதி" என, அவன் "எனக்குக் காலவரையறை
தெரியாது, இராம னரசியற்றுங்காலையி னுன்மிடிபட் டிங்
கிச்சக்கரத்தாற் பிடிபட்டனென்" என, அதைக்கேட்ட வே
தியன், "ஈங்கு வல்சி நீர் தருபவ ரெவர்?" என, பூர்வசக்
கிரி "பசிதாக மிவ்வுழி வருத்துதலில்லை, முழுது மித்
துன்பே நுகரவேண்டும், இஃது நிதிக்கோ னிதியைக்
கவர்வான் வருபவர்க் கச்சுறுத்தும்பொருட்டு வைத்திருக்
கின்றது. இவ்வச்சத்தால் யாவரு மிங்கு வாராரென் றிங்
ஙன நிகழ்வன யாவுஞ்சொல்லி, இப்போழ் தென்மெய்க்
காற்றப்பெறு வேதனை யுளதாயிற்று; ஆதலா னுன் செல்
வல்" எனச் செல்வுழிச் சென்றனன். பின்னர் முற்கூறிய
சுவர்ணசித்தி சொல்லியாங்கு நெடுநேர மிவன் வருநெறி
நோக்குற்றிருந்துங் காணமையாற் றேடிவந் தவன் சென்

---

has granted me this favor that the wheel shall pass itself over to the head of another who may now come here with a magic wick on his head and ask me a question." Then the new man of the wheel heaved a sigh in great anguish of mind, thinking thus:—

"It has happened to me as if a monkey has sprung up while making a belly god." He then addressed the old man of the wheel. "Tell me how many days it is now since you came here" "I cannot measure time" answered he "while Rama was reigning I was stricken by poverty, and coming here was caught by this wheel". "Who" asked the brahman, "supplies food and water here?" "Hunger and thirst" returned the old man of the wheel, "do not distress you here. This is the sole and whole distress to be suffered. This is instituted to strike terror into the minds of those who come here to appropriate to themselves the riches of the god of wealth. Nobody visits this place for fear of this." Thus he finished saying all that passed there and started for his place, adding "All my unbearable sufferings have now come to an end. I will now go my way". Then the man who had discovered gold, after waiting in vain, as agreed, for a long time, went in search of him and found him here with

னியிற் சக்கரஞ் சுற்றுகின்றமைகண் டையுற் றருகெய்தி, “நண்பனே! இஃதென்னை யென்னை?” என, அவன் “இஃது பேராசையின் பயன்” என, சுவர்ணசித்தி ஓகோ! இது ‘பிள்ளைவரத்துக்குப் போனவிடத்திற் புருடனைப் பறிகொடுத்தாற்போல்’ ஆயிற்றே எனச் சற்றுக் கலங்கிப் பின் வெள்ளறிவோர்க்குக் கல்விபயிற்சி சிறிதுளதாயின் பிறனறிவைக் கேளாது செத்த சிங்கத்தை யுயிர்ப்பிக்கின்றவர்போற் கேடுறுவார்கள்” என, அதைக்கேட்டுச் சக்கரதரன் “அஃதெங்ஙனம்?” என வினவ, பொன்வாய்ப்பினன் இறுக்கின்றனன்.—

“துளசாபுர மென்னு மூதூரி னால்வ ரொருசாலை மாணாக்கராய்க் கல்வி பயில்கையில், அவர்களின் மூவர்க்கு மந்திரவித்தை கைவர, அப்போ தவர்கள் “அரசனை யடுத்துப் பெரும்பொரு ளீட்டுத லன்றோ வித்தையுணர்ச்சிக்குப் பயன்?” என, அதுகேட் டவரு ளொருவன் “வாருங்க ணம்மு ளிவ்வொருவன் கல்வி யறிவிலன், ஆதலா லிவற் கீட்டும்பொருளிற் கூறுகொடேம், ஆதலா லிவனிந்நொடியிற்றானே தன்னில்லத்திற் கேகற்பாலன்” என, அதைக்கேட்டு மற்றொருவன், “இவன் கல்விகல்லானாயினு மிளமைதொட்டு நம்மோடு விளையாட்டயர்ந்தோனாயினன், அன்றியு நம்மினு முலக நடையிற் றேர்ந்தவன்,

---

the wheel turning on his head. He grew suspicious and going near, asked “Friend, what is this, what is this?” “This” replied he “is the fruit of avarice.” Then the man who discovered gold was a little distressed and exclaimed “Oh! it is as if the husband has been lost while going to pray for a child. If fools acquire a little learning, then they do not take the good advice of others and thus suffer, just like those who attempted to give life to a dead lion.” Thereupon the man of the wheel asked “How was that?” and the discoverer of gold spoke :—

“In the ancient city of Thulasapuram four persons prosecuted their studies as students of the same school, and three of them learned the mystic art. Then they said together “Is it not the fruit of learning to amass wealth by taking service under a king?” Then, “come”, said one of them, “as this one amongst us is destitute of learning, let us not allow him a share in the riches to be acquired. Let him therefore instantly go home,” “Though he is not a learned man” observed another, “yet, from his early life, he has been our play-fellow. Further he has a better knowledge of the world than we. In the king's

அரசன்மாட் டுலகநடை யறிந்தவனிலுங் கல்விமாத்திரம் பயின்றோன் புகழெய்தான், ஆதலா லிவற்கு நாலிலோர் கூறு கொடுக்குதும்'' என, அதை யெவரு மொப்பிப் பின்பு நால்வரும் வேற்றுத்தேய நோக்கிப்போவுழி, அங்கே யோரடவியி லோருயிர்நீத்த வரிமா கிடந்தமை கண்டு, ஒருவன் ''நாம் பிழைப்பிக்கக்கற்ற வித்தையை யிவ் விறந்ததன்பா லியற்றித் தெளிவோம்'' என, அதை யுலகநடை வல்லோன் கேள்வியுற்று, ''இவ்வரிமாவைச் சீவிப்பிப்பி னிஃ தெல்லோரையுந் தின்னாது விடாது, இதன்பாற் பரீக்ஷைசெய லொழியற்பாலது'' எனப் பல வகையான் மறுத்தனன். அம்மூவரு மந்நன்மொழியை யெறிந்து செருக்கினா லச்சிங்கத்தை யுயிர்ப்பிக்கத் தொடங்க, மற்றவ னித்தகுதியில் செயற்குச் சதுரனாவான் சேய்மையாகற் பாலனென் றுரைத்து, அவ னீளப்போ யோர்நெடுமரத்தின்மிசை யிருக்க, பின்ன ரிவர்க ளம்மற விலங்குக் குயிர்தந்தமாத்திரத்தி லது மூவராவியையும் வாங்கிற்று. ஆதலாற் கல்வியினு மறிவு பெருமையது'' என, அப்போது சக்கிரி ''இஃது காரணமன்று; அறிவுடையோன் வீட்டிற் பலகாப் பமைத்திருப்பினு நாச முறுகின்றான்; பேதையாயினுங் காட்டகத்துந் தனித் திருந்து முய்கின்றனன்; முன் னாயிரம்புத்தி மல்லாந்ததை

---

court, he who possesses learning alone does not attain as much distinction as he who knows the ways of the world. Let us therefore give him a fourth share". All the four agreed to this and set out for a foreign land. On their way they reached a forest in which they found a dead lion, and one of them said " Let us now put to the test our proficiency in the art of restoring the dead to life by exercising it on this dead creature." But the man of worldly wisdom remonstrated with them in several ways and said " If the lion be restored to life then it will not spare devouring us all. Avoid therefore testing your knowledge on this." But the other three arrogantly set his good advice at nought, and set about reviving the lion. Then the other man observed " when an ill-advised act is done, the wise man should hold aloof." Accordingly he moved a little distance and climbed upon a tall tree. When the beast of prey had his life restored, he destroyed all the three. Therefore wisdom is worthier than learning." " This cannot form a reason" said the man of the wheel, " the wise man is ruined though his house is hedged round by various fortifications, while the fool is safe though he lives in a solitary desert. Have you not heard how Ayirambudhi was stretched

யும், நூறுபுத்தி தொங்கினதையும், ஒருபுத்தி நீரில் விளை யாட் டயர்ந்ததையுங் கேட்டிலையோ?" என, பொன்வாய்ப் பினன் "அஃதெவ்வா றறைதி" என, நேமிதிரிதலையன் விடை விடுக்கலாயினன்.

"மகததேயத்தி லோர்மலர்ப்பொய்கையி லறிவா யிரத்தன், நூறறிவ னென்னு மிரண்டு மீனங்கட்கு மோ ரறிவ னென்னுந் தவளைக்கு நட்புளதா யிருக்குங்காலை யில், ஓர்திவச மாண் டோர்வலையன் வந்து பிற்றைஞான் றீண்டுள கொழுமீன்களை வலையெறிந்து கவர்வேனாக வென் றுரைகூறி யிறந்தமையை யறிவுற்ற வம்மண்டூகந் தன்னுற் றார்க் கறிவுறுத்துழி, அறிவாயிரத்தன் "நா னீர்நடை பல வுங் கற்றுவல்லேன்" என, நூறறிவன் "யா னிலைபெயர லாகாது, யா தாகற்பாலதோ வஃதீண்டே யாகுக" என, அதைக்கேட்ட தவளை "வாரீர் நட்டோரே! நா னிதோ போகின்றேன்; நீவிரும் நடமின்" என, அவ்விரண்டும் "நீ யோரறிவ னாகின்றனை, ஆதலாற் போவையானாற் போ, யாம் வருவே மல்லேம்" என, பின்னத்தவளை தன் குழு வோடு வேறிடம் போயிற்று. மறுநாட் செம்படவன் வீசிய வலையிற் சிக்கிய பற்பல மற்சியங்களோ டகப்பட்ட வறிவாயிரத்தனைத் தலைமேற் சுமந்தும், நூறறிவனை வா லைப்பற்றியு நடக்கையில், இதை யோரறிவன் கண்டு, தன்

---

flat on his back, how Nurubudhi was hanging down and how Orubudhi was playing in the water."

"Say how was that?" inquired the finder of gold. And the man of the wheel answered as follows :—

"In a flower-spring, in the country of Maghada, two fishes that bore the names of Arivayiratan and Nurarivan and the frog Orarivan lived together as friends. One day a fisherman who happened to go there said "I shall throw the net to-morrow and catch the stout fishes that are here", and returned home. This the frog heard and communicated to his friends. "I am well versed" said Arivayiratan "in the many modes of swimming." "We should not" observed Nurarivan. "leave our place come what may in this very place." On hearing this, "come friends" said the frog "I am going, you had better also follow me." "As you are possessed of only one wit" returned the other two "go if you please. We will not go." Then the frog proceeded with its relatives to another place. The next day the fisherman cast his net, and amongst the fishes that were caught were also Arivayiratan and Nurarivan. He carried the Arivayiratan on his head, and Nurarivan by the tail, and walked on. Seeing this, Orarivan turned to his wife exultingly and said

பெண்டிரை நோக்கி "அறிவாயிரத்தனுக்கு நூறறிவனுக்கு மிங்ஙனங் கேடெய்திற்று, நா னோரறிவ னீரில் விளையாடுகின்றேன்" எனக் குதுகுலித்துச் சொல்லிற்று. ஆதலான் மிக்கறிவோனுக்கு மூழினு லிவ்வணந் துன்புளதாம்" என, பொன்வாய்ப்பினன் "நீள்செவியனை நன்மதி தடா நிற்கையி லிசைபாடிக் கட்டுண்டாற்போ லுனக் கிப்பேரிடருளதாயிற்று" என, சக்கரதரன் "அஃதெங்ஙன நிகழ்ந்தது உரை" என, சுவர்ணசித்தி சொல்லலாயினான்.—

"நெடுஞ் செவியல் சுமதி யென்னுங் கழுதை நரிகளிரண்டு மிடைவிடாம லூரினர் பைங்கூழை மேய்ந்து வனத்திற் றங்குழி, ஓர்நாள் விலாப்புடைக்கத்தின் றிரண்டுந் தேக்கெறிந்து குந்தி யிருக்கையில், நெடுஞ்செவியல் "இந்நிலவெறிக்கு மிரவி லெனக்குப் பொழுது கழியின்றாதலால் யான் கானஞ்செய்வேன்" என, சுமதி "நீள்செவிய! நீ பாடற்க, உழவருன்குரலைக்கேட்டுத் துயிலொழிந் துன்னைப் புடைப்பார்கள், மௌனமா யிரு" என, நீள்செவியல் "உனக் கிவ்விசையைக்குறித் துணர்வின்மையா லென்னைத் தட்டுகிறாய்" என் றந்நரியை வைது கழுதை தன் பெருங்குரல் முழுதுந்திறந்து பாடிற்று. அப்போழ் துழவருறக்க விழிப்புற் றக்கழுதையைக் குண்

---

"Thus has misfortune happened to Arivayiratan and Nurarivan while I who have but one wit, am here sporting in the water"

"Therefore" said the man of the wheel, even the man of great wisdom is fated to encounter misery in this way."

"This great misfortune" replied the gold discoverer "has befallen you just as the ass, without heeding to good advice began to sing and got into trouble."

"Say, how was it brought about," asked the man of the wheel and the finder of gold gave the story thus :—

"The ass named Neelseviyan and the fox named Sumadi used always to graze upon the crop of the villagers and to retire to the forest. One day both of them, after they had eaten a gluttonous meal, sat together satiated on the ground. Then said the ass " this night, when the moon shines with all its splendour seems to be heavy with me. I will therefore sing a song." " Neelseviya", replied the fox, " do not sing. Roused from their sleep by your voice, the ploughmen will beat you heavily. Keep quiet." " You have no idea of music", replied Neelseviyan " therefore you object." Thus reviling the fox, the ass burst out in song with the whole weight of his loud voice. Then the ploughmen, being roused from their slumber, bound the ass

டுருட்டாய்ப் பிணித்து நையப் புடைத்தனர். நரி யதைக் கண்டு "மாமா! என்மொழி தள்ளி யிசைபாடினமையா லிப்பய னடைந்தனை" என்று "இகழ்ந் துரைத்தது" என, சக்கரதரன் "நன்மொழி வினவியு மந்தரனென்னுந் தந்துவாயன் மரணமுற்றனன்" என, பொன்வாய்ப்பினன் "இஃ தெவ்வண முளதாயிற் றியம்புதி" என, சக்கிரி சொல்லுவ தாயினன்.—

"நாராயண நகரத்தின் மந்தரனென்னுந் தந்துவாயன் பலவகைப்பட்ட வத்திர நெய்துவரு மூதியத்தான் மனைவியோ டுண்டுடுத்துக் காலந்தள்ளிவருகையில், அவன் றறிமுறிந்தமையான் மரம்வேண்டுற்றுக் காட்டிற் புக்கானாகத் திரியாநிற்கையில், ஓர் பெரிய வாகையைப்பார்த்து வெட்டத்தொடங்குழி, அதன்மேலிருந்த யட்சன் "இவ் வென்னிடத்தை வருத்தாதே; நீவிருப்புற்றதை வெறுப் பின்றித் தராநிற்பேன்" என, சாலியன் "நா னென் னில் லம் புகுந் தெவரையு முசாவி யவர் சொன்னவண்ணங் கேட்பேன்" என் றவ்வண்ணம் வீடுநோக்கி வருங்கால், நெறியி லெதிர்ந்த மித்திரனாய நாவிதனை "என் செய்வ தியம்புதி" என, அன்னோன் "நீ யிராச்சியங்கேள், நீயரசனாலனமைச்சு மாவேம்" என, அதைக் கேட்டபி னங்நடந்த

tight round, and beat him severely. The fox seeing this, ridiculed the ass thus : "uncle, without listening to me, you sang and reaped this fruit".

And the man of the wheel replied. "A weaver named Manthara, though he listened to good advice, yet encountered death."

"Say how this came about" asked the man of gold ; and the man of the wheel began to relate :—

"In the city of Narayana, a weaver named Manthara, manufactured cloths of various sorts, and with the proceeds thereof managed to have sufficiency of food and raiment and passed his time with his wife. Once his loom broke and he wandered about in the forest in search of wood. At length he found a big Vagai tree, and was going to fell it when the demon that lived on it spoke thus : "Do not disturb this, my abode ; I will willingly and gladly give you what you desire."

"I will go home", replied the weaver, "and after consulting all, will demand what they advise me to ask for." So saying he returned home. On his way he met his friend, a barber, and asked him "Tell me what should be done."

"Ask for a kingdom" replied he ; "you may be the king, and I your minister." Afterwards the weaver went home and in-

செய்தியைத் தன் மனைவியாகிய சாலிச்சிக்குத் தெரிவிக்க, அம்மடந்தை "இராச்சியத்திற்கு வரம்பி லிடையூறுக ளிருக்கின்றன, ஆதலா லது கேட்கற்பாற்றன்று; வேறொரு வதனமு மிருகரமுங் கேட்டையாயின் றிவசத்திற் கிருசீலை நெய்தா னம்மில்வாழ்க்கை செவ்வன் நடக்கும்" என, அதை மேற்கொண்டு மீட்டு மவ்வனத்தரு வருகிற் சென் றவ்வியக்கனை நோக்கி, "எனக்கு மற்றோர் சென்னியு மிரத்தமும் தருதி" என, அவன் "அங்ஙனமாக" எனச் சொல்லியவளவில், விழையவாறடைந் துவப்பெய்தித் திரும்பிக் கிருகத்திற்கு வருகையில், மாக்க ளிவ் விபரீதத்தைக்கண் டிஃதோ ரிராக்கதனென் றெண்ணுற்றுத் தலையா லொருகல்லெறிந்து கொன்றனர். ஆதலால் வரற்பாலது பிழையாதென் றுணர்வுற்ற வல்லோர் வீணாசை கொள்ளார். அங்ஙனம் வீணெண்ணங்கொண்டு கிருபணனென்போன் கேடுற்றனன்" என, பொன்னசித்தி "அஃதெவ்வாறாயது? இயம்புதி" என, சக்கரதரன் சாற்றலுற்றனன்.—

"பண்டரபுரத்திற் கிருபணசருமனென்னு மொரு வேதிய னிரந்து வயிறு நிரப்பி யெஞ்சிய திவசங்களைப் பெய்து நிரப்பிய பானையைச் சிக்கத்தின் மீதிருத்தி யத

---

formed his wife of what had taken place She answered "Sovereignty is subject to numberless difficulties. That is not a good thing to ask for. Ask him for another face, and another pair of hands, you may then weave two cloths a day, and our household affairs may be better managed." The weaver preferred this, and going back to the tree in the forest, asked the demon, "Favor me with an additional face, and an additional pair of hands." "So have it", said the demon, and immediately the weaver had the pleasure to receive what he had asked for, and returned home. On his way people saw this strange phenomenon and thinking that he was a monster pelted each a stone at him, and killed him.

Therefore, knowing as they do, that what is destined to happen never fails, good men do not give place in their hearts to vain aspirations. Aspiring too highly, one Krupanan came to grief."

"How was it, say" asked the discoverer of gold, and the man of the wheel answered thus:—

"In Pandarapura, a brahmin named Krupanasarma lived by taking alms. The rice that remained after his daily consumption he stored up in a pot which he placed in a string hoop and

னடியிற் படுப்பன். இங்ஙன மொழுகுகையி லோர்நாட் கிடந்தவாறே சிறுவிலைக்கால மெய்தி யிப்பண்டம் விலைப் படுத்தி யப்பொருட் கோர்காராடுகொண் டது பல்கிய பின்ன ரவற்றை யாவிற்குமாறி யவ்வா பெருகிய பின்ன ரவற்றிற்கீடாக வாம்பரி கொள்வேன். பின்பப்பரி குட்டி களீன்று விருத்தியாயபின் னவற்றை விற்று யான் செல்வ முடையே னாவேன். பின் னோர்பார்ப்பனக் கன்னிகையை நாடி மணம்புரிவேன். அம்மாதுகட் டோர்மக வுளதாம். அது தவழ்கையில் யான் பெண்டிரை நோக்கி, அடி பெண்ணே! குழவியை யெடுவென்பேன். அவள் பணி யூற்றத்தா லெடாள். அப்போழ் தியா னவட் கிங்ஙன மோருதை கொடுப்பல்" என, இங்ஙன மெண்ணமிட் டோருதை யுதைக்க, அவ்வுதை யரிசிப்பானையிற் றாக்கி யஃதுடைபட் டிருந்தபண்ட முழுவதுங் கொட்டுண் டிறைந்து பயன்பெறா தாயிற்று. ஆதலால் வீண்கற்பனை கற்பித்த லாகாது" என, அதைக் கேள்வியுற்ற பொன் வாய்ப்பினன் "உன்மீது குற்றம் யாது? இது பற்றுள் ளத்தின் பெருமை. கிருபணத்துவத்தினால் சந்திரசேன ராசன் மிகத்துன்புற்றனன்" என, சக்கரதரன் "அஃ தெங் ஙன மாயது?" என, சுவர்ணசித்தி சொல்லுகின்றனன் :—

---

took his bed below it. While he thus passed his time, one day he mused within himself thus :—"If scarcity happen, then will I sell this rice, and for the price buy a goat. The goat may bear kids, and I will exchange them for a cow. When the cow calves, I will get in exchange for them a mare. Then after the mare yields, and the animals increase in number, I will sell them, and I may then become a rich man. I will then find a brahman girl and marry her. She will bear me a child. When the child crawls, I will turn to my wife and say "Dear, take the child". Business-pressed, she will not take the child. Then thus will I give her a kick." So thinking he gave a kick which fell upon the rice pot and broke it. All the rice was scattered about and became quite useless. We must not therefore indulge in idle reveries."

On hearing this the finder of gold said, "This is no fault of yours. It is but the nature of the human mind ; king Chandrasena, on account of his avarice, encountered much misery."

"What was this about" inquired the man of the wheel. And the gold-discoverer narrated as follows :—

"அயோத்தியா நகரத்திற் சந்திரசேன னென்னு மரையன் றன்மகன் வலிமுகத்தோ டாடலயர்வதில் மிக்க வேட்கையைக்கண்டு பற்பல வலிமுகங்கொணர்ந்து சாலையில் வளர்ப்பிப்புழி, அங்கு மடையனுக்குங் குற்றேவல் செய்வோர்க்கும் பகை மூண்டமை யறிந்து, அவற்றுள் ளோர் சதுரப்பாடுடைய முசு இவண் கலா நிகழ்ந்திருக்கின்றமையா லிவ்விடந் துறந்து காட்டகம் புகுவேம்" என அதைக் கேட்ட வானரக்குழு "நீ மூத்தமையா லறிவிழந்து பல பலபடி பிதற்றுகின்றாய், இங்கரையனையடுத்துப் பலவண்ண வுண்டிகளுண்டு குழீஇ யிருந்தேம். இந்நலத்தை வலிய வீசி வனத்திற் றழைதின் றுழல்வது நன்றன்று. யாதொன் றெய்தற்பாலதோ வஃதிங்ஙனே யெய்துக" என, இம்மொழிகேட் டக்கிழக்குரங்கு தன் குடும்பத்தோடு வேற்றிடம் புக்கது. பின்னரோர்நாட் பணிசெய்வோன் மடையனைக் கரத்தண்டத்தா லோச்சியெறிந்தமையா லவனவனை யெரிகொள்ளிகொண் டெறிந்தான்; அக்கனற் பொறி வைத்தூறிற்பற்றிக் குதிரைச்சாலை யாவற்றினு மூண்டதனகத்துள்ள பரிகளிற்சில வெரிந்திறந்தன, சில வுடற் பாதி கரிந்து வீழ்ந்தன, சில கண்முதலிய வுறுப்புகள் வெந்தன. இச்செய்தி யரசனறிந் தக்கணத்திற் குதிரை

---

"In the city of Ayodya there lived a sovereign Chandrasena, who finding that his son was very fond of playing with monkeys, caused several of these animals to be brought up in the avenues. There once arose a quarrel between the cook and the other menials. On learning this, an astute monkey said "As a division has arisen here, let us quit this place for the woods." "Having grown old and imbecile", replied the crowd of monkeys who heard the words of the old monkey, "you have lost your sense and speak stuff and nonsense. We have here lived together happily feeding by the king's favor, upon many luxuries. It is not wise on our part to give up these comforts and subject ourselves to the inconvenience of feeding upon the berries of the forest. Whatever is to happen, let it happen here." Thereupon the old monkey went away with its family to a new place. Afterwards, one day a menial servant raising the stick in his hand threw it on the cook, who in his turn struck him with the fire brand. From the fire brand, a spark fell upon the heap of straw and the flames spread to the stables. Some of the horses within were in consequence burnt to death; some others were scorched half their bodies, and sank down; and others were burnt in their eyes and other organs. The king, learning this, immediately sent for the doctors, and asked them as to

மருத்துவரைக்கூய் "அவ்வசுவவேக்கா டொழிதற் கெது செய்யலாவது?" என, அவ்வாமாத்திரர் "குரக்கி னெய்யாலன்றிக் குணமுறாது" என, அண்ண லுடனே யேவல் புரிவோ ரானன மேறிட்டு "இவ்வானரக் குழுவைக் கொலைசெய் திப்பண்டிதர் சொல்லியாங்கு புரிந்து குணமுறுவிமின்கள்" என்றேவ, அவரன்னவாறு செய்தனர். இதையம்முதுகடுவ னறிந்து பெரிதும் வருந்தி "இப்பழி வாங்குவேன்" என் றுறுதிசெய்து காட்டகத்துத் திரிதருகையில், வழியில் மிகப்பொலிவுள்ள வொரு பெருஞ்சரசைக் கண் டிக்குளத்தகத்து மக்க ணடப்பின்மையி னிவ ணோர் பெரும்பே யிருக்கவேண்டுமென் றுள்ளிச் சேய்மைக்கணின் றோர் தாமரைத்தாளைப் பிடுங்கி யத னுளத்தினு னீரை யுறிந்துகுடித்தது. இதை யாண்டு வதிந்த கணங் கண் டதினின்று மர்க்கடத்தி னருகுற்று "உன் சதுரப்பாட்டை மெச்சி நான் பிரசன்ன மாயினேன், இவ்வென் மணிவடத்தை யேற்றுக்கொள்" என, தன் களத்தின் மாலையைக் கழற்றிக்கொடுத்தது; அப்போது குரங்கு பைசாசத்தை "உதகத்தி லுனக்கு வலி யெவ்வள விருக்கின்றது?" என, அப்பைசாசம் "ஆயிரம்பெய ரொருங்கே நீரி லிறங்கினு மவரைப் புறம்போக வொட்டேன்" என, இதைக்கேட்ட வலிமுகம் "உனக்கு நிரம்ப வுணவு கொடுவருவல்" என் றவ்விரத்தின மாலையைக் கழுத்தி

what should be done to cure the horses of their burns They replied that without the oil extracted from the fat of monkeys, no cure could be effected. Accordingly the king ordered his servants to put the crowd of monkeys to death and effect the cure by doing as the surgeons prescribed. They did accordingly. On learning this, the old monkey was much troubled at heart and resolved to revenge himself upon this cruel act. While he was wandering in the woods, he came across a fine large lake and thought, 'as this lake is not frequented by men, there must be some devil here. He therefore held at a distance and plucking up the stalk of the lotus-plant, sucked the water through it. The devil that lived in the tank saw this, and approaching the monkey said " As I admire your prudence, I appear to you. Accept this diamond pendent of mine." So the devil took off its neck-lace, and presented it to him. Then the monkey asked " How much strength have you in water?" "Though a thousand men descend together in the water," replied the devil, "I can prevent them from going out." On hearing this the monkey said "I will get you plenty of food" and return-

லணிந்துகொண்டு சந்திரசேன னரையன் பதிபுக் கிறைவ னைத் தரிசித்து, "சுவாமி! உஞ்சோறு நெடுநா ளுண்டு வளர்ந்தேன், ஆதலா லும்மைக்காண வரலாயினேன்" எனப் பணிந்து சொல்ல, அரையன் "இவ் வரதனவட முனக் கியாங்குக் கிடைத்தது?" என, வானரம் "சுவாமி! காட்டி லோர்மலர்த்தட மிராநின்றது, அதில் வைகறையிற் குதிப்பவனுக் கின்னமணிக ளகப்படுகின்றன" என, அம் மொழி கேட்டுத் தோன்றல், "யா னங்கெய்துவல்" என, வானரம் "மிகவுநன்கு" எனத்தாழ, பின் மன்னன் சேனைக் குழாஞ் சூழ வானரத்தின் பின்சென் றச்சரசி னணித் திறுத்துப் பின்ன ரக்கங்குல்கழிந்து விடியற்காலையில் சாகா மிருகமெழுந் தெந்தலை யெழுப்பி நோக்கி, "நுமக்காரதன விருப்புளதே லிதேநற்பருவம்" எனக்கேட்டுக் காலாட்க ளோடு தடத்திற் செல்லாநிற்கையில், வானர மரையனைப் பார்த்து, "எல்லோருந் தடத்துக்கப்புக்கு மணிகள் வாரிக் கொண் டெய்தியபிற்றை நாமிருவருஞ்சபுக் கம்மணிகள் கொள்ளுதும்" என, அவன் "அங்ஙனமாக" எனப் போக் கிய பதாதிகள் வாவியி லிறங்கினமாத்திரையி லப் பாரிட மவர்களை யங்கீரி லமிழ்த்திச் சேரக்கொன்றது. பின்பு சந்திரசேனன் "சேவகர்கள் சென்று நெடுநேரஞ் சென் றது, இதுகாறு மெய்தவில்லை யென்?" என்று பிலவங்கத்

---

ed. Wearing the diamond neck-lace he entered the city of Chandrasena, and bowing to the king submissively said, "Liege! I lived on your majesty's food for a long time. I have therefore come here to pay my visit to your majesty." "Where" asked the sovereign, "did you get this diamond neck-lace from?" "Liege!" replied the monkey, " there is a lotus-tank in the forest. Those who at the dawn of day dive into this tank find these gems." Hearing this the sovereign said " I will go there." " Very good", said the monkey submissively. Then the king surrounded by his army followed the monkey, and alighted near the tank. The night passed, and at the dawn of day the monkey got up, and awaking the king said, " If your majesty wish to have the gems, then this is the fit opportunity for it?" The king accordingly proceeded to the tank with his footmen, when the monkey addressed the king thus, " Let these men dive into the water and come out with the diamonds. We may then go and take the diamonds." " We shall do so" replied the king. The footmen got in and immediately the devil pressed them into the water and killed them all at once Chandrasena asked the monkey " It is now a long time since the army went in. They have not, as yet returned.

தைக் கேட்க, வானரம் வானுறவோங்கிய வோர்மர நெடுங் கிளையிற் பாய்ந்தேறி யரசை நோக்கி, "நீ யென்குல முழுவதையுங் கொல்வித்தாய், ஆதலா லக்கடனை நானிங்ஙனங் கைக்கொண்டேன், நீ யெனக் கன்னந் தந்தமைபற்றி யுன்னை யுய்வித்தேன்" என, இப்பேச்சைக்கேட் டண்ண லிரங்கி யத்தியாசைகொண்டு முயலுங்கருமங் கேட்டைத் தராநிற்குமென் றுள்ளினவனாகக் கோயிற்புக்கனன்; அங்ஙனமாய கரும நீ புரிந்தமையா லஃதுனக் கித்துன்பம் பயந்தது. நல்ல தினியா னேகுவன்" என, அப்போழ்து சக்கரதரன் "குறைவுற்ற காலையி னட்டோர் பயன்படுகின்றார்கள். அங்ஙனமாக, நீ யெற்றுறந் தெவ்வா றகலுதி?" என, சுவர்ணசித்தி "கள்வ னிராக்கதனைப் பிடிப்புழி வானரம் பேசினமையா லதுபிடிபட்டது, ஆதலா னிவ் வாழியை யஞ்சுகின்றேன்" என, சக்கிரி "இதெங்ஙனம்?" என, பொன்வாய்ப்பினன் சொல்லுகின்றனன்:—

"மதுரைப்பதிக் காவலனாகிய பத்திரசேனக் கோமானுடைய விரத்தினவதி யென்னும் பெயரிய கட்டழகியாகிய மகளைக் கவரக்கருத்துற் றோரிராக்கதன்போந் தற்றநோக்கிச் சின்னா ளிரிவுற் றவ்வுபாய நடவாமைகண் டோர்

---

What is the matter ?" The monkey sprang upon a large branch of a tree that reached the skies and addressed the king thus: "you caused my whole family to be destroyed. And this is the manner in which I have discharged that debt. But you I spare because you gave me food." Struck with remorse, the king returned to the town thinking thus : "that which is done at the prompting of an inordinate desire, brings on evil consequences."

"As you have now done the like thing" continued the man of gold, "it has entailed this misery on you. Well, let me go now."

"In times of distress", returned the man of the wheel "friends do good service. While such is the case, how can you leave me here alone and go away".

"While the thief caught the demon," answered the gold discoverer, "the monkey was caught, because it spoke. I therefore fear this wheel."

"How was it" asked the man with the wheel on the head and the gold discoverer related the story thus :—

"King Bathrasena, of the kingdom of Madura, had a lovely daughter named Ratnavati. A giant wished to carry her away and was for some days wandering about for the purpose. Finding that this plan did not work well, he was one day lying

நாட் பதிவிருக்க, அக்கன்னிகை யதுகண் டடுத்துநின்ற
தோழிமுக நோக்கி, "உயிர்ப்பாங்கி! இவ்வரக்க னென்னை
யெல்லுமெல்லியும் வருத்துகின்றனன். இதற் கேதேனு
மோர்சூழ்ச்சி செய்யவேண்டுவல்" எனா, அது செவிபுக்க
விராக்கத னிம்மாதைக் கவரும்பொருட் டியாம் வந்திருக்
கையி லிவ்வெண்ணங் கொண்டே யெம்மினும்வலிய மற்
றொருவன் வந்திருந்தா லென்செய்வேமென் றச்சமுற்
றரையன் குதிரைச்சாலையி லோர்கலிங்க வுருக்கொ டிருந்
தனன். அங்ஙன மிருப்புழிப் பரிமாக் கொடுபோம்
பொருட் டவணுற்ற வோர்கள்வ னிஃதேனையவற்றின் மிக
நன்றாயிருந்தமைகண் டதன்வாயிற் கலினம்பெய்து புறத்
தீர்த்துவந் ததன்மீதூர்ந்து வீட்டின்பா னடாத்தாநிற்கை
யி லஃதிங்குமங்கு மோடத்தலைப்படுகையில், அவன் சம்
மட்டியா லறைந்துபார்த்துச் செவ்வனே செல்லாமையா
லக்கள்வ னிதுகாறும் யாங்கண்ட பற்பல மாக்களி லிஃ
தொத்ததைக் கண்டோமில்லை. ஆதலா னிஃதேதோ விருத்
திரமமா யிருக்கின்றதென் றுள்ளங் கலங்குறுகையில்,
அக்குதிரை தொன்மரத்தின்கீ ழீர்த்தோட, அப்போது
மேலிருந்த கள்வன்விரைந் தாலின்வீழைப் பற்றித்
தொத்தி யத்தருமீ தேற, இராக்கதன் விளாசலுக் கஞ்சி
யோடினன், அதைக்கண் டம்மரமீதிருந்த வானரம்,

---

in wait for her. Seeing this, the maiden turned to the attendent maid by her side and said " my life-dear favorite, day and night this giant is troubling me. Some scheme must therefore be devised for this." On hearing this, the giant thought to himself thus : " I have come here for carrying away this damsel. What shall I do if any one more powerful than myself has come here with the like object". He accordingly assumed the shape of a horse and stayed in the king's stable. While he was here, a thief came into the stable to steal a horse, and found that this horse was more beautiful than the others. He accordingly bridled him, brought him out, and mounting him rode home. The horse began to run about here and there. He then lashed him, but even then he would not go better. Then thought the thief. " I have seen many animals, but never till now one like this. There must therefore be some thing wrong about it." While he was thus disturbed in mind, the horse carried him to the foot of an old banian tree, when he quickly caught hold of the hanging root, and climbed up to the tree. To avoid being beaten soundly the demon took to flight. On seeing this, the monkey that was on the tree cried out " I say.

“அடா! இவன் மனித்தன், நீ யரக்கனாயிருந்து மேனிரி கின்றனை?” என, அதைக்கேட்ட சோரன் வெருண்டு கீசகத்தின் வாலத்தைப்பற்றி வருத்த, அரக்கன் குரங்கு வஞ்சக முள்ளதென் றெண்ணி மீண்டும் விரைந்தோடி னன். ஆதலால் அக்கவிக் கெய்திய வின்னல்போ லெனக்கு முளதாமென் றிந்நேமியைக்குறித் தஞ்சுகின்றனன்” என, சக்கிரி “தெய்வ மெதிர்ப்பி னியாவரு மிங்ஙன மிடுக்க ணனுபவிப்பர்; கேண்மோ, இலங்கேசன் றிரிகூடாசல மொத்த மலையும், கடலொத்த வகழியும், தா னரக்கனும், பேராற்ற லுடையானும், சுக்கிரன் குருவுமாக இவ்வண்ண மொன்றுக்கொன்று குறைபாடின்றி யிருந்தும், அவனை யொருகுரங் கவமானத்தாற் றலைதாழ்ப்பித்தது. ஆதலால் விதிவலிமுன் யாவன் சூழ்ச்சி வலியாயினு மியாது பயன் படும்? அவ்வூ ழொன்றியிருப்பின் றீயவு நல்லவாய்விடும். இவ்வண்ணமே சிதடன் கூனன் முக்கட்பெ ணிவர்கட்கு முன்ன நேரிட்டதொன்று கேட்டிலையோ?” என, பொன் வாய்ப்பினன் “அஃதெங்ஙனமோ வியம்புதி” என, சக் கரதரன் சொல்வானாயினன்.—

---

this is but a man, and you are a giant. Why then do you run away?” The thief, on hearing this, took fright and caught hold of the monkey by the tail and pressed it. The giant thinking that the monkey was a cunning creature fled in a greater haste.”

“Therefore” added the finder of gold, “I am afraid of this wheel for I may have to encounter a misery like that which befel the monkey.”

“If God frowns,” replied the man of the wheel “then every one will have to suffer in this way. Listen to me. The King of Lunka (Ceylon) was fortified by a mountain like Trikudam, and a ditch like the Ocean. Himself was a giant possessed of an enormous strength and had Sukra for his priest. Thus was he in all respects equally well armed and in no point was he inferior. Yet an ordinary monkey put him to shame and lowered his head. Therefore, of what avail is the strength of one's resources against the strength of fate? If fate is in favor, then evil itself will turn good. Have you not heard of what happened once to a blind man, a hunchback and a girl with three eyes?”

“What is that tell me” inquired the gold-finder. The man with the wheel on the head, then began to narrate:—

“மதுபுரக் காவலனாகிய மதுசூதனனென்பவற்கு முக்கட்பெண் டோற்றினமையாற் சோதிடம் வல்லோரைக் கூய், “இதற்குச் செயற்பால தென்?” எனக் கேட்புழி, “சார்வபௌம! கேட்குதி, எவனாயினுஞ் சொல்வதை முன்னர் நன்காராய்ந்து சொல்லவேண்டும்; அங்ஙன மாராயாது சொல்லின் சண்டகருமனைப்போலாகும்” என, அரையன் “அவன் யாதுரைத்தனன்?” என, சோதிடம் வல்லோன் சொல்லலுற்றனன்:—

“தண்டகாரணியத்திற் சஞ்சரிப்போனாகிய சண்டகருமனென்னு மோரிராக்கதத்தலைவ னவனேரிட்ட வோரந்தணன் றோண்மேலேறி நடத்திக்கொண்டு போவுழி, அவ்வேதிய னவ்வரக்க னடிகண் மிகமெல்லியவா யிருப்பனவற்றைப் பார்த்து, “ஐய அரக்கத்தலைவ! உன் காலடிக ளெப்படி மெல்லியவாயின?” என, அரக்கன் “நானீராடி யீரம்புலரளவு நிலன்மீது செல்லேன்” எனக் கேட்டுச் சிறிதாறு முன்னே தாங்கிப்போய்ப் பிற கிராக்கத னோர்குளனின் மூழ்கப்புக்குழிப் பார்ப்பானைப் பார்த்து, “யா னித்தகருமஞ் செய்துவருமாறு நீ யடி பெயரற்க, அங்குத்தானே நிற்றி” எனச்சொல்லி, பின்னர் ஸ்நானஞ் செய்தனன். அந்தண னிதைப்பார்த் திவன் மூழ்கிப் புறம் போந்தானாயி னிவன் வயிற்றழலின் மூழ்

“On the birth of a three-eyed daughter, Madhusudhana, King of Madhupuram, sent for the professors in astrology and asked them what was to be done. “Hear thou, independent sovereign” replied they “every one must think well before he speaks. If any body speaks without thinking then he will suffer the same consequences as Chandakarma”.

“What” asked the king “did he say?” And the astrologer spoke:—

“In the forest of Dandaka there lived the chief of rakshasas, one Chandakarma. Once a brahman happened to pass by and the giant got upon his shoulders and walked him on. Finding the giant's feet very soft, the brahman asked him “Sire, O chief of the rakshasa tribe, how have your feet grown so soft?” “After I bathe” replied the demon “I do not walk upon the ground till my feet get dry.” “Then the brahman carried him a short distance when, the giant getting down to bathe in a tank, turned to the brahman and said “till I finish my daily religious rites do not stir out of this place. Stay here alone.” He then went to bathe. Then thought the brahman thus:—“If this giant gets out of the tank after bathing, I cannot fail to fall a prey to the fire of his hunger. There-

காதிரேம். ஆதலா னோடியுய்ய விதுவே நல்லவமயம். நீராடிக் காற்புலருமுன் னிவ னடவானல்லோ வென்று தனக்குட் டெரிந்துகொண்டு விரைந்தோடினான். அது கண்ட வவுணன் யான் வாய்பதறிக் கைக்கெட்டினது வாய்க்கெட்டாம விழப்புற்றேன், கடிதிற் பின்சென்று கவர்வேனெனினுங் கொண்டநோன்பு குறையுறுகின்ற தென்று மறுக்கமுற் றுங்கே நெட்டுயிர்த்து வாளா *நின் றனன். ஆதலா னியாது முய்த்துணரா தியற்றலாகா தெனச் சொல்லிப் பின்னர்ப் பன்னூல்களையு நன்காய்ந்து கடைப்பிடித் திம்முக்கண் ணரிவையைப் பார்க்கவொண் ணா தென்னையோ வெனின், விரூபமக வுளதாயி னதைக் காணலாகாதென்பது நூற்றுணிபாம். மற்று மிஃதான்றோ ரொழுங்கமுமாம்'' என, ஏந்த லம்மொழி யுட்கொண் டக்கன்னிகையை வேற்றுழிவைத் தளித்த பின்னர், அவள் பூத்தமையா னிவண் மணத்திற் கியைபவனுக்குப் பெரும்பொருட்குவை தருவலெனத் தேயந்தோறு மண வோலை போக்கினமையைக் கேட்ட விரந்துண்ணு மண் டையராகிய் வோர்குருடனும் கூனனும் விவாகவிருப்பான் மன்னன்பாற் புக்கனர். அவருள் குருட னரயனை நோக்கி,

---

fore this is the best opportunity for me to fly away for life. He will not walk till his feet get dry after ablution." He therefore ran away quick. Seeing this, the giant thought within himself: "I was too hasty in speaking the truth. And thus suffered a slip before I could take to the lip what I reached with the hand. No doubt if I pursue him I can soon overtake him but then the vow I have made will suffer a stain." So being baffled he heaved a deep sigh and kept himself quiet.

"Therefore" said the astrologer "it will not do well to do anything without duly weighing it in our minds." Then the astrologer closely searched the different Sastras and arrived at this conclusion:—this three-eyed girl cannot be seen, for the Sastras strictly ordain that a monstrous child should not be seen. This moreover is the way of the great and the wise. The king took their advice and brought her up in a separate house. When she attained her puberty, the king sent to the neighbouring countries marriage notices stating that he would bestow upon him who consented to marry his daughter a large dowry. On hearing this two persons, a blindman and a hunchback, who lived in the neighbourhood, by taking alms, advanced to the king with the desire of marrying the girl. The blindman then addressed the

"கன்னிகையை யெற்குத்தரின் கோடும்" என, இறைவ
னிச்சுயம்வரற்கு நங்கன்னிகையைக் கடிபுரிவது தக்க
தென்றுள்ளி, அவனுக்கு மகட்கொடை நேர்ந்து, அங்
ஙனமே கடிமுடித் தளவில்பொருடந்து "நீ கணமு நீட்டி
யாமற் பரதேயம்போதி" என்றனன். அவ்விடை கொண்டு
மூவரும் பரதேயம் புக்கிருப்புழி, அவ ளக்கூனற்கு
வயமா யவனை நோக்கி, "இக்குருட்டுச் சவத்தை நஞ்சிட்
டுக்கொல்லி னுமிடையூறின்றி யின்பநுகர்வேம்" எனக்
கேட்டு, அவன் செத்தபாம் பொன்றைத் தந்தனன். அவ்
வணங் கதையேற்றுக் கண்டித் தடுப்பின்மேல் வேவவைத்
து "பொறியிலியை யித்தசை நிற்குறித்துக் கொணர்ந்
தேன்; இச்சுல்லி யெரித்துக்கொண்டிரு, நான் வேறுகரு
மத்திற் புகுகின்றேன்" என, அக்கண்ணனறை யவ்வாறே
யிளந்தழலா யெரித்துக்கொண் டிருப்புழி யக்கிருட்டின
சருப்ப வாவி கண்ணிற்றாக்கி யவ்விடத்தினுற் கண்ணி
ரோகந் தீர்ந்து முன்போற் கண்டெரிந்தமையா லிவரிரு
வரு மிவன் குருட்டுத்தவியா னகைத்து விளையாட் டயர்
வதைக் கண்டு காலா னெறிகாணும் பண்டைமாட்சிபோல்
வந்து கூனனைப் பற்றி யீர்த்துச் சீற்றத்தாற் றூக்கி யவண்

---

king, "If your majesty's daughter be given in marriage to me, I will accept her." The king thought it proper to confer his daughter in marriage upon him. He accordingly consented to make the gift of his daughter to him and the marriage was duly performed. The king then bestowed on him a good store of wealth and ordered him to leave his country without a moment's delay. In obedience to the king's orders the three persons proceeded to a foreign country and lived there. While there, she fell in love with the humpback, and spoke to him thus: "If this blind fellow be poisoned, then we may enjoy pleasure without inconvenience. The humpback, accordingly handed over to her a dead serpent which she cut and put on fire. She then addressed her husband thus: "I have brought this flesh for you; be kindling the fire and I will look to other matters." The blind man was accordingly kindling the fire when the vapour emanating from the black serpent fell upon his eyes and from the effects of snake-poison his eye-complaint was cured and he regained his sight. Meanwhile these two persons encouraged by his blindness were laughing and playing together. On seeing this, the once-blind man, pretending still to be so, felt his way to them, laid hold of the humpback and in his anger drag-

முகத்தி லெற்றினவளவி லவண் மூன்றாம்விழி மறைந்
திக்கூனன் கூனு நிமிர்ந்தது. ஆதலாற் றெய்வ வொற்
றுமை யிருந்தால் யாவு நல்லவாம்'' என, சக்கிரதரன்
“நல்லது, நீ யுன் கிருகத்துக் கேகுழி வழித்துணையோ
டேகு, ஊர்வழித் தனித்துச் சேறலு மெல்லோரு முறங்
குகையில் விழித்திருக்கையுந் தலையாய பொருளு மின்ப
முந் தனக்கே யுளவாகுக வென்னும் விருப்பமு மொழி
யற்பாலனவென நூலறைகின்றன. இங்ஙன நூனெறிகடவா
வொழுக்கினன் புயங்கத்தினின்று மோர்வேதிய னுய்ந்த
வண்ண முய்வன்'' என, சுவர்ணசித்தியப்ப னவனுய
லெவ்வாறு நிகழ்ந்தது?'' என, சக்கிரி சொல்வானாயினன்.

“நாசிக தேயத்தனாகிய தத்தனென்பவ னன்னையை
நோக்கி, “யானாரியன் கருமத்தா லோரூர்க்குப் போகு
வல் விடை தருதி'' என, அவ்வீன்றாள், “குழந்தாய்!
ஒருவனா யேகற்க'' எனக் கேட்டு, அவன் “தாயே! நெறி
யூறின்றி யிருக்கின்றதே'' என, அவண் மீண்டும் “அப்
பனே! எஃதுளதாயினு நீ நெறித்துணை யின்றிச் சேற

---

ged him and dashed him upon her face. Immediately her odd eye was put out and the humpback was also cured of his deformity.

" Therefore" continued the man of the wheel " if god favours everything will turn good." " Very good, but on your way home take a companion with you. The Sastras say going alone, to be awake when all sleep, the selfish desire to have to oneself all superior wealth and happiness, all these must be avoided. He who does not disobey the dictates of the Sastras will prosper like the brahman who escaped from a serpent".

' How was his escape brought about" asked the gold discoverer, and the man of the wheel thus began his narration :—

" One Datta, a native of Nassik, addressed his mother thus: " I have to go to a village for the performance of brahmanical duties please give me leave ." "Child" "said the mother " do not go alone."

" Mother" replied he " the way is beset with no difficulties."

" My boy" rejoined the mother " however it be, you must not go without a companion on the way." Accordingly she handed,

லாகாது" என்று கூபத்தி லோர்நண்டைப் பற்றி யோர்
கலயத்திற் பெய்துகொடுத்து "இதையேனுந் துணைக்
கொடு போ" என, அவ்வாறே யாய்மொழி மேற்கொண்
டேகுழி, நெறியில் வேனிலால் வேசுற் றோர்தருநீழலிற்
கண்வளரா நிற்குமிடத்து, யாண்டிருந்தோ வவற்றீண்ட
வந்த வோரரா விம்மட்கலயத்திற் பெய்திருப்ப தென்
னென் றதனுட் டலைநீட்டுகையில், அஞ்ஞெண் டிஃதோர்
காரராவென் றுணர்வுற்றுக் கொடுக்கா லிடுக்கிக்கொன்
றது. பின்ன ரந்தணன்விழித் திப்பணியைப்பார்த் திஃ
தெங்ஙன மிறந்த தெனச் சூழ்வுழி, அதன் சென்னியை
யவ்வலவன் கத்திரிக்கக்கண் டித்துணைச்செயலு மிதுவே
புரிந்தது. மாதா தந்த வழித்துணையாற் பிழைத்தேன்,
'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை' என்றது பொய்யா
தென் றந்நண்டைக் கைக்கொடு வில்லம்புக் கன்னைக்கு
வட்டாங்க நிலந்தோய வீழ்ந்து பணிவுதோன்றத் தழு
தழுத்து வாழ்த்தி நிகழ்ந்த செய்திகளை விளம்பி யின்புற்

---

him a vessel with a crab which she caught from a well and said "Take this at least for a companion." In obedience to the mother's command he set out on his journey. On his way, being fatigued by the sun's heat he went to sleep under a shady tree, when a serpent came from somewhere to bite him and put its head into the earthen pot to see what was there in it. Seeing that it was a black serpent the crab crushed it to death. Afterwards the brahman waking from his slumber saw the snake and was considering how it was killed, when he found that the crab had cut the serpent's head. He thus felt sure that it was the crab which did this act. "Thus have I been saved by the companion which my mother gave me. The proverb that there is no temple more worthy than the mother does not fail". So thinking in himself he took the crab and returning home prostrated himself before his mother, blessed her submissively in strong terms and informed her of what had happened and lived hap-

திருந்தனன்" என, பொன்வாய்ப்பினன் "இது தக்கதே யாம். மந்திரம், தீர்த்தம், பெரியோர், சோதிடன், மருத் துவன், குரு வின்னோர்பா லெவ னெவ்வணம் பாவனை புரி வானோ வவ னவ்வணம் பேறு பெறுவான்" என் றிங்ஙன நேமியானைத் தேற்றித் தன்மனைக் கேகினன்.

---

இங்ஙனம் சோமசன்மனென்போன் அரசன் மக்கட குரைத்த பஞ்சதந்திரம் நிறைவேறிற்று.

---

pily. "This is exceedingly good" replied the discoverer of gold "Mystic hym, holy water, the great, the astrologer, the doctor, and priest,—these produce results consistent with the nature of the belief one has in them."

Thus cheering up the man of the wheel, the discoverer of gold went home.

Thus ends the five principles connected with the art of government which Somasanma related in the form of five fables to the princes.

# பஞ்சதந்திரம்.

## அரும்பதவிளக்கம்.

### 1.

பஞ்சதந்திரம்—பஞ்ச - ஐந்து, தந்திரம் - உபாயம்; ஐந்துவித உபாயங்களை யறிவிக்குங் கதைகள்.

அசம்பிரேக்ஷிய காரித்துவம்—அசம்பிரேக்ஷிய - நன்றாய் ஆராயாது, காரித்துவம் — செய்யுந்தன்மை; அதாவது ஆராயாது செய்தல். இங்கு ஆராயாது செய்வதினால் நேரிடும் கெடுதிகளைத் தெரிவிக்குங் கதைகள்.

சோமசருமன் — சோமன் - சந்திரன், சிவனுமாம்; இங்கு ஒருவர் பெயர்; சரும - [சர்ம] பெயர்களோடு சாதியைக் குறிக்கும் பொருட்டு சேர்க்கப்படுவதோர் சொல்; இது பிராமணருக்கு உரியது; சோமனென்னும் பிராமணன் என்றபடி. அரசருக்கு வர்ம என்பதும், வைசியருக்கு குப்த என்பதும், சூத்திரருக்கு தாஸ என்பதும் உரியசொற்கள். இவை அவரவர் பெயரோடு சேர்க்கப்படும்.

அரையன்— அரசன்; ஆரியமொழித் திரிபு.

தீச்செயல்கள்—கெட்ட செய்கைகள்.

கண்ணுற்று—பார்த்து.

செவியுற்று—கேட்டு.

அறிவுடையோன்—புத்திமான்.

புரியல்—செய்தல், தொழிற்பெயர்; புரிதல் என்றும் வரும்.

அங்ஙனம்—அப்படி.

வெள்ளறிவன் - வெள் + அறிவன் = வெண்மையான அறிவுள்ளவன், அதாவது அறிவில்லாதவன் என்றபடி.

பெயரிய—பெயரையுடைய

மயிர்வினைஞன் — மயிர் + வினைஞன் = மயிரில் வேலை செய்பவன்; அம்பட்டன் என்றபடி. வினைஞன் என்பதில், ஞ் - பெயரிடைநிலை.

மணிபத்திரன்—ஒருவன்பெயர்.

கருமம்—செய்கை.

தேராமல்—ஆராயாமல் யோசியாமல்.

இடர்—துன்பம்.

குமரர்—வாலிபர்கள், இராஜகுமாரர்களென்றபடி.

இயம்புதி—சொல்; ஏவல்வினைமுற்று. தி-விகுதி.

ஆசிரியன் — ஆசாரியன் என்னும் வடமொழித்திரிபு, உபாத்தியாயன்.

அவாசி—தெற்கு.

கண்ணனாய—[கண்-இடம்] இடத்திலுள்ள.

பைடணபுரி—ஓர் பட்டணத்தின் பெயர். Patna.

வாசி-வசிப்பவன், குடியிருப்பவன்.

ஒழுகலான்—நடத்தலினாலே.

நல்குரவு—தரித்திரம், வறுமை.

பரிபவம்—தாழ்வு, துன்பம்.

வறுமை—தரித்திரம்.

தயை—பிறர்மேல் அன்பு.

சாந்தி—அமைவு, கோபமின்மை.

விபரீதம்—வேறுபாடு, மாறு.

### 2.

கணந்தோறும்—எப்போதும், பிரதி க்ஷணப்பொழுதும். [கணம்-க்ஷணமென்னும் ஆரியமொழித் திரிபு. க்ஷணம்-நொடிநேரம்.]

ஆகுலித்து — துன்புற்று, மனக் கலக்கமுற்று.

பாதுகாப்பு—சவரக்ஷணை.

ஏக்கம் - கவலை.

மழுக்கம் — மங்குதல், கூர்மை கெடுதல்.

இடுகாடு—இடு+காடு=பிணங்களை வைக்கப்பட்ட இடம், அதாவது புதைக்கிற இடம்; சுடலை, மயானம்.
எண்ணிக்கை—மதிப்பு.
கவற்சி—விசாரம், துன்பம்; தொழிற்பெயர், சி - தொழிற்பெயர் விகுதி. கவலை என்பதும் தொழிற்பெயரே, ஐ - விகுதி.
மிடிமை } வறுமை; மை - பண்புப்
மிடி } பெயர் விகுதி.
பட்டினி—உண்ணாமலிருக்கை.
துறப்பல்—விடுவேன்; அல் - தன்மை யொருமை விகுதி.
உயிர் துறப்பல்—இறப்பேன்.
கண்வளர்தல் - தூங்குதல்.
பதுமநிதி—குபேரனுடைய ஒன்பதுவகைச் செல்வத்தில் ஒன்று. இங்கு ஆகுபெயராய் அந் நிதிக்குரியவனாகிய குபேரனுக்கு வந்தது.
நீத்தோன் — துறவி, சந்நியாசி; இல்வாழ்க்கையை விட்டவனென்றபடி.
படிவம்—வடிவம், உரு.
கனவு—சொப்பனம்.
கனவிலடைந்து—கனவிற்றோன்றி.
ஒழுக்கம்—நன்னடக்கை.
கட்புலனாக— கண்+புலன்+ஆக= கண்ணுக்குத் தெரியும்படி.
தண்டம்—தடி.
புடைத்தல்—அடித்தல்.
குன்றா—குறையாத, ஈறுகெட்ட பெயரெச்சம்.
குவை—தொகுதி, குவியல்.
துயிலொழிந்து—நித்திரைநீங்கி.
பொருட்சிந்தை—பொருளாசை.
கருதிக்கொண்டு—சிந்தித்துக் கொண்டு.
கண்டாங்கு— (கண்ட + ஆங்கு) கண்டபடி.
துணிவுற்று — துணிந்து, நிச்சயித்து.

பொதிந்து—நிறைத்து.
பொன்மயம்—பொன்னின் சொரூபம். [மயம் - தன்மை]
ஒளிவிட்டு—பிரகாசித்து.
அருத்தம்—பொருள்.
அற்புதம் — ஆச்சரியம், அதிசயம்.
புலப்படுத்தற்க—வெளியிடாதே.

## 3.

வற்புறுத்தி—உறுதிபடச் சொல்லி.
மேற்கொண்டு—ஒப்புக்கொண்டு
அறிவின் சிறுமை—அறிவீனம், புத்திக்குறைவு.
ஆராய்வான் ஆயினன் — யோசித்தான்.
வைகறை—விடியற்காலம்.
துறவி—சந்நியாசி.
அன்னோன் — அந்தன்மையுடையோன், துறவியென்றபடி.
மண்டை—தலை.
சுடர்விரி—பிரகாசமுள்ள.
பசும்பொன் — நல்ல மஞ்சணிறமுடைய பொன்.
தேறி—நிச்சயித்துக்கொண்டு.
மற்றைநாள்—மறுநாள்.
ஐ - சாரியை.
குழு—கூட்டம்.
கரையேற்ற—கரையேற்றி, மோக்ஷமடையும்படி செய்து.
இல்லம்—இல்-வீடு, அம்-சாரியை.
குடில்—குடிசை.
தேவரீர்—சிறப்புடையதாங்கள்
திருக்கூட்டம் — பெருமையுள்ள சிஷிய வர்க்கங்கள்; இது உபசாரவாக்கியம்.
மாசு—குற்றம்.
மாசு தீர்ப்போன்—அழுக்கு நீக்குவோன், அம்பட்டனென்றபடி.
அந்தணர்—பிராமணர்.
வாராநிற்க—வந்துகொண்டிருக்க.
இற்றை — இன்று, ஐகாரம் சாரியை, னகரம் றகரமாகத் திரிந்தது.
அக்காலை—அப்போது.

காவிதன்—அம்பட்டன்.
வேண்டுகை—விரும்பியழைத்தல், பிரார்த்தனை.
எட்டுணை — [ எள் + துணை ] எள்ளளவு.
மறுமல்—மறுக்காமல், தட்டாமல்,
திருவுளம்—[திரு + உள்ளம்] நல்ல மனது, அதாவது கிருபை.
திருவுளம்வைப்பீர்— கிருபைசெய்வீர்.
பணிவு—வணக்கம்.
கரம்—கை.
கபாலம்—மண்டை.
சாத்தல்—அடித்தல்.
களைத்து—மூர்ச்சித்து.
அடியற்றபனை—வேரற்று வீழ்ந்த பனைமரம்.
தபசி — தவஞ்செய்வோன், சந்நியாசி.
குழாம்—கூட்டம்.
மெய்ம்மறந்து—உணர்வின்றி.

## 4.

கலிபலி—கூச்சல்.
காலாள்கள்—சேவகர்கள்.
மஞ்சிகன் } —அம்பட்டன்.
மங்கலன் }
உறுக்கி—பயமுறுத்தி, கோபித்து.
அகம்—வீடு.
வணிகன்—வாணிகம் செய்பவன், வர்த்தகன்.
விளித்து—அழைப்பித்து.
பராமரிசியாமல்—பகுத்தறியாமல், ஆராயாமல்.
இயற்றின—செய்த.
மூங்கா—கீரிப்பிள்ளை.
ஆகுலித்தாள்—வருந்தினாள்.
அருள்வாய் — அன்புடன் சொல்வாய்
தேவனுமவேதியன்—தேவன் என்னும் பெயரையுடைய பிராமணன்.
மனை—மனைவி, பெண்சாதி.
குழவி } —பிள்ளை.
மதலை }
உதகம்—தண்ணீர்.

## 5.

கான்முளை—[கால்-வமிசம், முளை-தோன்றியது] ஒருகுடும்பத்தில் உற்பத்தியானவன், பிள்ளை என்றபடி.
வகுத்து—விசிதமாகச் சொல்லி.
தடாககருமம்—[தடாகம் - குளம், கருமம் - செய்கை] குளத்துக்குச்சென்று செய்யுங்காரியம், அதாவது மலோபாதை சலோபாதை முதலியவைகளுக்குப் போய்க் கால் கழுவி வருதல். இது இடக்கரடக்கற்சொல்.
வயந்தன் — வசந்தன், அக்கருமங் களைச் செய்யும்படி கட்டாயப் பட்டவனாய்.
கிருஷ்ணசருப்பம் — கரும்பாம்பு. [கிருஷ்ணம் - கறுப்புநிறம்.]
பிலம்—புற்று, வளை.
புறம்போந்து—வெளியேவந்து.
கண்ணுற்ற—பார்த்த.
நகம்—கிரி.
அக்கணம்—அந்நொடிப்பொழுதே, அப்போது.
பார்ப்பினி—பிராமணஸ்திரீ.
ஆற்றல்—வல்லமை.
செந்நீர்—[செம் + நீர்] சிவந்தசலம், அதாவது இரத்தம், குருதி.
வதனம்—முகம்.
மடித்தது—கொன்றது.
துள்ளித்துள்ளி—பதபதைத்து.
துணுக்கு—பயம்.
சிதைவுறும்படி—உடையும்படி.
அந்தோ—அவலக்குறிப்புச் சொல்.
சோகமுற்று—துக்கமடைந்து.
மகவு—குழந்தை.
கதறி—கூச்சலிட்டு.
கலுழ்கின்றனை—அழுகின்றாய்.
பேதாய்—அறிவில்லாதவளே.
பேரவா — [பேர் + அவா] பேராசை.

## 6.

பொருளின்மை—வறுமை.
இன்மையாக்கும்—இல்லாமற்செய்யும்.
நாடி—தேடி.
வனம்—காடு.
கடைப்பிடித்து — உறுதி செய்துகொண்டு.
அணித்து—அருகு, சமீபம்.
பைரவாநந்தி—[பைரவ-சிவனிடத்தில், ஆநந்தி - களிப்புற்றவன்] சிவனைத் தியானித்தலே ஓர் ஆநந்தமாகவுடையவன், சிவயோகி. இது காரணப்பெயர்.
வழிபாடு—வணக்கச்செயல்கள்.
இரங்கி—மனநெகிழ்ந்து.
விழைவு—விருப்பு.

## 7.

பரபரப்பு—தீவிரமுயற்சி.
கடைப்பிடி—உறுதிப்பாடு.
சித்தி—கைகூடுதல், அதாவது கைகூடுவதற் கேதுவான மந்திரம்.
சிந்தித்து—மந்திரித்து.
இமயகிரி — இமயமலே, இந்துதேசத்தின் வடக்கெல்லேயாயுள்ள ஓர்மலேத்தொடர். [இமம்-பனி] இம்மலே அதிக உயரமுள்ளதால் எப்போதும் பனி தங்கியிருக்கும்.
ஆணே—கட்டளே.
சிறிதாறு—[சிறிது+ஆறு] கொஞ்சதூரம்.
வர்த்தி—திரிச்சீலே.
தொட்டு—தோண்டி. இதில் பகுதி விகாரப்பட்டு இறந்தகாலங் காட்டியது.
தாமிரக்கனி—செப்புச்சுரங்கம்.
ஏனேயோர்—மற்றவர்.
அவா—ஆசை.
ஆற்றலளவு—சக்திக்கியன்றவளவு
கூப்பாடு—கூப்பிடுதூரம்.
சேய்மை—தூரம்.
சிரத்திரி—தலேமேலிருந்தவர்த்தி.
வெண்பொன்—வெள்ளி.

## 8.

எஞ்சிய—மிகுந்த.
பொற்றிரள் — [பொன் + திரள்] பொற்குவை.
சொன்னம்—சுவர்ணம் என்னுமாரியமொழித்திரிபு, பொன்.
செல்வல்—பேவேன், அல் - தன்மையொருமைவிகுதி.
அவண்—அவ்விடம்.
அகல்வுழி—போகையில்.
நீர்வேட்கை—நீர்விருப்பு, தாகம்.
சித்திநெறி—கைகூடும்வழி.
உழல்கையில்—அலேந்துதிரிகையில்
மனித்தன் — மனிதன், தகரம் விரித்தல்விகாரம்.
மாற்றம்—சொல்
வினைய—கேட்ட; வினவிய என்பதின் மரூஉ.
நேமி, ஆழி —சக்கரம்.
மத்தகம்—தலே.
முன்சக்கிரி — முன்னே சக்கிரமுடைத்தா யிருந்தவன்.
இதுகாறும்—இதுவரைக்கும்.

## 9.

இக்காலே—இப்போது.
உசாவுவன்—கேட்பான்.
குபேரன்—நிதிக்கோன், பலசெல்வங்களுக்குமுரிய தேவதை.
நெட்டுயிர்ப்பு —[நெடு+உயிர்ப்பு] பெருமூச்சு.
பண்டைய—பழைய
நேமித்தலேயன் — சக்கரத்தைத் தலேமேலுடையவன்.
வரையறை—அளவு.
வல்சி—உண்டி, சோறு.
நுகரவேண்டும்—அனுபவிக்க வேண்டும்.
நிதிக்கோன் — செல்வங்களுக் கரசன், குபேரன்.
அச்சு—அச்சம், பயம். அஞ்சு என்னும் முதனிலே திரிந்த தொழிற்பெயர்.
மெய்—உடம்பு.

ஆற்றப்பெருத — சகிக்கக்கூடாத, பொறுக்க முடியாத.
வேதனை—வருத்தம்.

## 10.

சுவர்ணசித்தி—பொன்பெற்றவன்.
சொல்லியாங்கு — [சொல்லிய + ஆங்கு] சொன்னபடி.
வெள்ளறிவோர்—அறிவில்லாதவர்.
சக்கரதரன், சக்கிரி — சக்கரத்தைத் தரித்தவன்.
இறுக்கின்றனன்—சொல்லுகிறான்.
மூதூர்—[முது+ஊர்] பழய ஊர்.
ஒருசாலை மாணுக்கர் — சகபாடிகள், உடன்படிப்போர்.
கல்விபயில்கையில்—கல்வி கற்கும் போது.
கைவர—கைகூடிவர, சித்திக்க.
ஈட்டுதல்—சம்பாதித்தல்.
கூறு—பாகம்.
இங்ஙொடி—இப்போது.
ஏகற்பாலன்—போகக்கடவன்.

## 11.

வேற்றுத்தேயம்—மறுதேசம்.
அடவி—காடு.
உயிர்நீத்த—செத்த.
அரிமா— [அரி + மா] சிங்கமாகிய மிருகம்.
சீவிப்பிப்பின் — உயிர்வரச் செய்தால், பிழைக்கச்செய்தால்.
பரீக்கை—சோதனை; பரீக்ஷை என்னு மாரியமொழித் திரிபு.
ஒழியற்பாலது — நீங்கிவிடத்தக்கது.
எறிந்து—தள்ளிவிட்டு.
செருக்கு—கர்வம்.
சதுரன்—அறிவுள்ளவன்.
சேய்மை யாகற்பாலன் — தூரமாயிருக்கக்கடவன்.
மறவிலங்கு—கொடிய மிருகம்.
ஆவி—உயிர்.

## 12.

அறைதி—சொல்லு.
அறிவாயிரத்தன்—ஆயிரம் அறிவுள்ளவன்.
நூறறிவன்—நூறு அறிவுள்ளவன்.
மீனம்—மீன். அம் - சாரியை.
ஓரறிவன்—ஒரே அறிவுடையவன்.
திவசம்—நாள்.
வலையன்—செம்படவன், மீன்பிடிப்போன்.
இறந்தமை—போயினது.
மண்டூகம்—தவளை.

## 13.

குதுகுலித்து—களிப்படைந்து.
இவ்வணம்—[இ+வண்ணம்] இத்தப்படி.
நீள் செவியன் — நீண்ட காதையுடையது, அதாவது கழுதை.
நன்மதி — நல்லபுத்தி.
இசை—இராகம்.
பேரிடர்—பெருந்துன்பம்.
நெடுஞ்செவியல் — நீண்டகாதையுடையது, கழுதை.
சுமதி — [சு+மதி] = நல்லபுத்தியுள்ளவன்.
பைங்கூழ்—பசும்பயிர்.
விலாப்புடைக்க—பக்கம்வீங்க.
தேக்கெறிந்து—ஏப்பமிட்டு.
கழிகின்று—போகவில்லை.
கானம் செய்வேன்—பாடுவேன்.
உழுநர், உழவர் —பயிரிடுவோர்.
துயிலொழிந்து — நித்திரைநீங்கி, விழித்துக்கொண்டு.
மௌனமாயிரு—பேசாமலிரு.

## 14.

தந்துவாயன்—நெய்பவன், [தந்து-நூல்], சாலியன்.
வத்திரம்—துணி, சீரை.
ஊதியம்—இலாபம்.
தறி—சீரைநெய்யுங்கருவி.
புக்கானுக—புகுந்து, போய்.
வாகை—ஓர்வகை மரம்.
யட்சன்—இராக்கதன்.

சாலியன்—துணிநெய்பவன்.
[பெண்பால் - சாலிச்சி.]
உசாவி—கேட்டு.
நெறி—வழி.
மித்திரன்—சிநேகன்.
அமைச்சு—மந்திரி.

**15.**

வரம்பில்—அளவில்லாத.
இடையூறு—விக்கினம், தடை.
வதனம்—முகம்.
சீனா—துணி.
இல்வாழ்க்கை—சமுசாரம்.
செவ்வன்—நன்றாய்.
ஈரத்தம்—[இரு + அஸ்தம்] இரண்டுகைகள்.
வினயவாறு—கேட்டபடி.
விபரீதம்—அதிசயம், வேறுபாடு.
கிருபணன் — உலுத்தன், இங்கு உலோபகுணமுடைய ஒருவன் பேர்.
தவசம்—தானியம்.
சிக்கம்—உறி.

**16.**

சிறுவிலைக்காலம் — க்ஷாமம், பஞ்சம், கருப்பு.
காராடு—வெள்ளாடு.
பல்கிய—பெருகிய.
வாம்பரி—தாவுகின்ற குதிரை.
பார்ப்பனக்கன்னிகை—பிராமணப் பெண்.
நாடி—தேடி.
அகடு - கருப்பம்.
பணியூற்றம்— [பணி + ஊற்றம்] வேலையின் மிகுதி, அதாவது அதிகவேலை.
கற்பனை - இல்லாததை யுள்ளதாக பாவனைசெய்தல்.
பற்றுள்ளம் - ஆசையுள்ளமனது.
கிருபணத்துவம் - உலோபத்தனம்.

**17.**

வலிமுகம்—குரங்கு.
அயர்வது—செய்வது.
வேட்கை—விருப்பம்.
மடையன் — சமயல் செய்வோன்.
குற்றேவல்—சிறுதொழில்.
மூண்டமை—உண்டானது.
சதுரப்பாடு—திறமை.
மூசு, வானரம் —குரங்கு.
கலாம்—கலகம்.
காட்டகம்—காட்டிடம்.
மூத்தமையால்—கிழத் தன்மையால்
பிதற்றுகிறாய்—உளறுகிறாய்.
குழூஇ—கூடி.
நலம்—இன்பம், சௌக்கியம்.
தழை—இலை.
கரத்தண்டம்—கைத்தடி.
ஓச்சி—ஓங்கி.
எரிகொள்ளி — கொள்ளிக்கட்டை.
கனல்—நெருப்பு.
வைத்தூறு—வைக்கோற்போர்.

**18.**

அசுவம்—குதிரை.
வேக்காடு—வெந்தபுண்.
ஆமாத்திரர்—வைத்தியர்.
குரக்கு — குரங்கு; மெல்லொற்று வல்லொற்றாயிற்று.
அண்ணல்—அரசன்.
ஆனனம்—முகம்
ஏறிட்டு—நோக்கி.
பண்டிதர்—வைத்தியர்.
முதுகடுவன்—கிழக்குரங்கு.
பழிவாங்குவேன் — பிரதிகெடுதி செய்வேன்.
உறுதிசெய்து—நிச்சயித்து.
பொலிவு—அழகு.
சரசு—குளம்.
நடப்பு—போக்குவரத்து.
கணம்—பேய்.
நாளம்—தொளையுள்ள தண்டு.
பிரசன்னம்—எதிரே தோன்றல்.
மணிவடம்—இரத்தினமாலை.
களம்—கழுத்து.
உதகம்—நீர்.

**19.**

அரதனவடம்—இரத்தினமாலை.
மலர்த்தடம்—பூக்களுள்ள குளம்.

தோன்றல்—அரசன்.
நன்கு—நல்லது.
சாகாமிருகம்— [சாகா - மரக்கிளை] மரக்கிளையில் வசிக்கு மிருகம், குரங்கு.
தடத்தகம்—குளத்தில்.
பதாதிகள்—காலால்கள்
வாவி—குளம்.
பாரிடம்—பேய்.
சேர—ஒருமிக்க.
பிலவங்கம்—குரங்கு.

## 20.

வானுற—ஆகாய மளாவ.
உய்வித்தேன் — பிழைக்கச்செய் தேன்.
இரங்கி—மனம்வருந்தி.
அத்தியாசை—[அதி+ஆசை] மிக்க ஆசை, பேரவா.
முயலும்—செய்யும்.
உள்ளினவன்—கருதினவன்.
கோயில்—[கோ+இல்] அரசனது வீடு, அரண்மனை.
குறைவுற்ற — [குறைவு + உற்ற] கெடுதிநேரிட்ட.
நட்டோர்—சிநேகித்தவர்.
பயன்படுகிறார்கள்—உதவுகிறார்கள்
எற்றுறந்து—[என்+துறந்து] என்னைவிட்டு.
அகலுதி—போகிறாய்.
மதுரைப்பதி—மதுராபுரி, மதுரை என்னும் வடக்கிலுள்ள ஓர் பட்டணம்.
பெயரிய—பெயரையுடைய
கட்டழகி—பேரழகையுடையவள்; மனைவி என்றபடி.
அற்றம்—சமயம்.
சின்னாள்—[சில்+நாள்] சிலநாள்.
திரிவுற்று—திரிந்து.
உபாயம்—சூழ்ச்சி.

## 21.

பதிவிருக்க — [பதிவு + இருக்க] ஒளிந்திருக்க.
கன்னிகை—பெண்.
அடுத்துநின்ற—அருகிலிருந்த.
தோழி—சகி, பணிசெய்பவள்.
உயிர்ப்பாங்கி—உயிருக்குச் சமானமான தோழி.
எல்லுமெல்லியும்—இரவும்பகலும்
செவிபுக்க—கேட்ட.
கலிங்கம்—குதிரை.
பரிமா—[பரி+மா] குதிரையாகிய மிருகம்,இருபெயரொட்டுப்பண்புத்தொகை.
ஏனைய—மற்றவைகள்.
கலினம்—கடிவாளம்.
சம்மட்டி—கசை.
இருந்திரமம்—சூது.
தொன்மரம் — [பழையமரம்] ஆலமரம்.
ஈர்த்து—இழுத்து.
விளாசல்—அடி.

## 22.

இரிகின்றனை—ஓடுகின்றனை.
சோரன்—திருடன்.
வெருண்டு—பயந்து.
கீசகம்—குரங்கு.
வாலம்—வால். அம் - சாரியை.
கவி—குரங்கு.
எதிர்ப்பின் — விரோதித்தால்.
சென்மோ—சென்.
இலங்கேசன்— [இலங்க + ஈசன்] இலங்கைக்கதிபதி.
திரிகூடாசலம்—திரிகூடமலை, திரிகோணமலை, முக்கோணமலை.
அவமானம்—மானக்கேடு.
தலைதாழ்ப்பித்தது—தலையிறங்கச் செய்தது.
விதிவலி—ஊழின்வலி.
ஒன்றி—ஒத்து.
சிதடன்—குருடன்.

## 23.

தோற்றினமையால் — பிறந்தமையால்.
கூய் — கூவி என்பதின்திரிபு ; அழைப்பித்து.
சார்வபௌமன்—சக்கிரவர்த்தி.

சண்டகருமன் — [அதிவிரைவாகச் செய்பவன் [இத்திறமுடைய ஓர் அரக்கன் பெயர்.
தண்டகாரண்ணியம்—[தண்டக+அரண்ணியம்] தண்டக ராசன் ஆளுகைக் குட்பட்டிருந்த ஓர் காடு.
சஞ்சரிப்போன் — திரிபவன்.
வேதியன் — பிராமணன். வேதத்தை யோதுவதற்குரியவன் என்பது பொருள்.
நீராடி — நீரில்முழுகி; ஸ்நானஞ் செய்து.
புலராளவும் —உலருகிறவரையில்.
நிலன்—நிலம், பூமி; னகரப்போலி.
நித்தகருமம் — பிரதிதினஞ் செய்யுங் கிரியைகள், அதாவது ஸ்தானம், பூசை முதலியன.
நிற்றி—நில், இரு.
வயிற்றழல் — வயற்றின் நெருப்பு, உதராக்கினி, பசி.

## 24.

அமயம்—தருணம்
அவுணன்—அரக்கன்.
இழப்புற்றேன்—இழந்தேன்.
கடிதில்—விரைவில்.
மறுக்கம்—வருத்தம்.
வாளா —வீணுக.
உய்த்துணராது—ஆராய்ந்து அறியாமல்.
இயற்றல்—செய்தல்.
அரிவை—பெண்.
விருபம் — உருவப்பழுது, விகாரரூபம்.
நூற்றணிபு—சாஸ்திரக்கொள்கை
ஏந்தல்—அரசன்.
வேற்றுழி — [வேறு+உழி] வேறிடம்.
பூத்தமையால்— திரண்டமையால்
மண்டையர்—ஓடுடையவர்.

## 25.

கோடும்—கொள்ளுதும்.
கடி—கலியாணம்.
பரதேயம்—வேறுதேயம்.
வயமாய்—வசமாகி
சவத்தை—பிணத்தை; பிணத்துக்கொப்பாய் ஒரு பிரயோசனமுமில்லாதவனே.
நஞ்சிட்டு—விஷங்கொடுத்து.
நுகர்வேம்—அனுபவிப்போம்.
பொறியிலியை — பொறியில்லாதவன், இங்கு கண்ணறிவில்லாதவன், குருடன்.
தசை—மாமிசம், கறி.
கண்ணறை—கண்ணற்றவன், குருடன்.
இளந்தழல்—சிறுதீ.
இருட்டினை சருப்பம்—கரும்பாம்பு
கண்ணிரோகம்—கண்ணோய்.
பண்டைமாட்சி—பழயதன்மை
சீற்றம்—கோபம்.

## 26.

புயங்கம்—பாம்பு.
உயல்—உய்வு, பிழைப்பு.
ஆரியன்—பிராமணன், குரு.
நெறித்துணை—வழித்துணை.
சேறல்—செல்லுதல், போதல்.

## 27.

கூபம்—கிணறு.
ஞெண்டு } —நண்டு.
அலவன் }
ஆய்—தாய்.
ஏகுழி— [ஏகு+உழி] போகையில்
வேனில்—வெய்யில்.
வேசுற்று—இளைப்படைந்து.
பணி—பாம்பு.
சூழ்வுழி—யோசிக்குமிடத்து.
அன்னை—தாய்.
அட்டாங்கம் — எட்டுறுப்புகள், அவையாவன, சென்னி-1, செவி-2, கண் - 2, கை-2, மார்பு - 1. ஆக 8.
தழுதழுத்து—வாய்குளறி.

## 28.

பாவனை—எண்ணம்.